# எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் இருங்கள். நாள் முழுவதும் சுறுசுறுப்பாக இயங்குவதற்கான புத்துணர்ச்சிக்கு

# புதிய கால்கேட் லோர்னே டால்க்

புதிய கால்கேட் லோர்னே டால்க்கின் புதுப்பிக்கும் நறுமணம் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது....நாள் முழுவதும் அந்தத் துடியான சுறுசுறுப்பைத் தருகிறது. இளமைத் துடிப்பும், சுறுசுறுப்பும், விளையாட்டுகளில் பிரியமுள்ளவர்கள் குறிப்பாக கால்கேட் லோர்னே டால்க் வியர்வையைத் துரிதமாக கிரகித்துக்கொண்டு தாங்கள், நாள் முழுவதும் உற்சாகமாக இருக்க உதவுவதை நன்கு அறிவார்கள்!

இது சிக்கனமானதும்கூட! உங்கள் குடும்பத்தினருக்கு கால்கேட் லோர்னே டால்க்கை வாங்குங்கள்.—அது சுறுசுறுப்பான நாகரீக மக்களுக்கேற்ற புதியதொரு பரவசமூட்டும் நறுமணம் கொண்டது!








# கல்கி

## நினைவுத் திரையில்

"விலங்கோன் வினைமுற்றுக் குற்றியலுகரம் எத்தனையாவது அட்டாம்சத்தில் பிறந்து எந்தெந்த நகரங்களின் வழியாக ஓடி விசை ஒன்றுக்கு மூன்று அணா நாலு பென்ஸ் விதம் கி. பி. எத்தனையாவது வருஷம் மரணமடைந்தது?" என்று உபாத்தியாயர் கேள்வி கேட்பதாகப் பையனுடைய குழம்பிப் போன மூளையில் தோன்றுகிறது. பாவம்! பையன் என்ன பதிலைச் சொல்லுவான்?

"இந்தச் செந்தமிழ் நாட்டிலே பிறப்பதற்கு நமது குழந்தைகள் என்ன பாவம் செய்தன?" என்று தோன்றுமாறு நமது பள்ளிக்கூடங்களின் பாட திட்டமும் பாடப் புத்தகங்களும் அமைந்திருக்கின்றன. கல்வி என்ற பெயரால் இத்தகைய சித்திரவதையை நிறுத்துவதற்குக் குழந்தைகளிடம் ஈவிரக்கம் உள்ளவர்கள் எல்லாரும் பிரயத்தனம் செய்ய வேண்டும்.

- ரா. கி.

கல்கி ஜூலை 21, 1946

பராபவ ஐப்பசி 7 ❊ அக். 23







3




இடது சாரி
இன்னும் சற்று இடது...
இன்னும் கூட இடது...
காங்கிரஸ்
RK

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 12



# ஸ்ரீமதி எம். எஸ்.

கர்நாடக சங்கீத வரலாற்றில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களைப் போல் கீர்த்தி பெற்றவர்கள் வெகு அருமை. சாஸ்திரத்துக்கும் சம்பிரதாயத்துக்கும் ஒவ்வ நாதக் கலையை அப்யசிக்கும்போதே பொதுமக்கள் அனைவரும் ஆர்வமுடன் விரும்பிக் கேட்டு ரசித்து மகிழுமாறு இசையை அளிப்பதில் எம். எஸ். இணையற்றவர். இறைவனளித்த இன்குரலை, இறைவனின் பிரசாதம் என்றுணர்ந்து சுயமுயற்சியில் காத்து வரும் எம். எஸ்ஸின் கானத்தைச் சாரீர மாதுரியத்துக்காகவே நாடுபவர் எண்ணிறந்தவர்கள்; இசை மரபை அவர் பேணி வளர்ப்பதை உணர்ந்து ரசிக்கும் 'விஷயக்ஞர்'கள் பல்லாயிரவர்; சாகித்தியச் சிறப்பின் ஓரம்சமாகிய தெளிவான உச்சாரணத்துக்காக அவரது இசையை அநுபவிக்கும் படிப்பாளிகள் பலப்பலர்; எல்லாவற்றுக்கும் மேலாகப் பக்தி பாவத்தை எம். எஸ்ஸின் இசையில்தான் காண முடிகிறது என்று ஆனந்திக்கும் அன்பர்கள் அனந்தம்.

கர்நாடக சங்கீத தீபத்தைத் தமிழகத்தின் லட்சோப லட்சம் வீடுகளில் ஏற்றிவைத்த பெருமை எம். எஸ். அவர்களுக்கு உரியது. அதோடு கர்நாடக இசையை வட இந்தியா முழுவதிலும் பிரபலமுறச் செய்வதில் நிகரில்லாத் தொண்டு புரிந்திருப்பவர் அவர். அதே போதில் ஹிந்துஸ்தானி பஜன்களையும் தென்னகத்தில் பரப்பியிருக்கிறார். சுருங்கச் சொன்னால் இசைக் கலைக்கு மட்டுமின்றித் தேசத்தின் ஐக்கிய உணர்வுக்கும் கலைமூலம் பணி புரிந்து வருகிறார்.

இசை வழியே ஒற்றுமைப்படுத்தும் அவரது அருஞ்சேவை கடந்த சில ஆண்டுகளாகப் பாரதத்துக்கும் அப்பால் தனது எல்லையை விஸ்தரித்துக் கொண்டுள்ளது. 'கடாரம் கொண்டான்', 'கங்கை கொண்டான்' என்று பண்டைய சோழ மன்னர்களை அழைப்பது போல், 'வடநாடு முழுவதும் கொண்ட' ஸ்ரீமதி எம். எஸ். 1963ல் எடின்பரோ கலை விழாவில் கலந்து கொண்ட பின், 'உலகம் கொள்ளும்' இசைக் கலைஞராகவே பரிணமித்து வருகிறார்.

இப்போது இப்பெருமைக்கு மகுடாபிஷேகம் நடக்கவிருக்கிறது! இன்று இவ்வுலகம் முழுவதிலுமுள்ள மக்கட் குலத்துக்குப் பிரதிநிதித்துவம் தாங்குவதில் முதற் பெரும் ஸ்தாபனமாகிய ஐக்கிய நாடுகள் சபையில் இம்மாதம் 23-ஆம் தேதியன்று ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் இசைக் கச்சேரி வழங்குகிறார். அகில உலக நிறுவனத்தில், சர்வதேசங்களையும் சேர்ந்த பிரதிநிதிகளின் முன்னிலையில், கானம் வழங்குவதைவிடப் பெரிய புகழ் ஏதுவுண்டு?

இந்தப் புகழ் எம். எஸ். ஒருவருக்குத் தான் உரியதா? 'பாட்டுவித்தால் யாரொருவர் பாடாதாரே?' என்றபடி அவரைப் 'பாட்டுவிக்கும்' ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கும் இப்புகழ் உரியது. எம். எஸ்.ஸின் இசையைச் சொந்தமாக்கிக் கொண்டுள்ள கோடானு கோடி பெரு மக்களுக்கும் இப்புகழ் உரியது. ஏன், நமது சங்கீதத்துக்கே உரியது இப்புகழ்.

அக்டோபர் 23ந் தேதி என்பது தேவியின் வெற்றித் திருநாளான விஜயதசமியாக வாய்த்திருப்பதற்குப் பொருள் உண்டு. எம். எஸ். அவர்களின் தனி வாழ்வில் மட்டுமின்றி நமது சங்கீத சரித்திரத்திலேயே அது ஒரு பொன்னுளாகும்.

பாரதத் தாயின் மணிக் கொடி பட்டொளி வீசிப் பறப்பது பற்றிப் பாடினார் பாரதி. பாரதத் தாய் கலைத் தெய்வமாக விளங்கும்போது அவளது கொடி அரசியல் கொடியாக இன்றி, கலைக் கொடியாக மிளிரும். அக்கொடி அக்டோபர் 23ந் தேதியன்று உலக மகா ஸ்தாபனத்தின் உச்சியில் பாட்டொளி வீசிப் பறக்கப் போகிறது! துவஜாரோகணம் செய்யும் பாக்கியவதியைப் பாரத மக்கள் அனைவரும் இதயபூர்வமாக வாழ்த்துகிறோம். பண் பாடியே பாரதத்தின் பண்பாட்டுத் தூதுவராக உலக அரங்குக்குச் செல்லும் இசைச் செல்விக்குத் திருவருள் துணை நிற்கும்.

வாழ்க எம். எஸ்; வாழ்க அவரோடு இசைந்த நம் இசை!



இம்மாதம் 23ந் தேதியன்று அமெரிக்காவிலுள்ள நியூயார்க் நகரத்தில் ஐ. நா. பொதுச் சபை மணி மண்டபத்திலும் மற்ற அமெரிக்க ஐரோப்பிய நகரங்களிலும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுக்குத் துணையாகப் பாடுபவர் ஸ்ரீமதி ராதா விசுவநாதன். பல ஆண்டுகளாகவே அவருடனேயே கச்சேரிகளில் இணைந்து பாடி வருகிறார். ஸ்ரீமதி எம். எஸ்ஸிடமே சங்கீதம் பயின்றதால் குரு சிஷ்ய பாவத்தில் சேர்ந்தே கச்சேரிகள் நிகழ்த்தி வருகின்றனர். சென்னையில் இவருடைய துணைப் பாட்டைக் கேட்டு மகிழ்ந்தவர்களெல்லாம் ஸ்ரீமதி எம். எஸ்ஸின் பாட்டுக்களுடன் எவ்வளவு இணைந்து, குழைந்து, ஒன்றிப் பாடுகிறார், இருவர் பாட்டுக்கும் வித்தியாசம் தெரியாதபடி பண்பட்டு விட்டது என்று வியப்படைந்துள்ளனர்.

வயலின் வாசிக்கும் ஸ்ரீ சுப்பிரமணியம், வயதில் சிறியவரானாலும் உயர்ந்த வித்வத் உள்ளவர். ஸ்ரீமதி எம். எஸ்ஸின் கச்சேரிகளுக்கு வாசித்து வாசித்து அவருடைய உயர்ந்த இசையின் விசேஷ அம்சங்களையும், நுணுக்கங்களையும் கூர்ந்து கவனித்து மிகுந்த அநுசரணையுடன் பக்கவாத்தியம் வாசித்துக் கச்சேரியை மெருகுறச் செய்யும் திறமை உடையவர்.

மிருதங்க வித்துவான் ஸ்ரீ டி. கே. மூர்த்தி முன்னணி வித்துவான் என்று பல வருஷங்களாகவே புகழ் அடைந்தவர். தென்னாட்டுப் பிரபல வித்துவான்கள் எல்லோருக்கும் வாசித்து அவர்களுடைய பாராட்டுதல்களை அமோகமாகப் பெற்றிருக்கிறார். உயர்ந்த ஞானமுள்ளவர். தமது வாசிப்பினால் ஸாஹித்தியங்களின் நயங்களை வெளிப்படுத்தும் ஆற்றல் பெற்றவர். ஸ்ரீமதி எம். எஸ்ஸின் கச்சேரிகளுக்கு நிறைய வாசித்துப் பழகியவர். இரண்டாண்டுகளுக்குமுன் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுக்கு எடின்பரோ இசை விழாவில் பக்கவாத்தியம் வாசித்து அங்கு வந்திருந்த பல நாட்டு ஞானஸ்தர்களையெல்லாம் தமது வாசிப்பினால் பரவசத்திலாழ்த்தினார். இந்த முறை ஸ்ரீமதி எம். எஸ்ஸின் சங்கீத திக்விஜயத்தில் மூர்த்தியும் பங்கு கொண்டிருக்கிறார் என்பது ஒரு நல்ல செய்தி.

கடம் வாசிக்கும் ஸ்ரீ டி. எச். விநாயகராம் மூகர்சிங் வித்துவான் ஹரிஹர சர்மாவின் புதல்வர். ஸ்ரீ விநாயகராம் சில வருஷங்களாக ஸ்ரீமதி எம். எஸ்ஸின் கச்சேரிகளுக்குப் பக்கவாத்தியம் வாசித்து அநுபவமுள்ளவர். நம் நாட்டுத் தாள வாத்தியங்களிலும், லயவின்யாச தனி ஆவர்த்தனங்களிலும், மிருதங்கம் — கட இணைப்பு வாசிப்பிலும் கவரப்பட்ட அமெரிக்கப் பெருமக்களுக்கு அவருடைய கட வாத்தியம் பெரிதும் மகிழ்ச்சியளிக்கும் என்பதில் ஐயமில்லை.

தம்பூரா சுருதியை ஸ்ரீமதி விஜயாராஜேந்திரன் வழங்கிக் கச்சேரிக்கே ஆதாரமான ஜீவனை அளிக்கிறார். அவரும் ஸ்ரீமதி எம். எஸ்ஸுடன் சேர்ந்து கிருதிகளைப் பாடுகிறார்.

இந்திய சங்கீதத்தின் உயர்வையெல்லாம் திரட்டி அமெரிக்க ரசிகர்களுக்கு அளித்து நம் நாட்டின் பெருமையை உயர்த்தும் பணியில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுடன் மிகுந்த அநுசரணையுடன் ஒத்துழைக்கும் இந்தக் கலைஞர்கள் அனைவரையும் மனமார வாழ்த்துகிறோம்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அட்டைப்படம்

போட்டோ: வித்யாவ்ரதா



# ாதமெனும் பான்னுலக ாயகியே!

காரணத்தின் காரணமாய்க் காலங் கடந்தவொரு
பூரணத்தைப் போய்த்தழுவப் பொங்கும் இசை
பொழிவாய்,
தண்ணளியான் காஞ்சித் தவமுனிவன் ஆசிதரக்
கண்ணில் வளர்ப்பாய் சடல் !

போய்ப்பாட்டுப் பாடி பொருள்சேர்ப்பார், பாவமிலா
நோய்ப்பாட்டுப் பாடிடுவார் நூற்றுக் கணக்கிலது
வாய்ப்பாட்டு! நிம்மதியாம் வாழ்வருளும் ஓங்காரத்
தாய்ப்பாட்டு நின்பாட்டுத் தான் !

சேலை புனைந்தறியாச் சின்னஞ் சிறுவயதில்
ஞாலம் புகழுமிசை ஞானப்பால் ஊட்டிவிட்ட
தாயே குருவாகத் தானடைந்து மேலோங்கும்
நீயே உனக்கு நிகர் !

வானுலாம் கார்மேக வண்ணன் குழலிசையில்
மானெலாம் மெய்மை மறக்குமென்பார் — ஊனெலாம்
நின்றுருகப் பொங்கும் நினதிசையில் நிற்பானம்
மன்னனே தன்னை மறந்து !

பாடுவதோ, கிட்டும் பணத்தையொரு பெட்டியிலே
மூடுவதோ என்று முழுமனமும் கொண்டுபல
காரியங்கள் வெற்றிபெறக் கானமிசைத் தாய்! உன்றன்
சீரியம்பும் நின்றவைதாம் சேர்ந்து !

வானெழுந்த வண்டுகிலாய் வாய்திறந்து தன்னையே
தானிழந்து பாடும் தவமன்றோ நீமகிழ்ந்து
செய்கின்றாய், நல்லிசையே பெய்கின்றாய், கேட்டுருகி
உய்கின்ற தம்மா உலகு !

இன்னிசையாம் தேரேறி எவ்வுலகும் வென்றுவரும்
நன்னிதியே! நாதமெனும் பொன்னுலக நாயகியே!
தோன்றாத அந்தத் துணைமறவா நெஞ்சகமே !
வேண்டாத ஆணவத்தின் வேரறுத்த அற்புதமே !

ஆடவைத்த போக்கிலெலாம் ஆடுவதாய்,
ஆண்டவனே
பாடவைத்துப் பாடுவதாய் எண்ணுகின்ற பக்குவமே !
வையப் பெரும்புகழும் வாழ்விலொரு நிம்மதியும்
பொய்யை மிதித்த பொலிவுமிகப் பெற்றினிது

நீண்ட பலகாலம் நீவாழ எம்எஸ்ஸை
வேண்டி வணங்குகிறோம் வேல்முருகன்
காலடியில் !
வாசலது நீயாக வானையளந் தேறட்டும்
ஈசனரு ளாலே இசை !



சௌந்தராகைலாசம்

# என்ன சேதி?

- உ. பி.யில்
- ரயிலில் பிரயாணம்
- ஸ்ரீமதி ஜி. பி.
- சென்னையில் அமளி
- ராஜாஜியின் உடல்நிலை

செந்தமிழ் நாட்டிலே தி.மு.க., முஸ்லிம் லீக்குடன் சுதந்திரக் கட்சி உடன்பாடு செய்து கொண்டாற் போல், உத்தரப் பிரதேசத்திலும் ஜனசங்கத்துடன் சுதந்திரக் கட்சி, தொகுதி உடன்பாடு செய்து கொண்டுள்ளது என்பதை அறிந்து பெருமகிழ்ச்சி அடைகிறோம். பதவியிலிருக்கும் காங்கிரஸை அப்புறப் படுத்த நாட்டில் உள்ள எதிர்க்கட்சிகள் விவேகமாகப் பாடுபடுவதைக் காண காங்கிரஸுக்கு அஸ்தியில் ஜுரம் காணத்தான் செய்யும். அந்த ஜுரத்தில் என்ன வேண்டுமானாலும் பேசுவார்கள், செய்வார்கள், வாக்காளப் பொது மக்கள் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்!

ஃ ஃ ஃ

தென் மத்திய ரயில்வே இலாக்கா எந்த வேளையில் தொடங்கப்பட்டதோ தெரியவில்லை. தொடங்கிப் பதினைந்து நாட்கள்கூட ஆகவில்லை; இரண்டு பெரிய ரயில் விபத்துகள் நிகழ்ந்து விட்டன. பல உயிர்ச் சேதங்களும், பலருக்குப் படுகாயங்களும் சொல்ல முடியாத இன்னல்களும் உண்டாகியிருக்கின்றன. இந்தச் செய்திகளைக் கேட்டு நமது மனம் அநுதாபத்தால் நிறைகிறது! ஒரு பாவமும் அறியாத இத்தனை மக்கள் சற்றும் எதிர்பாராத சமயத்தில் இவ்வளவு பெருந்துன்பத்துக்கு ஆளாக்கப்படுகின்றனரே என்று இரக்கம் உண்டாகிறது. இத்தகைய விபத்துக்களைத் தடுக்க நிர்வாகத்தினர் தகுந்த நடவடிக்கைகளை உடனடியாக எடுப்பார்கள் என நம்புகிறோம்.

ஃ ஃ ஃ

ஐ. நா. சபையில் இந்தியப் பிரதிநிதியாகப் பணியாற்றும் ஸ்ரீ ஜி. பார்த்தசாரதி அவர்களின் மனைவியார் அமெரிக்காவில் காலமான செய்தி கேட்டு மிகவும் வருந்துகிறோம். பார்ஸி வகுப்பினரான ஸ்ரீமதி ஜி. பி. கள்ளிக்கோட்டையில் பிறந்தவர். இங்கிலாந்துக்குச் சென்று ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் ஆங்கிலத்தில் பட்டம் பெற்றவர். சென்னையில் பல பெண்கள் கல்லூரிகளில் பேராசிரியையாகவும் முதல்வராகவும் பணியாற்றியிருக்கிறார். அகில இந்திய ரேடியோவிலும் பணியாற்றியிருக்கிறார். ஆங்கில இலக்கியத்தில் நல்ல புலமையும் சிறந்த ரசிக உள்ளமும் கொண்டவர். அவர் மறைவால் வருந்தும் ஸ்ரீ பார்த்தசாரதி அவர்களுக்கும் ஏனையோருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

திருநெல்வேலி நகரசபையைச் சர்க்கார் கலைக்கும்படி உத்தரவு போட்டு, அதன் மீது நீதி மன்றத்தில் நடந்த வழக்கில் தீர்ப்பு சர்க்காருக்குச் சாதகமாக இருந்தது. எனினும் தீர்ப்பில், சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை தீவிர நடவடிக்கையாகும், அவ்வளவு தீவிர நடவடிக்கை அவசியமில்லை என்று கூறப்பட்டிருந்ததைக் கவனிக்க வேண்டும். அதிலிருந்தே எதிர்க் கட்சிகளின் கை ஓங்கியுள்ள நகரசபைகள் விஷயத்தில் காங்கிரஸ் கட்சி நடந்துகொள்ளும் விதம் திருப்திகரமாக இல்லை என்பது தெளிவாகிறது. இதை உறுதிப்படுத்தும் வகையில் சென்னை நகரசபையில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் நடந்து கொண்டிருக்கிறார்கள்! எப்படியோ குழப்பமான நிலையை உண்டாக்கி அரசாங்கத்தைத் தலையிடச் செய்து தேர்தலுக்கு முன் சென்னை நகரசபையையும் கலைத்து தி. மு. க. வின் செல்வாக்கைக் குறைக்க முயல்கின்றனர். ஆனால் தி. மு. க. அங்கத்தினர்கள் கட்டுப்பாட்டுடனும் கண்ணியத்துடனும் நடந்து கொண்டு கடமையைச் செய்வார்கள் என நம்புகிறோம்.

ஃ ஃ ஃ

ராஜாஜியின் உடல்நிலை தேறிவரும் நற்செய்தியை நேயர்களுடன் பகிர்ந்து மகிழ்கிறோம். ஆகஸ்டு மாதம் 27ம் தேதி கரூரில் நடைபெற்ற திருச்சி ஜில்லா சுதந்திரக் கட்சி மகாநாட்டுக்குப் புறப்படும்போதே ராஜாஜி ஜுரத்தோடு செல்ல வேண்டியிருந்தது. ஏற்கனவே ஒப்புக் கொண்ட ஒரு நிகழ்ச்சிக்குக் கடைசி நிமிஷத்தில் வரவில்லை என்று சொன்னால் அப்பகுதிவாழ் பொதுமக்கள் பெருத்த ஏமாற்றமுறுவார்களே என்று ராஜாஜி மகாநாட்டுக்குச் சென்றார். அங்கிருந்து வந்ததிலிருந்து தொடர்ந்து விட்டு விட்டு ஜுரம் இருந்து வந்தது. டாக்டர் வி. சத்யநாராயணாவும், டாக்டர் ஏ. எல். அண்ணாமலையும் கண்ணும் கருத்துமாக இருந்து சிகிச்சை யளித்தார்கள். அவர்களுடைய சிகிச்சையின் பயனாகவும், லட்சோப லட்சம் மக்களின் பிரார்த்தனையின் பயனாகவும் ராஜாஜி ஜுரம் நின்று உடல்நிலை தேறி வருகிறார்கள். இறைவனின் தனிப்பெரும் கருணையினால், பழையபடி எல்லா அலுவல்களையும் கவனிக்கும் அளவுக்கு விரைவில் அவர்கள் பூரண குணமும் தேக சக்தியும் பெற வேண்டும் என்று பிரார்த்திப்போமாக.



## செய்திப் படங்கள்

லால் பஹதூர் சாஸ்திரி அவர்களின் பிறந்த தினத்தை யொட்டி அவரது வெண்கலச் சிலையைச் சித்ரகலா சங்கம் ராஷ்டிரபதிக்கு அக்டோபர் 1ந் தேதியன்று பரிசாக வழங்கியது. ஸ்ரீமதி லலிதா சாஸ்திரி இச்சிலைக்கு மலர் மாலை அணிவித்தார்.





சென்னை மக்கள் சார்பில் ஷெரீப் கூட்டிய முதன் மந்திரி
ரு பக்தவத்ஸலம் அவர்களின் எழுபதாவது பிறந்த தின விழா
க்குச் சென்னை கவர்னர் தலைமை வகித்தார். அதோடு முதன்
ந்திரியின் சேவையைப் பாராட்டி வெள்ளித் தட்டொன்றைப்
சளித்தார். சென்னை நகரப் பிரமுகர்கள் பலர் திரு பக்தவத்ஸல
த்துக்கு வாழ்த்துரை வழங்கினார்கள்.

நவராத்திரி தருணத்தில் சென்னை மவுண்ட்ரோட் காதி
ாமோத்யோக் பவன் மாடியில் பொம்மைக் கொலு வைத்திருக்
ர்கள். அக்டோபர் 5ந் தேதி முதல் 22ந் தேதி வரை நடை
றுகிறது. அங்குள்ள விதம் விதமான கொலுப் பொம்மைகள்
வற்றைப் படத்தில் காணலாம்.





# நாதோபாசனை

## சங்கீத கலாநிதி ஸ்ரீ டி. எல். வேங்கடராமய்யர்

கலைகள் அறுபத்து நான்கு. அவைகளில் சிறந்தது சங்கீதம். அதுமட்டுமல்ல; நமது பாரத தேசத்தில் பரமனை அடைவதற்கான மார்க்கங்களில் ஒன்றாகவும் அதுவும் மிக எளிதான மார்க்கமாகவும் சங்கீதத்தைக் கருதி வந்திருக்கிறார்கள். நம் நாட்டில் நாதமே பிரம்மம் என்றும் சங்கீதம் நாதோபாசனை என்றும் மதிக்கப்பட்டிருக்கிறது. ''சுருதிகளையும் ராக மூர்ச்சனைகளையும் ஒன்றாய்த் தெரிந்து லயத்துடன் பாட்டுக்களை யாரொருவர் வீணையில் வாசிக்க வல்லவரோ அவர் மோக்ஷமடைவார்'' என்று யாக்ஞவல்க்கியர் தமது ஸ்மிருதியில் அருளியிருக்கிறார். 'நாத தனுமனிசம்' என்ற கீர்த்தனத்தில் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் சப்த ஸ்வரங்களே சங்கரனுடைய சரீரமாகும் என்று பாடியிருக்கிறார். முத்துஸ்வாமி தீக்ஷிதர் அவர்களும் ''இருபத்திரண்டு சுருதிகள் சேர்ந்த ஸ்வரங்களே பரதேவதையின் சொரூபமாகும்'' என்று கூறியிருக்கிறார். இவ்வகையில் சங்கீதம் நம் தேசத்தில் தெய்வீகமான கலையென்றும் உபாசனையென்றும் அப்பியசிக்கப்பட்டு வருவதைக் காணலாம்.

பாரத நாட்டின் சங்கீதத்தில் ஒரு தனி அழகு வாய்ந்த அம்சம் ராகங்களாகும். மற்ற நாட்டு இசைகளில் அழகான பாட்டுகள் இருக்கின்றன; ஸ்வரங்களையும் அப்பியாசம் செய்கிறார்கள். ஆனால் ராகம் என்பது நமது தேசத்தில்தான் தொன்றுதொட்டு ஏற்பட்டிருக்கிறது. பைரவி, சங்கராபரணம் என்றெல்லாம் சொன்னால் நம் மனசில் ஒரு தோற்றம் உண்டாகிறது. ஒரு சிற்பி செதுக்கிய சிலா உருவங்களைப் பார்த்து, இது சிவன், இது கிருஷ்ணன், இது சரஸ்வதி என்றெல்லாம் பகுத்தறிந்து உருவங்களைச் சொல்லிவிடுகிறோமல்லவா? அதைப் போலவே இராக ஆலாபனம் செய்யும்போது, அதன் சாயையைக் கண்டு தெளிந்து இது பைரவி, இது சங்கராபரணம் என்றெல்லாம் தெரிந்து கொள்கிறோம். இது நம் கலைக்குள்ள தனி விசேஷமாகும். நம் சாஸ்திரத்தில் ஒவ்வொரு ராகத்துக்கும் ஒவ்வொரு தேவதை உண்டென்று கூறப்படுகிறது. நம் ராக ஆலாபனத்தின் முக்கியமான லட்சியமே ராகத்தின் ரூபங்களை சுத்தமாகவும், தெளிவாகவும் விளக்குவதுதான். ஒரு தேவதையை வர்ணிக்கும்போது எப்படி நாம் பாதத்திலிருந்து கேசம் வரை அதன் சொரூபத்தை வர்ணிக்கிறோமோ, அம்மாதிரியே இராக ஆலாபனங்கள் செய்யும்போது அந்த ராகத்தின் சொரூபத்தை மந்திர ஸ்தாயியிலிருந்து தார ஸ்தாயி வரையில் அதன் அழகைப் படிப்படியான சஞ்சாரங்களினால் விவரிக்க வேண்டும். இதில் தேர்ந்தவர்களே நாதோபாசகர்கள் ஆவார்கள்.

நம் முன்னோர்கள் இந்த ரீதியிலே சங்கீதத்தை வளர்த்திருக்கிறார்கள். இதிலுள்ள ஒரு முக்கியமான அம்சம் கவனிக்கத் தகுந்தது. ராக ஆலாபனம் மட்டுமே கேட்டு ராகச் சாயையைத் தெரிந்துகொள்வது சிலரால்தான் முடியும். அதை எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசையுடன் நம் தென்னாட்டில் உள்ள பெரியோர்கள் புதிதாக ஒரு மார்க்கத்தைக் காண்பித்திருக்கிறார்கள். அவர்கள் பக்தியில் சிறந்தவர்கள், ஆகவே துதி முறையில் பாடல்கள் எழுதியிருக்கிறார்கள். இவர்கள் யாத்த பாட்டுக்களில் ஒரு விசேஷம், ராகத்தினுடைய சொரூபங்களையெல்லாம் பாட்டுக்களின் வாயிலாகவே விளக்கியிருக்கிறார்கள். இதைத்தான் நாம் கீர்த்தனங்கள் என்று சொல்கிறோம். இந்தக் கீர்த்தனங்கள் பக்தியை ஊட்டுவதால் பலரும் கேட்டு ரசிக்க முடிகிறது. அதோடு இவற்றைக்

## ஆசை நிறைவேறியது!

ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் நடித்த 'மீரா' ஹிந்திப் படத்தை அறிமுகம் செய்த காலஞ்சென்ற கவிக் குயில் சரோஜினிதேவி அவர்கள் பின்வருமாறு கூறினார்:

''நான் இப்போது ஹிந்தியில் பேசாமல் ஆங்கிலத்தில் பேசுவது காரணார்த்தமாகத்தான். என்னுடைய பாராட்டு வார்த்தைகள் வட இந்தியாவில் மட்டும் கேட்டால் போதாது, உலக முழுவதிலும் கேட்க வேண்டும் என்பதாலேயே ஆங்கிலத்தில் பேசுகிறேன். உயிர்த் துடிப்புடன் நான் கூறும் வார்த்தைகள் உலகின் கடைக் கோடியில் உள்ள மூலை முடுக்குகளிலெல்லாம் கேட்க வேண்டும் என்று விரும்புகிறேன். ஆம், இந்தியாவிலே எப்படி ஓர் உன்னதக் கலைஞர் தமது பாட்டினாலேயே கோடானு கோடி மக்களின் — ஆண் பெண்களின் — இதயங்களைத் தொட்டு எழுப்பியிருக்கிறார் என்பதை உலகெல்லாம் அறிய வேண்டுமென விரும்புகிறேன்.

''வரப்பிரசாதம் பெற்றுள்ள இந்த மந்திர சக்தி வாய்ந்த விதுஷியின் மந்திர சக்தி வாய்ந்த குரலைக் கேட்பவர் யாராயினும் அவருக்கு இன்று என்னிடம் கிளர்ந்துள்ள உணர்ச்சிகள் எழும்பும் என்று நம்புகிறேன். இந்தப் பொற்குரல் மகத்தான பல லட்சியங்களை நிறைவேற்றும் ஒரு கருவி என்பதை அனைவரும் அறிவாராக.''

சரோஜினி தேவி அவர்களின் விருப்பம் இன்று பூர்த்தியாகிறது. பதினாயிரம் மைல்களுக்கு அப்பால் அமெரிக்கர்கள் எம். எஸ்ஸின் இசையைக் கேட்டு சரோஜினிதேவி பெற்ற உணர்ச்சிகளை அடைவதாகவும், இந்தப் பொற்குரல் நிறைவேற்றியுள்ள மகத்தான லட்சியங்களை அறிவதாகவும் செய்திகள் கிடைத்துள்ளன.



**மேற்கு ஜெர்மானியத் தலைநகர் பான் நகரில்:**
**இசை மேதை பீத்தோவன் அரங்கேறியதால் உலகப் பிரசித்தி பெற்ற 'லா ரீடோன்ட்' என்னும் இந்த மண்டபத்தினுள்ளே சமீபத்தில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களும் இன்னிசைக் கச்சேரி நிகழ்த்தி ஜெர்மானிய ரசிகர்களைச் சுமார் ஒன்றரை மணி நேரத்துக்கு மெய் மறந்திருக்கச் செய்தார்.**

கட்கக் கேட்க அவற்றில் பொதிந்திருக்கும்
ரகத்தின் சாயையும், உருவமும் அவர்கள்
னத்தில் பசுமரத்தாணி போல் பதிந்து
டுகின்றன. இந்தக் காரணத்தினால்தான்
் நாட்டில் லட்சண சங்கீதத்தைப் பல
க்கணாலும் அறிந்து அனுபவிக்க முடிகிறது.
ப்படிக் கீர்த்தனங்கள் எழுதிய மகான்கள்
ர். அவர்களில் ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள்
' முத்துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்ரீ சியாமா
ஸ்திரிகள் ஆகியோருக்குத் தனி ஸ்தானம்
ண்டு. இவர்கள் சங்கீதத் திரிமூர்த்திகள்
ன்றே போற்றப்படுகிறார்கள்.

நமது காயகர்களும், சங்கீத வித்வான்களும்
தோபாசனையைப் பின்பற்றி இந்தக்
த்தனங்களையும், இராக ஆலாபனங்களை
் நன்றாக வழங்கி வருகிறார்கள். சங்கீதம்
ன்பது பணம் சம்பாதிப்பதற்கு மாத்திரம்
ல, அது நாதோபாசனை என்ற எண்ணத்
டன் வாழவேண்டும். அப்பேர்ப்பட்ட
யகர்கள்தான் நம் சங்கீதத்துக்குச் சரியான
ாண்டு செய்தவர்களாவார்கள்.

கொஞ்ச காலமாகவே நம் சங்கீதத்தை
ல் நாட்டிலும், அமெரிக்காவிலும் கேட்கப்
ர் விரும்புகிறார்கள். சிலர் நம் தேசத்
கே வந்து ஆர்வத்துடன் நம் சங்கீதத்
தக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

இப்பொழுது அமெரிக்காவில் பல தேசத்
ர்கள் நம் நாட்டுக் கர்நாடக சங்கீதத்
தக் கேட்க ஏற்பாடு நடந்து கொண்டிருக்
து. அக்டோபர் 22ந் தேதியன்று பல
தேசத்துப் பிரதிநிதிகள் அமர்ந்துள்ள ஐ. நா. சம்மேளனத்தில், தொடக்க விழாவில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் இசை வழங்கப் போகிறார்கள். அதற்குப் பின்னும் அமெரிக்காவின் முக்கிய நகரங்களில் பெரும்பாலும் பல்கலைக் கழகங்களின் ஆதரவின் கீழ் அவரது கர்நாடக சங்கீதக் கச்சேரிகள் நடக்கவிருக்கின்றன.

நம் சங்கீதத்தின் அழகை நன்றாக இதர தேசங்களில் காண்பிக்க வேண்டுமானால் சிறந்த சங்கீத விற்பன்னர்கள் சென்றால்தான் பயன்படும். ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் நம் சங்கீத வித்வான்களில் முதன்மை ஸ்தானம் வகிப்பவர்களுள் ஒருவர். நல்ல சாரீர சம்பத்துப் பெற்றவர். எல்லா வாக்கேயக்காரர்களின் கீர்த்தனங்களையும் நன்கு பயின்றவர். ஹிந்தி பஜன் பாடுவதிலும் திறமை உள்ளவர். அவரது பாட்டில் சிறந்த அனுபவம் ததும்புகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் சங்கீதத்தை நாதோபாசனையாகவே ஆக்கிக் கொண்டு விட்டார். பிரதி தினமும் அவர் சங்கீதத் திரிமூர்த்திகளின் திருவுருவப் படங்களை வணங்கிச் சங்கீதாப்பியாசம் செய்வது வழக்கம். ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி அவர்கள் அமெரிக்காவில் நம் கர்நாடக சங்கீதத்தின் பெருமையை விளக்குவது நம் எல்லோருக்கும் மகிழ்ச்சியையும் பெருமையையும் தரக் கூடியதாகும்.

வாழ்க கர்நாடக சங்கீதம்! வாழ்க நாதோபாசகர்கள்!

கொழுத்த, சுவையான கோழிக் குஞ்சுகள், அடுப்பில் ஜோராக வறுத்தது. உங்கள் விருப்பப்படி உருளைக்கிழங்குடன் தரப்படுகிறது. உங்களுக்குப் பிடித்தமான பச்சடி. உங்கள் குடும்பத்திற்கும் திடீர் விருந்தாளிகளுக்கும் நொடியில் சாப்பாடு தயார். இவ்வளவும் ஒரு விநாடியில் சிரமமின்றி மின்விசையால்—பஜாஜ் சமையல் சாதனங்களின் உதவியுடன் தயாராகிறது

விசையைத் தட்டி விடுங்கள். பத்தாம்பசலி அடுப்புகள், குமட்டிகளை வைத்துக் கொண்டு அவதிப்பட வேண்டாம். நேரம் எவ்வளவு மிச்சம்! அனுபவிக்க எவ்வளவு ஓய்வு.

நவீன வாழ்வுக்கு பஜாஜ் சாதனங்களுடன் திரும்புக
பஜாஜ் வியாபாரிகளின் ஷோ ரூமில் விரைவில் நுழையுங்கள்.

அடுப்பும் இறைச்சி வேகவைக்கும் கம்பி வலையும் கூடியது ○ மின் தட்டுகள் ○ பிரெஷர் குக்கர்கள்—டோஸ்டர் ○ காபி வடிகட்டி ○ டீ கெட்டில் பழக்கலவை—இன்னும் பலப்பல விரைவில் வருபவை.

**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**
45-47, வீர்நரிமன் ரோடு, பம்பாய்-1
இந்தியா முழுவதிலும் கிளைகளுண்டு.

# நவீன வாழ்வுக்கு பஜாஜ் சாதனங்களுடன் திரும்புக





heros' BE 230 TAM

சமையலறை அமைப்பு உதவி—ஜானி மாடர்ன் கிச்சன் எக்விப்மெண்ட்ஸ் பிரைவேட் ●

# வித்வான்கள் வாழ்த்துகிறார்கள்



### ஸங்கீத கலாநிதி அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார்:

ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் லண்டன், அமெரிக்கா, ஐ. நா. சபை முதலிய இடங்களில் கச்சேரிகள் செய்ய, அழைப்பின் பேரில் சென்றிருப்பதைக் குறித்து மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன். பெரும் புகழும் பெற்று அவர்கள் திரும்பி வர ஸத்குரு ஸ்ரீ தியாக ப்ரும்ஹத்தைப் பிரார்த்திக்கிறேன்.

### ஸங்கீத கலாநிதி ஸ்ரீ செம்பை வைத்தியநாத பாகவதர்:

சுமார் முப்பத்தைந்து வருடங்களுக்கு முன் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியின் கானத்தை முதன்முதலில் கேட்டிருக்கிறேன். அக்காலத்தில் அவ்வளவு சிறிய வயதில் ஸ்திரீகள் யாருமே பாடி நான் கேட்டதில்லை. அவரது மதுரமான கானத்தை மேலும் கேட்பதற்கு நான் அடிக்கடி மதுரைக்குப் போவதுண்டு. அன்று முதல் இன்று வரை ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியினுடைய ஸுஸ்வரமான கானம் மேன்மேலும் வளர்ந்து பிரகாசம் அடைந்திருக்கிறது. அப்படிப்பட்ட இனிமையும் ஸுஸ்வரமும் நிறைந்த கானம் நம் இந்திய நாட்டு மக்கள் எல்லோராலும் நன்கு ரசித்துப் போற்றப் பட்டிருக்கிறது. அது போல் மேல் நாட்டு மக்களுக்கும் அவரது கானத்தைக் கேட்கக் கூடிய சந்தர்ப்பம் கிடைத்திருப்பது அவர்களது பெரும் பாக்கியம் என்றே நான் சொல்லுவேன். ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி அமெரிக்கா முதலிய மேல் நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து அவரது மதுரமான கானங்களின் மூலம் நம் கர்நாடக சங்கீதத்தினுடைய பெருமையையும் நம் இந்தியாவினுடைய மதிப்பையும் உலகம் முழுதுமே வியாபிக்கச் செய்யட்டும். ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியின் இந்தச் சுற்றுப் பயணம் மிகச் சிறப்பாக வெற்றி பெற ஸ்ரீ குருவாயூரப்பனும் ஸத்குரு ஸ்ரீ தியாகப்பிரும்மமும் அருள் புரிவார்களாக.

### ஸங்கீத கலாநிதி பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர்:

சற்றி வளைத்து ஸ்ரீமதி எம். எஸ்ஸின் இசையைப் புகழ வேண்டிய அவசியமே இல்லை. நெல்லை சந்திர விலாஸில் ஸ்ரீமதி ஷண்முகவடிவு அம்மாளின் வீணை இசையுடன் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் குரலிசையை முதன் முதலில் நான் கேட்டதாக ஞாபகம். அதுமுதல் சுமார் நாற்பதாண்டு காலமாகச் சிறிதும் மங்காத ஆற்றல் வளரும் புகழுடன் திகழ்வதே ஸ்ரீமதி எம். எஸ்ஸின் இசையினுடைய சிறப்புக்குப் போதுமான அத்தாட்சி.

இசையின் சிறப்பு ஒருபுறம் இருக்க இசையின் பயனும் ஒன்றுண்டு. ஸ்ரீமதி எம். எஸ். அவர்களும் அவரது கணவர் ஸ்ரீ சதாசிவம் அவர்களும் கை வழிய வழியச் சம்பாதித்து நான்கு கைகளாலும் வாரி வாரி நல்ல காரியங்களுக்கு வழங்கி வருவதுதான் அது.

இப்போது அவர்கள் மேற்கொண்டுள்ள அமெரிக்கப் பயணம் வழக்கம் போல் அமோகமான வெற்றியடையும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை. பகவான் அவர்களுக்குப் பூரணமாக அநுக்கிரகிப்பான்.

### ஸங்கீத பூபதி மகாராஜபுரம் ஸ்ரீ விசுவநாதய்யர்:

1933ஆம் ஆண்டு கும்பகோணத்தில் மகாமக விசேஷத்தையொட்டி ஒரு கண்காட்சி மிகச் சிறந்த முறையில் நடைபெற்றது. அதன் சங்கீதப் பகுதி காரியதரிசியாக நான் பணியாற்றினேன். சுமார் ஒன்றரை மாத காலம் நடைபெற்ற அந்தப் பொருட்காட்சியில் ஒவ்வொரு நாளும் சிறந்த வித்வான்களைக் கொண்டு கச்சேரிகள் ஏற்பாடு செய்திருந்தேன். ஸ்ரீமதி எம். எஸ்.ஸைப் பற்றி அதற்கு முன்னேயே நான் கேள்விப்பட்டிருந்ததால் அவர்களின் கச்சேரியும் அந்தப் பொருட்காட்சியில் இடம் பெற்றது. இன்றும் என் நினைவில் இருக்கிறது. அவர்கள் கச்சேரி அன்று சம்பிரதாய சுத்தமாகவும், கௌரவமான தரத்துடனும் அமைந்தது. எனக்கு அன்று ஏற்பட்ட மகிழ்ச்சியில் அதே பொருட்

காட்சியில் என் கச்சேரிக்காக எனக்கு அளித்திருந்த ஒரு தங்கப் பதக்கத்தை எம். எஸ். ஸுக்கு அளித்து வருங்காலத்தில் இசை உலகிலே ஒரு பெரிய ஸ்தானத்தை அடைய வேண்டும் என்று மனப்பூர்வமாக ஆசி கூறினேன்.

வீணை வித்வாம்ஸினி மதுரை ஷண்முக வடிவு அவர்களைப் பற்றி அறியாதவர்கள் இருக்க முடியாது. சிறந்த சங்கீத மேதையான அவர்களின் வாரிசான ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் கச்சேரிகளை நான் அடிக்கடி கேட்டதுண்டு. தியாகய்யர், தீக்ஷிதர், ஸ்யாம சாஸ்திரிகள், க்ஷேத்ரக்ஞர் போன்ற தலை சிறந்த வாக்கேயக்காரர்களின் உருப்படிகளை அவரிடம் கேட்கும்போது, சொற்கள் உச்சரிப்பு, பாடாந்தர சுத்தம், சம்பிரதாய சுத்தம் முதலியவற்றுக்கு அவர் கொடுக்கும் முக்கியத்துவம் மிகவும் வியக்கத்தக்க முறையில் இருக்கும். ராகம் பாடும்போது பத்ததியிலிருந்து வழுவாமலும் அதோடு கவர்ச்சியுடனும் கேட்பவர்களுக்கு மன நிறைவு ஏற்படும் வகையிலும் அமைந்திருக்கும். தென்னிந்திய சங்கீதத்தைப் போலவே வட இந்திய சங்கீதமும் அவரிடம் கேட்கும்போது சிறந்த சங்கீதக்காரர்களின் நினைவுதான் வரும். பஜன்கள் பாடும்போது அவர்களின் இனிமையான குரலிலிருந்து வரும் அந்த கானம் நம்மைச் சிலிர்க்க வைக்கிறது. பெரும் புகழோடு சங்கீத உலகில் ஒரு சிறந்த ஸ்தானத்தில் இருந்தும், இன்னும் என் போன்ற வித்வான்களிடம் சங்கீத சம்பந்தமான அபிப்பிராயங்கள் கேட்பதும் பிராசீன கீர்த்தனங்கள் பாடம் செய்வதும் பிற வித்துவான்களின் கச்சேரிகளை அடிக்கடி கேட்பதும் அவர்களின் தன்னடக்கத்தை மட்டுமல்ல, கரை காண முடியாத நம் கர்நாடக சங்கீதத்தின் நுணுக்கங்களை முடிந்தவரையில் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அவாவையும் காட்டுகிறது. இவைகளுக்கெல்லாம் பொருத்தமாக அவரது கணவர் ஸ்ரீ சதாசிவம் அவர்களின் ஒத்துழைப்பும் உற்சாகமும் உறுதுணையாக அமைந்திருப்பதற்குச் சங்கீத உலகம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது.



ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் அமெரிக்கப் பயணத்தில் அவர்களுக்குக் கிடைக்கும் பெயரும் புகழும், இசையுலகுக்கும் கலைஞர்கள் எல்லோருக்கும் ஏற்பட்டதாகவே கொள்ள வேண்டும்.

## ஸங்கீத கலாநிதி கும்பகோணம் பிடில் ராஜமாணிக்கம் பிள்ளை:

திருமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களை அவரது சிறுபோதிலிருந்தே எனக்குத் தெரியும். தமிழ் நாட்டின் முக்கிய க்ஷேத்திரமாகிய மதுரை மாநகரத்தில் தேவி மீனாக்ஷியின் அருளால் வீணை வித்வாம்ஸினி திருமதி ஷண்முகவடிவு அம்மாளுக்குப் புதல்வியாகப் பிறந்தார். கர்ப்ப வாஸத்திலேயே வீணையின் நாதத்தைக் கேட்டுக் கேட்டு வளர்ந்தவர்கள் ஆதலால் வீணையின் நாதமாகவே சாரீரமும் அமையப் பெற்றவர் ஸ்ரீமதி எம். எஸ்.

மகான்களாகிய திருக்கோடிக்காவல் பிடில் ஸ்ரீ கிருஷ்ணய்யர்வாள், வீணை ஸ்ரீ வைத்தியநாதய்யர்வாள், பூச்சி ஸ்ரீ சீனுவாசய்யங்கார்வாள், மழவராயநேந்தல் ஸ்ரீ சுப்பராம பாகவதர் அவர்கள், பாலக்காடு ஸ்ரீ அனந்தராம பாகவதர் அவர்கள், திருமருகல் நாதஸ்வரம் ஸ்ரீ நடேச பிள்ளையவர்கள், மதுரை ஸ்ரீ பொன்னுசாமி பிள்ளையவர்கள், மிருதங்கம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி பிள்ளையவர்கள், கஞ்சிரா ஸ்ரீ மாமுண்டியா பிள்ளையவர்கள், மிருதங்கம் ஸ்ரீ அழகநம்பியா பிள்ளை அவர்கள், கடம்



ஸ்ரீ கிருஷ்ணய்யர் முதலான வித்வான்கள் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்து அவர்களால் பெரிதும் மதிக்கப்பெற்றவர் திருமதி ஷண்முக வடிவு அம்மாள் அவர்கள். தாம் வீணைக் கச்சேரிக்குப் போகும் போதெல்லாம் தம் தவப் புதல்வியாகிய சுப்புலக்ஷ்மியையும் கூட அழைத்துச் சென்று தம் வாசிப்பைக் கேட்கச் செய்து, ஏன், தாம் வீணை வாசிக்கும் போது வீணை இசையுடன் சேர்ந்து ஸ்ரீமதி எம். எஸ்.ஸைப் பாடவும் சொல்லி அவரது இசைத் திறனை வளர்த்திருக்கிறார்கள்.

பூர்வ ஜென்ம விசேஷத்தினாலும் இயற்கையில் ஏற்பட்ட சங்கீத ஞானத்தினாலேயும், தம் குழந்தை எல்லோரும் போற்றக் கூடிய வித்வாம்ஸினியாக வேண்டும் என்று அக்கறையோடு திருமதி ஷண்முகவடிவு சொல்லிக் கொடுத்ததினாலேயும், சொல்லிக் கொடுப்பவர்களிடமிருந்து வெகு சுலபமாகக் கிரகிக்கக்கூடிய சக்தி ஸ்ரீமதி எம். எஸ்.ஸுக்கு இருந்ததினாலேயும், விரைவில் தாமே வித்வாம்ஸினியாக விளங்கலானார்.

அந்தச் சந்தர்ப்பத்தில்தான் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியின் வாழ்க்கையில் ஒரு முக்கிய திருப்பம் ஏற்பட்டது. தேசபக்தரும், சிறந்த சங்கீத ரசிகரும், ஈகையும், பரந்த நோக்கமும் உடையவருமான ஸ்ரீ சதாசிவம் அவர்கள் திருமதி சுப்புலக்ஷ்மியின் சங்கீதத்தில் ஈடுபட்டு அவரைத் திருமணம் செய்து கொண்டார். எதையும் உயர்வாகச் செய்து காட்டும் திறமை வாய்ந்த ஸ்ரீ சதாசிவம் அவர்கள் இயற்கையிலேயே வளர்ந்ததை இன்னும் உயர்ந்து பிரகாசிக்கும்படி செய்யத் தொடங்கி விட்டார். அது திருமதி சுப்புலக்ஷ்மி அவர்களின் அதிருஷ்டமும், பூர்வ புண்ணிய விசேஷமும் கலந்து உண்டானது என்று தான் கூறுவேன். அதன் காரணமாக நம் தமிழ் நாடு மட்டிலுமல்லாமல், வெளி நாடுகளுக்கும் சென்று பிரக்கியாதி அடையலானார் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி.

ஸ்ரீ சதாசிவமும், ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியும் திருமணம் செய்து கொண்ட நற்செய்தியைக் கேட்டு, அப்போது நான் 'மியூஸிக் கன்வீன'ராக இருந்த கும்பகோணம் வாணி சபையின்கண் திருமதி சுப்புலக்ஷ்மி அவர்களைக் கச்சேரிக்குத் தம்பதி சகிதமாக வரவழைத்து, நானும் சங்கீத கலாநிதி செம்மங்குடி சீனிவாசய்யர் அவர்களும், இதர வித்வான்களும், ரஸிகர்களும் சேர்ந்து திருமதி சுப்புலக்ஷ்மி அவர்களுக்கு ''இசை வாணி'' என்ற பட்டத்தை மனமகிழ்ச்சியுடன் வழங்கி அவர்களுடைய திருமணத்தைக் குடந்தை ரசிகர்களிடையே கொண்டாடினோம்.

அதன் பிறகு திருமதி சுப்புலக்ஷ்மி அவர்களுக்கு அளிக்கப்பட்டு வருகிற பட்டங்களையும் பரிசுகளையும், பெருமைகளையும் வித்வான்களும் ரஸிகர்களும் கேட்டு ஒவ்வொரு முறையும் பெருமை அடைந்து வருகிறோம். இவ்வளவு பெருமைகள் அடைந்தும் திருமதி சுப்புலக்ஷ்மி அவர்கள் குழந்தை உள்ளத்துடன் பழகுவதும், வித்வான்களிடத்தில் அன்புடனும் மரியாதையுடனும் நடந்து கொள்வதும், இன்னமும் தம்மை ஒரு வித்யார்த்தியாகவே கருதிக் கொண்டிருப்பதும் தம் கணவரிடத்திலும் 'குடும்பத்தினரிடத்திலும் அபரிமிதமான பிரியத்தோடு நடந்துகொண்டு இருப்பதும் உலகுக்கு எடுத்துக் காட்டக் கூடிய மேன்மையான அம்சங்களாகும்.

நம் தமிழ் நாட்டின் இப்பேர்ப்பட்ட ''இசைவாணி'' நம் இந்தியத் தேசத் தலைவர்களின் பாராட்டுக்களைப்





பெற்றதோடு நில்லாமல் வெளி நாடுகளுக்கும் சென்று அங்குள்ள தலைவர்களுடைய பாராட்டுதலையும் பெற்று நம் இந்தியாவின் பெருமையை, அதிலும் நம் தமிழ் நாட்டின் பெருமையை உயர்த்தி ஸ்ரீ மீனாக்ஷி தேவியின் கிருபையாலும், பெரியோர்களின் ஆசிர்வாதங்களாலும் பரம சௌக்கியமாக வந்து சேர வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

## ஸங்கீத கலாநிதி முசிரி சுப்ரமணிய அய்யர் :

பூர்வ புண்ணிய வசத்தினால் அனுக்கிரகிக்கப்படும் வரப்பிரசாதம் சாரீரம். இந்தச் சாரீர சம்பத்தைச் சாதகத் திறனால் நன்றாகப் பண்படுத்தி, கம்பீரமும் குழைவும் பிடிப்பும் ஏற்படுமாறு செய்ய வேணும். நல்ல சங்கீதத்துக்குச் சுருதி சுத்தமும் ஸ்வர சுத்தமும் அவசியம். அது போலவே லய சுத்தமும். இவை கைவரப் பெறுதல் அரிது. அத்துடன் சங்கீத ஞானமும் சம்பிரதாய ஞானமும் சேரவேண்டும். இவற்றுக்கெல்லாம் மேலே பாவம் முக்கியம். சாதாரணமாக ஒரு வித்துவானுக்கு இந்தச் சிறப்பு இயல்புகள் இருந்தால் போதுமென்றாலும் கச்சேரி செய்கிறவர்களுக்குச் சுமுகமும், அடக்கமும், பலரோடு நன்றாகப் பழகத் தெரிந்திருக்கவும் வேண்டும். இவையும் தவிரச் சபை நோக்கம் நன்றாகத் தெரிந்திருக்க வேண்டும் பாடகருக்கு. சிலர் சபை நோக்கம் தெரியாமல் பாடி அவஸ்தைப்படுவதை நான் கண்டிருக்கிறேன்.

மேற்கூறிய எல்லா அம்சங்களையும் கடவுள் ஒருவரிடம் ஒன்றுசேர்த்து அமைப்பதென்பது அபூர்வத்திலும் அபூர்வமாகும். இறைவன் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுக்கு இந்த எல்லாச் சிறப்புக்களையும் அருளியிருக்கிறார் என்றால் அவரைத் தெய்வானுக்கிரகம் பெற்றவர் என்று கூறுவதில் என்ன தவறு?

விளையும் பயிர் முளையிலேயே தெரியும் என்பது போல் அந்தக் காலத்தில் ஸ்ரீமதி ஷண்முகவடிவு அம்மாள் வீணை வாசிக்க, சிறுமி சுப்புலக்ஷ்மி இனிமையாகப் பாடக் கேட்டிருக்கிறேன். சபாக் காரியதரிசிகள் நல்ல வசூல் வேண்டுமானால் எம். எஸ்ஸின் கச்சேரிக்கு ஏற்பாடு செய்வது அந்தக் காலத்திலேயே உண்டு.

சென்ற வருஷம் இதே மாதத்தில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் தம் கணவர் ஸ்ரீ சதாசிவம் அவர்களுடன் ஐ. நா. காரியதரிசி ஊதாண்ட் அவர்களின் அழைப்புக்கிணங்க ஐ. நா. சபையில் இசை விருந்தளிப்பதற்கு இருந்தார். சென்ற ஆண்டு இந்தியா — பாகிஸ்தான் உறவு நிலை மோசமாக இருந்த காரணத்தால் ஸ்ரீ சதாசிவம் அவர்கள் தமது மனைவியின் மேல்நாட்டுப் பயணத்தை ரத்து செய்து விட்டார். சென்ற வருஷம் நிறைவேறாத இந்த அரிய நிகழ்ச்சி கடவுள் கிருபையால் இந்த வருஷம் கைகூடியிருக்கிறது. வருகிற அக்டோபர் மாதம் 23ந் தேதியன்று ஐ. நா. சபையில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களது கானம் ஒலிக்கப் போகிறது. அத்துடன் அமெரிக்காவின் முக்கிய நகரங்களில் எல்லாம் அந்தத் தேசத்தார் அனைவரும் கேட்டு அநுபவிக்கும்படியாக அவரது கர்நாடக இன்னிசைக் கச்சேரிகள் நடக்கவிருக்கின்றன.

பாரதக் கலைகளிலே உன்னத ஸ்தானத்தை வகிக்கிறது நம் கர்நாடக சங்கீதம். மேனாட்டார் நமது இசையில் சிறிது காலமாக மிகுந்த ஆர்வம் காட்டி வருகிறார்கள். மேனாடுகளில் வாத்திய சங்கீதத்துக்கே அதிக முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்கள். நம் நாட்டிலோ வாய்ப்பாட்டு சங்கீதம் தான் முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. சில வருஷங்களாக அமெரிக்கப் பல்கலைக் கழகங்கள் சிலவற்றில் நம் சங்கீதக் கலைஞர்களை வரவழைத்துக் கர்நாடக சங்கீதத்தை நன்கு தெரிந்து கொள்வதில் ஊக்கம் காட்டி வருகின்றனர். ஆனால் அமெரிக்காவில் கர்நாடக சங்கீதத்தை வாய்ப்பாட்டுக் கச்சேரிகள் மூலம் இதுவரை யாரும் வழங்கியதில்லை என்று நினைக்கிறேன். ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் அமெரிக்காவுக்குச் செல்வது இதுவே முதல் தடவை. அது போல் அமெரிக்க மக்கள் ஸ்ரீமதி எம். எஸ்ஸின் கர்நாடக சங்கீதக் கச்சேரிகளை முதல் முறையாகக் கேட்கவிருக்கின்றனர். எனினும் முதலில் குறிப்பிட்ட எல்லாச் சிறப்பு அம்சங்களும் நிரம்பிய ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் நம் கர்நாடக இசையின் மேன்மையை அமெரிக்காவில் நிலைநாட்டிவிட்டு வருவார் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. நம் கர்நாடக இசையை மேல் நாட்டினரும் புரிந்து கொள்ளச் செய்து சிறப்பிப்



பதற்கு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களை விடப் பொருத்தமானவர் எவரும் இல்லை என்றே சொல்லலாம்.

## ஸங்கீத கலாநிதி
## ஸ்ரீ பாப்பா வேங்கடராமையா :

பாட்டைச் சொல்வதா, பண்பாட்டைச் சொல்வதா என்றே புரியவில்லை.

முதன் முதலில் திருவல்லிக்கேணி வாளாடி சுப்ரமண்ய அய்யர் சபையில்தான் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் கச்சேரியைக் கேட்கப் போனேன். இது சுமார் முப்பதைந்து வருஷங்களுக்கு முன்னால் இருக்கும். உள்ளேகூடப் போக முடியாதபடி கூட்டம் இருந்தது. எதற்குச் சொல்ல வந்தேன் என்றால் எம். எஸ். கச்சேரி என்றால் இப்போதுதான் இப்படிக் கூட்டம் என்பதில்லை. ஆரம்பம் முதலே இப்படித் தான். பண்டிதர்களும் சரி, பாமரர்களும் சரி, அப்படியோர் உற்சாகத்துடன் எம். எஸ். கச்சேரிக்கு வருவார்கள்.

பூர்வ ஜன்மத்தில் சுவாமிக்குக் குடம் குடமாகத் தேனபிஷேகம் செய்து பெற்ற சாரீரம் அவருடையது.



அதில் எந்த சாகித்யம் புகுந்து வந்தாலும் அது தேனாக இனிப்பதில் ஆச்சரியம் இல்லை.

இத்தனை பேரும் புகழும் அடைந்திருந்தும் ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்கு இன்னமும் எதையும் எவரிடமிருந்தும் கற்றுக் கொள்ளணும் என்கிற ஆர்வம் இருப்பதை எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லலாம். பிற வித்துவான்களிடம் குறையே காணாத குணம். நாமாக மற்றவர்களைப் பற்றிக் குறை சொன்னால்கூட அதில் தம்மைச் சம்பந்தப்படுத்திக் கொள்ளாத உயரிய தன்மை. தாயாரைப் போலவே மற்ற வித்வான்களைக் கௌரவிக்கும் பண்பு. அவரை அடைந்திருக்கும் இத்தனை புகழும் அவருடைய சங்கீதத்தின் உயர்வினால் மட்டுமல்லாமல் மேற்சொன்ன பண்புகளினாலும் வந்தடைந்திருக்க வேணும் என்றே எனக்குத் தோன்றுகிறது. ஸ்ரீமதி எம். எஸ்., ஸ்ரீ சதாசிவம் கோஷ்டியினரின் அமெரிக்க விஜயம் அமோக வெற்றி பெற பகவானைப் பிரார்த்திக்கிறேன்.

## ஸங்கீத கலாநிதி
## செம்மங்குடி ஸ்ரீ சீனிவாச அய்யர் :

இன்னிசையினால் மனித சமுதாயத்தை ஒன்று கூட்ட முடியும் என்று அறிஞர் பலரும் கூறுகிறார்கள். இந்த உண்மையை நிரூபிப்பதே போல வருகிற 23-10-66 அன்று நியூயார்க்கில் கூடவிருக்கும் ஐக்கிய நாடுகள் சபையின் கூட்டத் தொடரை நமது கர்நாடக சங்கீத விதுஷி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசையுடன் தொடங்குவது, நமது தேசத்துக்கும், அதிலும் தென்னிந்தியாவுக்கு எவ்வளவு பெருமை என்பது சொல்லிலடங்காது.

ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் இசைப்பணி கடந்த முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக இசை வானில் மங்காத நட்சத்திர ஒளியாகப் பிரகாசித்து வருவது பிரஸித்தமானது. இன்று இசையுலகில் ரஸிகர்கள் பெருமளவில் பெருகுவதற்குக் காரணமாகத் தொண்டாற்றியுள்ள வித்துவான்கள் விதுஷிகள் வரிசையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் முக்கியமான ஒருவர்.

ஸ்ரீமதி எம். எஸ். அவர்களுடைய சங்கீதம் கேட்போரை நாத வெள்ளத்தில் மிதக்கவிடும் சக்தியைப் பெற்றதாகும். இவரது சாரீரத்திலிருந்து வெளிப்படும் நாதத்தில் மனத்தை ஒருநிலைப்படுத்தும் வசிய சக்தியே இருக்கிறது என்று கூடக் கூறுவதுண்டு. பரிசுத்தமான ஸுநாதத்துடனும், ஸ்வர சுத்தத்துடனும் இடையிடையே நீண்ட கார்வைகளுடனும் ராகம் பாடும்போது ரஸிகர்களின் மனத்தைக் கவரும் காந்தசக்தியுள்ள இனிய சாரீரம் அவருடையது.

பரமலயமான சாரீர சம்பத்துடன் நல்ல துல்லியமான சுருதி ஞானமும் பாடும் பாட்டுக்களின் பொருளை நன்கு உணர்ந்து உருகிப் பாடுவதும், இவற்றால் கேட்போரையும் மெய்மறக்கச் செய்து விடுவதும் ஸ்ரீமதி எம்.எஸ். அவர்களது தனிச் சிறப்பு.





ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி அவர்களை இந்துஸ்தானி சங்கீத வித்வானான படேகுலாம் அலிகான் ஒரு சமயம் ''ஸுஸ்வரலக்ஷ்மி, சுபலக்ஷ்மி'' என்று புகழ்ந்து சொன்னதில் சிறிதும் மிகையில்லை.

இத்தனை திறமை இருந்தும் ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் தம்மை ஒரு மாணவியாகவே நினைத்துக் கொண்டு சங்கீத தேவதையை உபாஸிப்பதுடன், வித்துவான்களை மதித்துப் போற்றுவதும் மற்றவர்கள் கற்றுக்கொள்ள வேண்டியவையாகும்.



இன்று இசை உலகில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் ஓர் உன்னத ஸ்தானம் வகிக்கிறார் என்றால் அந்தப் பெருமைக்கு ஸ்ரீ சதாசிவம் அவர்களின் ஊக்கமே காரணம். அன்னாருக்குச் சங்கீதத்தில் உள்ள நல்ல ஞானமும், ஆசையும் மேலும் மேலும் எம். எஸ். அவர்களின் கலையை உரைத்து உரைத்துப் பிரகாசிக்கச் செய்கின்றன.

ஸ்ரீமதி எம். எஸ். அவர்களுக்கு ஏற்கனவே ஏராளமான கௌரவங்கள் கிடைத்திருக்கின்றன. இனி புதிதாக ஒன்றும் வேண்டுமென்பதில்லை. இருந்தாலும் நமது தேசத்தின் இசைச் செல்வத்தை மேல் நாடுகளில் நல்ல முறையில் பிரசாரம் செய்வதைத் தமது கடமையாகக் கொண்டு நமது நாட்டுக்குக் கலைத் தொண்டினால் பெருமையைச் சம்பாதித்து வரக் கருதி இந்த மேல்நாட்டு யாத்திரையை மேற்கொண்டிருக்கிறார்கள்.

ஸ்ரீ எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களைப் போன்று தெளிவும் இனிய சாரீரம் படைத்த கலைஞர்கள்தான் மேல் நாடுகளில் நமது அரிய கலையைப் பிரகடனம் செய்ய வேண்டும். இந்தப் பெரும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு அமெரிக்கா சென்றுள்ள ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ஸ்ரீ சதாசிவம் ஆகியோரை வாழ்த்துகிறேன்.

## கானகலாதர மதுரை மணி அய்யர்:

ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் சங்கீதத்தைப் பற்றி எவ்வளவு வேணுமானாலும் சொல்லுவேன். அவரைப் பற்றி மேலுக்குச் சொல்வதில்லை, மனதாரச் சொல்வது இது:

பாட ஆரம்பித்தால் தொட்ட இடமெல்லாம் சுருதி சுத்தம் என்றால் அது எம். எஸ். ஸின் பாட்டில்தான். சுருதியாகட்டும், ஸ்வரமாகட்டும், லயமாகட்டும், எல்லாம் எம். எஸ்ஸிடம் சுத்தம் சுத்தம்தான். சுகமான கார்வையோ, சவுக்ககால, மத்யமகால, துருதகால சங்கதிகளோ எதுவானாலும் அவரது பாட்டில் சுருதியை விட்டு இம்மியும் பிசகாமல் இருக்கும். அவரது சங்கீதம் மிக உயர்ந்த தரம்; அதுவும் இயற்கையாகவே அமைந்தது.

ரஸிகர்கள் எந்த இடத்திலிருந்து, எவ்வளவு தள்ளி யிருந்து கேட்டாலும் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி எந்த ஸ்தாயியில் பாடினாலும் மிகத் தெளிவாகக் கேட்கும்படியான அவரது சாரீர வளம் பிரமிக்கத் தக்கதாகும்.

இதெல்லாவற்றுக்கும் மேலாக, கர்நாடக சங்கீத சம்பிரதாய சுத்தத்துக்கு அவர் அளிக்கும் முக்கியத்துவம் போற்றத் தக்கது.

ஸ்ரீமதி எம். எஸ். அவர்களை அமெரிக்காவில் கச்சேரி செய்ய அழைத்திருப்பது நமது நாட்டுக்கு, குறிப்பாக நமது சங்கீதத்துக்கு அளிக்கப்படும் பெரிய கௌரவமாகும். அவர்கள் வெற்றியுடன் சௌக்கியமாக நாடு திரும்ப வேணுமாய்ப் பிரார்த்திக்கிறேன்.

## ஸங்கீத கலாநிதி
## ஆலத்தூர் ஸ்ரீநிவாச அய்யர் :

ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுடைய சங்கீதக் கச்சேரிகளை நாங்கள் முப்பத்தைந்து வருஷங்களுக்கு மேலாகக் கேட்டு வருகிறோம். அவர்கள் கர்நாடக சங்கீத உலகில் பெரும் புகழுடன் விளங்கி வருவதற்குக் கர்நாடக சங்கீதத்தில் அவருக்கு உள்ள ஆர்வமும், ஊக்கமும், உழைப்பும் உயர்ந்த நல்ல குணங்களும், பல வித்வான்களுடைய பரிபூர்ண ஆசிகளும், தெய்வானுக்கிரகமும்தான் காரணம். எல்லா வித்வான்களுடைய கச்சேரிகளையும் கேட்பது, ஒவ்வொரு சங்கீத வித்வானிடமும் அன்பும் மரியாதையும் வைத்திருப்பது போன்ற உயர்ந்த குணங்கள் அவருக்கு இயற்கையாகவே அமைந்தவை. சிறிதும் தற்பெருமை இல்லாமல் பொதுப் பணிகள், நல்ல காரியங்கள் எதுவானாலும் அதில் ஈடுபடுவது இவருக்கும், ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கும் உள்ள உயரிய பண்பாகும்.

ஆரம்ப காலம் முதல், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் சங்கீதத்தில், காலம் சென்ற மகாவித்வான் புதுக்கோட்டை ஸ்ரீமான் தட்சிணாமூர்த்தி பிள்ளை அவர்களுக்கும் இன்னும் பல சங்கீத வித்வான்களுக்கும் எங்களுக்கும் மதிப்பும் ஆவலும் உண்டு. ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் மேல் நாடுகளிலும் நமது கர்நாடக சங்கீதத்தின் பெருமையை நிலைநாட்டிப் புகழுடன் திரும்ப, எல்லாம் வல்ல சர்வேசுவரனைப் பிரார்த்திக்கிறேன்.

## ஸங்கீத ரத்ன
## மைசூர் டி. சௌடய்யா :

பாரதத் தாய் நமக்கு அளித்துள்ள இணையற்ற செல்வம் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி. ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தின் பொதுச் சபை மண்டபத்தில் சங்கீதக் கச்சேரி நிகழ்த்த அவர் அமெரிக்கா சென்றிருக்கிறார் என்பது நமக்கு மிகுந்த பெருமை தருவதாகும். ஸ்ரீமதி எம். எஸ். கர்நாடக சங்கீதத்தின் உண்மையான வடிவம். சங்கீத சுத்தம் என்பது அவருக்கே உரித்தான ஒன்று. அமெரிக்காவிலும் ஐரோப்பியத் தலைநகரங்களிலும் ஸ்ரீமதி எம். எஸ். இந்திய சங்கீதத்தின் கொடியை மிக உயரத்தில் பறக்கச் செய்வார் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. அவர் நமது சங்கீதத்துக்கும் நமது நாட்டுக்கும் பெரும் புகழ் தேடிக் கொண்டு வருவார் என்பதில் எனக்கு முழு நம்பிக்கை.



அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் கச்சேரிகள் நிகழும் நகரங்கள் இத் தேசப்படத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.

15
பிடித்தமான
வண்ணங்கள்

ஒவ்வொரு
வருக்கும்
ஏற்ற
விலை

JENSOLIN
PLASTIC
WALL FINISH
JENSON & NICHOLSON

புதிது!

BENSONS/JEN.49C T

# ஜென்ஸோலின் பிளாஸ்டிக் வால் பினிஷ்

## எண்ணெய் கலந்த டிஸ்டெம்பரைப் போல விலை குறைவு. இருந்தாலும் நன்ருக கழுவக்கூடிய, அதிக கவர்ச்சியான நிலைத்து நிற்கும் மெருகு.

**இதற்கு முன் உண்மையான பிளாஸ்டிக் அலங்கார பினிஷ் எதுவும் இவ்வளவு குறைந்த விலைக்கு இவ்வளவு அதிகம் கிடைத்ததில்லை**

இது மட்டுமல்ல, ஜென்ஸோலின் வால் பினிஷ் பிளாஸ்டிக் பொருள் உள்ளது — கவர்ச்சிகரமான, நிலைத்து நிற்கும் மெருகு தருகிறது. நன்ருக கழுவி சுத்தம் செய்யக்கூடியது; சுலபமாகப் பூசலாம், விரைவில் காய்கிறது, பிரஷ் சுவடே தெரியாது.

ஜென்ஸோலின் பிளாஸ்டிக் வால் பினிஷ் 15 அழகிய வண்ணங்களில் — பக்கத்து பெயிண்ட் கடையில் இப்போது கிடைக்கிறது. எளிய செலவுக்குத் தகுந்தபடி சவுகரியமான விலை. இந்தப் புரட்சிகரமான பிளாஸ்டிக் பினிஷைக் கொண்டு உங்கள் சுவர்களை அலங்கரியுங்கள் — வியப்பூட்டும் தரம், வியப்பூட்டும் விலை!




*தயாரிப்பு:*

**ஜென்ஸன் & நிகல்ஸன்** சிறப்பாக விற்பனையாகும் ரோபியாலாக் தயாரிப்பா.
ஜென்ஸன் & நிகல்ஸன் (இந்தியா) லிட். 7, அரண்மனைக்காரத் தெரு, சென்னை
7/219, அவனாசி ரோடு, கோயம்புத்தூர்

# இசையுடன் இசைந்து வாழ்க!



ஞானம்

எங்கணும் வள மிருந்தும்
இருள் அடர் மேலை நாட்டில்
துங்க மார் பார தத்தின்
சுடரொளி பரப்ப எண்ணி
இங்கிதம் அருளும் தெய்வ
இசையினை ஏந்திச் செல்வீர்,
மங்கலம் யாவும் பெற்று
மகிழ்வுடன் மீண்டு, வாழ்க!

கோதுமை கேட்டோம் அள்ளிக்
கொடுத்தனர், எல்லைப் போரின்
ஏதம் இங் குற்ற வேளை
எண்ணிலா உதவி ஈந்தார்
ஏது இவர்க் காற்றும் நன்றி
என்னவே எண்ணி, ஆன்ம
போதமே புரியும் பாடற்
புண்ணியம் அருளப் போவீர்.

வேலையின் அலையும், கங்குல்
வெள்ளியின் இமைப்பும், துள்ளும்
காலையின் கதிரும், பாடிக்
களித்திடுங் குயிலும், பச்சைச்
சோலையில் இலைகள் காற்றுச்
சுருதியில் முடையும் பண்ணும்
காலமும் உயிரும் காணும்
மாயமும், வானந் தானும்,

இசையெனில், அதனைப் போல
ஏற்றமும் உளதோ, மண்ணின்
நசையெலாம் நிறைவாய்த் தேற்றும்
நன்-மருந்(து) அதனின் உண்டோ?
விசையினால் இறைவன் என்னும்
விஞ்சையை விஞ்சிச் சூழும்
திசையெலாம், அவனே யாகத்
துலக்கிடும் சோதி உண்டோ?

விண்வெளி முழுதும் செல்லும்
விரகினைக் கற்றார் அங்கே
கண்முனே கட்டி வைத்துக்
கடவுளைக் காண்பார் உண்டோ?
எண்ணமே இன்றி ஒன்றில்
இசைவதும் உண்டோ? அந்தத்
திண்மையை நல்கச் செல்வீர்,
செம்மை உம் சிந்தை வெல்க!

உலகியற் காடும் உண்மை
உன்னத மாக ஓங்க,
அலகிலா அருளும்; மாந்தர்
அன்புமே மலர, வைய
நிலையெலாம் மாறுத் தெய்வ
நிலையுற, இன்பம் எங்கும்
இலகிடச் செல்வீர், என்றும்
இசையுடன் இசைந்து வாழ்க!




Surf
AMAZING BLUE POWDER
FOR THE WHITEST WASH!
வீட்டுச் சலவையின்
பெருமை:
ஸர்ப் சலவையின்
அருமை

# வெண்ணிலவுப் பெண்ணரசி

சோமு

## 4. தங்கப் புதையல்

மேற்குக் கடலிலே உள்ள வெள்ளைத் தீவு ஒரு காலத்தில் புத்தரின் அடியார்கள் பலர் தங்கியிருந்த ஒரு புண்ணிய நிலமாக இருந்தது. மாசில்லாத தூய வெண்மை நிறத்தைப் போல, அந்தத் தீவின் சீலம் துலங்கியதால், அதற்கு 'வெள்ளைத் தீவு' என்று யார் கொடுத்தார்களோ என்று எண்ணும்படி இருந்தது அந்தத் தீவின் சூழ்நிலை!

பதற்றமும், பரபரப்பும் மனித வாழ்க்கையின் தொல்லைகளும், தங்களை வந்து தாக்காதவாறு ஒதுங்கி வாழ்வ

தற்கு ஏற்ற ஒரு தீவாக அது விளங்கியதால், பௌத்தத் துறவிகள் பலரும் தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்தும் அங்கு சென்று குடியேறி அறத்தையும், சீலத்தையும் வளர்த்து வந்தார்கள். ''பிரிவேணைகள்'' என்று அழைக்கப்பட்ட பௌத்தப் பல்கலைக் கழகங்கள் இந்தத் தீவில் இயங்கிவந்த காரணத்தால், இலங்கையிலிருந்தும் தொலைதூர நாடுகளிலிருந்தும் புத்தரின் உபதேசங்களைக் கற்றுத் தேர்வதற்காகப் பல இளந் துறவிகள், வெள்ளைத் தீவுக்கு வந்து தங்கினார்கள். இந்தத் தீவின் புகழும் சிறப்பும் கடல் கடந்த நாடுகளிலும் பரவி, மக்களுடைய மனத்திலே இந்தத் தீவைக் குறித்து ஒரு பெருமையும் மதிப்பும் வளர்ந்து வந்தன!

'பெரிபுளூஸ்', பிளினியின் 'இயற்கை வரலாறு' தாலமியின் 'பூகோள விளக்கம்' போன்ற தொன்மையான மேனாட்டுச் சரித்திர நூல்களிலே தமிழகத்து வாணிபத் தொடர்பின் சிறப்பையும் தமிழ்நாட்டுக்குச் செல்லும் கடல் வழியையும் படங்களோடு விளக்கிச் சொல்லியிருப்பதைப் பார்த்த அந்தக் காலத்து யவனப் பெருமக்களும், மற்ற மேனாட்டு வணிகர்களும், தொண்டி, முசிறி போன்ற துறைமுகங்களுக்குத் தங்கள் மரக்கலங்களைச் செலுத்தி வந்து, நமது நாட்டிலிருந்து பல பொருள்களை மகிழ்ச்சியோடு வாங்கிச் சென்றனர்.

இப்படிச் செல்கிற வணிகர்களின் மரக்கலங்கள் வெள்ளைத் தீவைத் தொட்டுக் கொண்டே செல்வது வழக்கம்! புத்தபெருமானிடத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்ட பல வணிகர்கள் மரக்கலங்களை விட்டு இந்தத் தீவிலே

இறங்கி, இங்குள்ள துறவிகளுக்கு வணக்கம் செலுத்தி விட்டுப் போவது முக்கியமான ஒரு சடங்காக நடைபெற்று வந்தது. பெரிய பெரிய செல்வந்தர்களும், அரசச் சுற்றத்தினரும் இந்தத் தீவிலே பல நாட்கள் தங்கிக் கலைக் கழகங்களின் வளர்ச்சிக்கு வேண்டிய உதவிகளைச் செய்து கொடுப்பது வழக்கம். இதனால் இங்கிருந்த துறவிகள் எல்லாரும் ஆன்ம வளர்ச்சியில் நாட்டம் செலுத்தி, எவ்விதமான தொல்லைகளும் இல்லாமல், புத்தருடைய பாத நிழலிலே குளிர்ந்த நிலவை அநுபவித்துக்கொண்டிருந்தார்கள்! ஆனால் அதற்குமே ஒரு முடிவு காலம் வருவதாயிற்று!

வெள்ளைத் தீவில் ஏராளமான பொன்னும், பொருளும், நவரத்தின மணிகளும் குவிந்திருப்பதாக ஒரு செய்தி, கடற்பரப்பிலே மிதந்து செல்லத் தொடங்கிற்று! கொள்ளைக் கூட்டத்தாரின் பார்வை தீவின்மீது விழுந்தது!

நன்னர்கள் என்ற துளு நாட்டு மன்னர்களின் ஆதரவிலும் கூட்டுறவிலும் உருவாகிய கொள்ளைக்காரர்கள், வெள்ளைத் தீவில் வந்து குடியேறினார்கள். எதிர்ப்பே இருக்க முடியாத துறவிகளின் உலகம் அல்லவா வெள்ளைத் தீவு, எனவே திருடர்களுக்கு அது மிகவும் பொருத்தமான இடமாகப் போயிற்று! மாடங்கள் கொண்ட அரண்மனைகளும், கோட்டைகளும், பேரில்லங்களும் வெள்ளைத் தீவிலே வானளாவி எழுந்தன! பௌத்தத் துறவிகளோ இந்த ஆட்டபாட்டங்களிலிருந்து விலகி, காடுகளிலும், குகைகளிலும் ஒதுங்கி வாழ்ந்தார்கள்! 'கடம்பர்கள்' என்று தங்களை அழைத்துக் கொண்ட கொள்ளைக் கூட்டத்தார்கள், இந்த வெள்ளைத் தீவிலே கடம்ப மரத்தையே தங்களுடைய காவல் மரமாக நட்டு நிறுத்திக் கொண்டு தங்கள் ஆட்சியை நடத்தலானார்கள்! கடல் தண்ணீருக்கு அருகிலே நல்ல தண்ணீர் இருப்பது போல, கடல் கொள்ளைக் கூட்டத்தாருக்கு அருகிலே தூய பல துறவிகள் வாழ்ந்தார்கள். இப்படிப் பல ஆண்டுகள் உருண்டன!

தமிழகத்தில் அறமும் அன்பும் வீரமுமே குறிக்கோளாகக் கொண்டு, புண்ணிய ஆட்சி நடத்தி வந்த பெரிய அரசர்களுக்கு நடுவிலே இப்படிச் சில குறுநில மன்னர்களும், நன்னரையும் கடம்பரையும் போலக் களைகளாக முளைத்து வளர்ந்து செழித்தார்கள்! இவர்களிலே ஒருவன்தான் வான மண்டலக் கடம்பன். ''வானவரம்பன் சேரலாதன்'' என்று சேர அரசனுக்குப் பெயர் இருப்பது போல, இந்தப் போலி மன்னனும் தன்னை ''வான மண்டலக் கடம்பன்'' என்று அழைத்துக் கொண்டான்! இவனுடைய பெயரும் மற்றத் தமிழகத்து அரசர்களின் பெயரைப் போலவே மேனாடு வரை சென்றது! சென்று யவன வணிகர்களை யெல்லாம் அச்சமுறுத்தியது!

நாளாக நாளாக வெள்ளைத் தீவுக்கு வந்து இறங்கும் வணிகர்களின் தொகை குறைந்தது. மேற்குக் கடலிலே வருகிற மரக்கலங்கள் வெள்ளைத் தீவை அணுகும் போது பதற்றம் கொள்ளுகிற அளவுக்குக் கடம்பனின் புகழ் கடலிலே பரவியது! முழுநிலா இரவுகளில் கடற்பரப்பிலே துணிந்து கொள்ளையடிக்கும் கடம்பக் குறும்பர்களைப் பற்றி, யவன அறிஞர்கள் எல்லாரும் வரலாற்றிலே எழுதி வைக்கிற அளவுக்கு, வான மண்டலக் கடம்பன் தனது கொள்ளை ஆட்சியை நடத்தினான்!

ஒரு நாள் இரவு. கடம்பன் தனது அரண்மனையிலிருந்து வெளியே கிளம்பித் தன் பார்வையைப் பௌத்தப் பள்ளியின் பக்கமே செலுத்தத் துணிந்தான்! இதுவே அந்த வெள்ளைத் தீவுக்கு ஒரு பெரிய வினையாக முடிந்தது!

மெதுவாக நடந்து தன்னந்தனியே சென்ற வான மண்டலக் கடம்பன், சமண முழைக்கு அருகிலே வந்தான். அன்று வளர்பிறை, பன்னிரண்டாம் இரவு!

துறவி ஒருவர் சமண முழைக்கு வெளியே நின்று, வானத்தையும், மாநிலத்தையும், விண்மீன்களையும்,— கூர்மையாகப் பார்த்து ஏதோ மனக் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தார். அரசன் வருவதை அவர் பார்க்கவில்லை. பார்த்திருந்தாலுமே என்ன? துறவிக்கு அரசனும் ஆண்டியும் ஒன்று தானே அல்லவா?

தான் வந்து நிற்பதைப் பாராமல் தம்முடைய மனக் கணக்கிலே துறவி ஈடுபட்டிருந்தது, கடம்ப மன்னனுக்குப் பிடிக்கவில்லை. அந்த வெள்ளைத் தீவு முழுவதற்குமே வேந்தனாக விளங்குகிற தன்னை, ஒன்றுக்கும் பற்றில்லாத ஒரு துறவி வரவேற்கவில்லையே என்று ஆத்திரம் ஏற்பட்டது வானமண்டலக் கடம்பனுக்கு! ஆனாலும் ஆத்திரத்தையும் சீற்றத்தையும் வெளியே காட்டிக் கொள்ளாமல் மனத்துக்குள் அடக்கிக் கொண்டு, துறவிக்கு அருகிலே சென்றான் கடம்பன்.

''என்ன துறவியாரே, உடல் நலம் எப்படி?'' என்று கேட்டான் கடம்பன்,

பரவசமூட்டும்
பரிமளமுள்ள பவுடர்

# பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்




**இந்த ஒப்பற்ற பவுடர் உங்களை நாள்முழுவதும் நறுமணத்துடனும் இன்ப உணர்ச்சியுடனும் வைக்கும்**

வறுத்தெடுக்கும் வேனலிலும்கூட வசந்த காலையின் இனிய புதுமையையும் மாலைத் தென்றலின் கிளுகிளுக்கும் குளுமையையும், உடலைத் தழுவி நிற்கும் நறுமணத்தையும் தரக்கூடிய அலாதி பவுடர் பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்! வியர்வையின் அருவருப்பிலிருந்து அது உங்களுக்கு விடுதலையளிக்கும். அதை உடல் மீது தாராளமாகத் தூவிக் கொண்டால் பொங்கும் ஆனந்த லாகிரியில் பூரித்துப் போவீர்கள். நீங்கள் மட்டுமல்ல, உங்கள் வீட்டில் உள்ள எல்லோரும் தான்!

*சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்*
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏயில் இணைக்கப்பட்டது)

JWT P 4596(R)

கேள்வியிலே ஒரு நகையோடு. ''உடம்பு எப்படி இருக்கிறது?'' என்று கேட்பதாக நினைப்பு!

முனிவர் சிரித்தார், பாதி மனம் சிந்தனை உலகிலும், பாதி மனம் வெளி உலகிலுமாக! மனக்கணக்கிலிருந்து இன்னும் முழுவதும் வெளியே வரவில்லை அவர்.

''அடிகளே! இந்த நள்ளிரவில், இங்கே நின்று என்ன செய்துகொண்டிருக்கிறீர்? வானையும், வையத்தையும் இணைப்பதற்காகப் பாலம் கட்டுகிறீரா? மனக் கணக்கு மிகவும் கடுமையாக இருக்கிறதே!'' என்றான் கடம்பன்.

''கோளின் நிலையை வான மண்டலத்தைப் பார்த்து ஆராய்கிறேன்!'' என்று மறுமொழி சொன்னார் துறவி.

''ஓ! சோதிடமா! சரி சரி. குடி தண்ணீருக்கு ஒரு கிணறு வெட்டலாம் என்று நினைத்து, இந்தக் குகைக்குப் பக்கத்திலே நல்ல ஊற்று எங்கே இருக்கிறது என்று நிலவிலே தேடிக் கணக்குப் போடுகிறீர் என்றல்லவா நினைத்தேன்!'' என்றான் மன்னவன்!

''கிணறுதானே? ஊற்றுத்தானே? ஆனால் அதில் ஒரு சிக்கல் இருக்கிறது!'' என்று சொன்னார் முனிவர்.

''சிக்கலா, அது என்ன முனிவரே?'' என்று அரைச் சிரிப்போடு ஏளனமாகக் கேட்டான் கடம்பன்.

''மன்னனே! அதோ தெரிகிறதே ஒரு பாழடைந்த கிணறு, அதற்கு உள்ளேயே ஒரு நல்ல ஊற்றுக் கண் இருக்கிறது. இந்தத் தீவு முழுவதற்கும் வேண்டிய தண்ணீர் அதுவே தரும். ஆனால் அந்தப் பாழ்வெளிக்குக் கீழே ஒரு புதையல் இருக்கிறது. பெரிய தங்கப் பானை ஒன்று. அது அந்த ஊற்றுக் கண்ணை அடைத்துக் கொண்டிருக்கிறது!'' என்றார் துறவி.

துறவி இப்படிச் சொன்னதில் ஏதோ ஒரு தத்துவப் பொருள், உட்பொருள் இருந்திருக்க வேண்டும். ஆனால் வான மண்டலக் கடம்பன் தத்துவங்களைப் பற்றிக் கவலைப்படவில்லை. முனிவரின் சொல்லுக்கு மறு சொல் பேசினான்.

''துறவியாரே! இவ்வளவெல்லாம் கணக்குப் போட்டுப் பார்க்கிறவருக்கு, ஊற்றுக் கண்ணைத் திறப்பதும், அந்தப் புதையலை வெளியே எடுப்பதுந்தானா, பெரிது! அதற்கு நீங்களே ஒரு வழி சொல்லலாமே!'' என்று கேட்டான் மன்னவன்.

''மன்னனே! புதையலாக உள்ள அந்தத் தங்கப் பானைக்குள்ளே பொற்காசுகளும் நவரத்தின மணிகளுமாக நிரம்பியுள்ளன. மதிப்பு வாய்ந்த மாபெரும் புதையலாக இருப்பதால், ஒரு பெரிய பூதம் இந்தப் புதையலைக் காவல் காத்துக் கொண்டிருக்கிறது!''

''பூதம் காவல் காக்கிறதா? கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாக இருக்கிறதே!'' என்றான் வான மண்டலக் கடம்பன் ஏளனத்தோடு!

''ஆமாம். இரவும் பகலும் அறுபது நாழிகையும், அங்கு இங்கு அசையாமல் தங்கப் பானைக்கு அருகிலேயே நின்று காவல் புரிகிறது அந்தப் பூதம்! அதற்கு ஒரு நரபலி வேண்டும் என்று கேட்கிறது. அதைக் கொடுத்தால் ஒழியப் பானை வெளியே கிளம்பாது!'' என்றார் துறவி.

''அப்படி என்றால்?''

''மனித உயிர்! அதைக் கேட்கிறது பூதம்! கொல்லா விரதத்தை நோன்பாக நோக்கும் ஒரு துறவியிடம் மனித உயிரைக் காணிக்கை கேட்டால் அதன் பொருள் என்ன? இதைப் பற்றி நாள் தோறும் அந்தப் பூதத்தோடு வாதாடிக் கொண்டிருக்கிறேன். பயனில்லை!'' என்றார் துறவி.

''மனித உயிரைக் காணிக்கை செலுத்தினால் புதையலைத் தந்துவிடுமா அந்தப் பூதம்?'' என்று கேட்டான் கடம்பன்.

''ஆமாம். அப்படித்தான் சொல்லுகிறது அது!'' என்று கூறி நின்றார் துறவி.

பளீர் என்று இடுப்பிலே செருகிய உறையிலிருந்து வாளை உருவினான் வானமண்டலக் கடம்பன். ஒரு நொடியில் அப்படியே துறவியின் மீது பாய்ந்தான்! வாளால் அவருடைய தலையை வெட்டிச் சாய்த்துக் கீழே தள்ளினான் அந்தக் கொடிய கடம்பன்!

''பூதமே! இதோ நீ கேட்ட மனித உயிர். இப்போது சொல், உன்னுடைய புதையல் எங்கே இருக்கிறது?''

இவ்வாறு கூச்சலிட்டான் கடம்பன். அவ்வளவுதான்! பாழும் கிணற்றிலிருந்து 'கலகல' வென்று மணியோசை கேட்டது. ஆயிரம் தங்கக் கிண்கிணிகள் ஒலிப்பது போல இருந்தது அந்தப் பொன்னொலி! கடம்பன் கிணற்றின் விளிம்புக்கு ஓடினான்.

'குபுகுபு' என்று பால் போன்ற வெண்புனல் அந்தக் கிணற்றிலிருந்து பொங்கி வந்தது. அந்தத் தண்ணீருக்கு மேலே ஒரு பெரிய தங்கப் படகு போல மிதந்து வந்தது பொற் பானை!

கிணற்றின் வரம்புச் சுவர் மீது சாய்ந்து, தலையை வளைத்து, அந்தப் பானையை வெளியே எடுப்பதற்குக் கைகளை நீட்டினான் வான மண்டலக்

> ஒரு நல்ல காரியத்திலிருந்து மற்றொரு நல்ல காரியம் வருகிறது; பாலிலிருந்து வெண்ணெய் வருவதுபோல.
>
> - ஓர் எகிப்திய பழமொழி
>
> அனுப்பியவர்: சின்னன்

கடம்பன்! அவனுடைய கை, இரத்தக் கறை படிந்த அந்தக் கொடிய கை, பானையைத் தொட்டதுதான் தாமதம். அதனுள்ளிருந்து குளவிகளும், வண்டுகளும், தேனீக்களும் 'பொல பொல' என்று கிளம்பி வந்து கடம்பனின் தலையிலும், கண்களிலும், கழுத்திலும், கைகளிலும் கொட்டின! ஆயிரம் வண்டுகள் அவனுடைய தலையைச் சுற்றி 'ரீம் ரீம்' என்று வட்டமிட்டன!

உருவிய வாளைச் சுழற்றினன். குதித்தான். சுற்றிச் சுற்றி விசினன். குளவிகள் அவனுடைய நெற்றியிலும், காதுகளிலும், 'விண் விண்' என்று கொட்டின. ஆயிரம் தேனீக்கள் கடம்பனுடைய கைகளைப் பற்றின!

தங்கப் பானையிலிருந்து பிடியை உதறினன் கடம்பன். மாபெரும் ஓசையோடு அந்தப் பானை கிணற்றுக்குள்ளே விழுந்து பாறையிலே போய் மோதியது. அடுத்த விஞடியில் தூய்மையான தண்ணீர் கிணற்றிலிருந்து வெளியே சாடியது. சுவரையும் வரம்பையும் மீறித் தரையிலே பெருக்கெடுத்தது!

ஓடினன் கடம்பன், அந்த இடத்திலிருந்து! ஓட ஓட அவனைத் துரத்தின, குளவிகளும், வண்டுகளும், தேனீக்களும்! நீண்ட நெடுந் தொலைவுக்கு வந்து திரும்பிப் பார்த்தான் அரசன்! பாழுங் கிணறு நின்ற இடத்தில் தண்ணீர் வெள்ளமாய்ப் பெருகி, இப்போது ஒரு பெரிய சுனையாக மண்டலமிட்டுக் கொண்டிருந்தது!

மனித நடமாட்டமில்லாத நள்ளிரவில், அந்தக் காடுகளையெல்லாம் கடந்து வேகமாக அரண்மனைக்கே வந்து சேர்ந்தான் வானமண்டலக் கடம்பன்.

குளவிகள் கொட்டின இடமும், தேனீக்கள் பற்றிய தடமும் வேதனை தந்தன. ஏதேதோ எண்ணெய்களை எடுத்துப் பூசிக் கொண்டு படுக்கையிலே படுத்தான். ஆனலும் குளவிகளும் தேனீக்களும் அவனை விட்டபாடாக இல்லை. மனப் பாதையிலே அவை அவனைப் பின்தொடர்ந்தன. மன உலகிலே அவனுடைய உணர்ச்சிகளைக் கொட்டிக் கொண்டே இருந்தன அவை!

இது நடந்த பிறகு கடம்பன் சமண முழையின் பக்கமோ அல்லது பௌத்தப் பள்ளியின் அருகிலோ போவதில்லை. ஆனல் முழு நிலா இரவுகளில் கடல் மீது சென்று, கணக்கற்ற பொற்காசுகளோடும், நவரத்தினக் கற்களோடும் மிதந்து செல்கிற யவன மரக்கலங்களைக் கொள்ளையடிப்பது மேலும் மும்முரமாயிற்று. பொற்பானையிலிருந்து தனக்குக் கிடைத்திருக்க வேண்டிய செல்வங்கள் எல்லாம், தங்கப் பானையிலிருந்து தவறிப் போன புதையல் எல்லாம், மரக்கலக் கொள்ளையிலிருந்து சேர்த்துவிட வேண்டும் என்று ஒரு பேராசை கடம்பனுக்கு உண்டாயிற்று!

கொள்ளைக் கூட்டத்தாரின் தாக்குதல், வெள்ளைத் தீவுக்கு அருகிலே மிகவும் கடுமையாகி இருக்கிறது என்று, யவன வணிகர்கள், எகிப்திலும் ரோமாபுரியிலும் போய் முறையிட்டார்கள். அந்த நாட்டு அரசச் சுற்றத்தார்களும், வணிகப் பெருமக்களும், கடற்பயணம் செய்கிற அறிஞர்களும் தமிழக வேந்தர்களுக்கு முறையீடு அனுப்பினர்கள். ஒன்றிலும் பயனில்லை. வானமண்டலக் கடம்பனும் அவனுடைய கூட்டத்தார்களும், நன்னர்களின் ஆதரவிலே தங்கள் தாக்குதல்களை மேலும் மேலும் வன்மையாகத் தொடர்ந்து நடத்தினர்கள்.

வெள்ளைத் தீவின் அடர்ந்த காட்டிலே இருந்த குகைகளில் வாழ்ந்து, தங்களுடைய ஆராய்ச்சிகளை நடத்திக் கொண்டிருந்த துறவிகளுக்கு, இந்த நடப்புக்கள் அனைத்தும் தெரியவந்தன. சிலர் அந்தத் தீவை விட்டு மிதவைகளிலே சென்று ஒதுங்கினர்கள். சிலர் காட்டுக்குள்ளேயே இன்னும் தொலை தூரம் புகுந்து சென்று, மேலும் ஒதுங்கி வாழ்ந்தார்கள்! கடம்பர்களின் தாக்குதலுக்குத் தப்பி ஏதோ ஒன்றிரண்டு பயண மரக்கலங்களிலே ஏறிச் சில துறவிகள் சேரநாட்டுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். மற்றத் துறவிகள் எல்லாம் மூன்று காலங்களையும் ஊடுருவிப் பார்த்து உரிய காலத்துக்காகக் காத்திருந்தார்கள்!

ஒரு நாள் இரவு வானமண்டலக் கடம்பன் ஒரு கனவு கண்டான். தான் கடல் மீது செல்வது போலவும், அப்போது யாரோ ஒரு துறவி உருவிய வாளுடன் தன் மீது பாய்ந்து, தலையைச் சீவி விடுவது போலவும் கனவு கண்டு பதறி விழித்தான். கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டு மறுபடியும் படுத்தான். உறக்கம் வரவில்லை. ''துறவியாவது, உயிர்க்கொலை செய்வதாவது!'' என்று சொல்லிக் கொண்டே தனக்குள்ளேயே சிரித்தான். புரண்டு புரண்டு படுத்தான்.

ஆனாலும் நெஞ்சுக்குள்ளே வாளின் முனை குத்தியது !

ஒரு மாதம் கழிந்தது. மறுபடியும் ஒரு நாள் நள்ளிரவில் தலையைச் சுற்றி வண்டுகள் 'ரீம் 'ரீம்' என்றன. பதறி விழித்தான். சுற்று முற்றும் பார்த்தான். 'வெறும் மன மயக்கம்' என்று சொல்லி உறங்க முயன்றான். உறக்கம் வரவில்லை.

பின்னொரு நாள். நடுநிசியில் படுக்கை அறையை விட்டு வெளியே வந்தான். நேரே கன்னி மாடத்துக்குச் சென்று கதவைத் தட்டினான்.

ஓசை கேட்டுப் பதறி விழித்தாள் நீலவல்லி! மணிமாலை கதவுக்கு அருகிலே சென்று குடுமியின் பாழிக் கண் வழியாகப் பார்த்தாள். ''ஐயோ அரசர் !'' என்று பதறிக் கொண்டே நீலவல்லியின் அருகே ஓடி வந்தாள். பரபரப்போடு எழுந்து போய்க் கதவைத் திறந்தாள் நீலவல்லி.

உள்ளே சென்றான் வான மண்டலக் கடம்பன். விளக்கொளியில் மகளைப் பார்த்ததும் தெளிவு ஏற்பட்டது போல அங்கிருந்து நகர்ந்தான் அரசன். நீலவல்லி தந்தையின் முகத்தைப் பார்த்தாள். மனத் துயரை மறப்பதற்காக, அளவுக்கு மீறி யவன மதுவை அருந்திச் சிவந்து போயிருந்த அரசனின் அகன்ற கண்களைக் கூர்ந்து பார்த்தாள். அந்தக் கண்களிலே மது மயக்கத்துக்கு மேலே ஓர் இனம் புரியாத அச்சம், ஒரு தவிப்பு, பாசி போலப் படர்ந்திருந்தது! 'பேய் அறைந்தது போல' என்று சொல்லுவார்களே, அப்படி ஒரு தோற்றம், அடிபட்ட ஒரு பதற்றம், அந்த முகத்திலே கண்டு நீலவல்லி உள்ளம் பதறினாள்!

''ஒன்றுமில்லை, வல்லி! யாரோ ஒரு துறவி இந்தக் கன்னிமாடத்துக் கதவைத் திறப்பதுபோல ஒரு காட்சி தெரிந்தது. வெறுங் கனவு. அதுகூட இல்லை! வயதாகிற தல்லவா? ஒரு மனத் தளர்ச்சி. மன மயக்கம். அவ்வளவுதான்!'' என்று சொல்லிக் கொண்டே அரசமனைக்குத் திரும்பினான் வானமண்டலக் கடம்பன்.

நெடுநாட்களுக்கு முன்பு நடந்த ஒரு நிகழ்ச்சி காரணமாக வாழ்வில் இதுவரை திருமணமே செய்து கொள்ளாமல் தனியாகவே காலம் கழித்து வருவதைப்பற்றி அன்றுதான் முதன் முதலாக ஆழ்ந்து எண்ணிப் பார்த்தான் வானமண்டலக் கடம்பன்! 'என்ன பைத்திய நினைப்பு இது! இத்தனை மெய்காவலர்கள் இருக்கும் போது, இத்தனை வீரர்களுக்கு மேலாக ஒரு பட்டத்தரசி இருந்து என்ன பாதுகாவல் செய்துவிடப் போகிறாள் என்னை!' என்று தனக்குள்ளேயே ஒரு மதிப்புரை! அதைத்



தொடர்ந்து ஓர் ஏளனச் சிரிப்பு! பிறகு யவன மது! மறுபடியும் உறக்கம்!

மறுநாளிலிருந்து வான மண்டலக் கடம்பனுடைய நடத்தையில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. மீகாமன் என்ற மரக்கலத் தலைவனோடு கடம்பன் கொண்டிருந்த நட்பு இன்னும் நெருக்கமாயிற்று. மதுப் பழக்கம் மேலும் அதிகமாயிற்று. கடல்மீது செல்லாத இரவுகளில் வான மண்டலக் கடம்பன் தன் நினைவோடு இருப்பதே அரிதாயிற்று! நள்ளிரவில் படுக்கையை விட்டு எழுந்து தள்ளாடுவதும், கதவுகளைத் திறந்து கொண்டு வெளியே வந்து நிலா முற்றத்தில் நடந்து கீழே விழுவதும், நிகழலாயின! சில இரவுகளில் குடிமயக்கில் தூங்கும் போதுகூடப் பதறி விழித்து, ''விடுங்கள்! என்னைவிடுங்கள் துறவியாரே ! என்னை விட்டுவிடுங்கள்! ஐயோ! அந்தக் குளவிகளை, அந்த வண்டுகளை விரட்டுங்கள்!'' என்று ஏதேதோ புலம்புவதாக அரசனுடைய மெய்காவலர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்!

வான மண்டலக் கடம்பனுடைய குழப்பங்கள் இவ்வாறு நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டிருந்தபோது, ஒரு முழு நிலா இரவிலே கடல் மீது சென்றவன், தன்னுடன் மீகாமனையும் அழைத்துக் கொண்டு வந்தான்! அரண்மனைக்கே அழைத்துக் கொண்டு வந்தான்! இருவரும் இரவு முழுவதும் உறங்கவில்லை. யவன மதுவைக் குவளை குவளையாகப் பருகிக் கொண்டே ஏதோ மிகவும் ஆயமான பெரியதொரு சூழ்ச்சியைப் பேசிக் கொண்டிருந்தார்கள். பொழுது விடிந்ததும், முரசுத் தலைவனை அழைத்தான் வானமண்டலக் கடம்பன்!

''நம்முடைய வெள்ளைத் தீவில் உள்ள துறவிகள் அனைவரையும் இன்று மாலைக்குள் இந்தத் தீவை விட்டு வெளியேற்றிவிட வேண்டும் என்பது நமது உத்தரவு. அரச ஆணை! மீகாமனுடைய மரக்கலம் இன்றிரவு நமது தீவிலிருந்து புறப்படுவதற்கு ஆயத்தமாக நிற்கும். அதற்குள் காவி அணிந்த ஒரு ஈ காகங்கூட இந்தத் தீவில் மீதம் இராதபடி எல்லாம் மரக்கலத்தில் ஏறி ஆக வேண்டும்! ஏற்றி ஆகவேண்டும்! இப்போதே முரசுகளை முழக்கி அறிவிப்புச் செய்!''

இவ்வாறு கட்டளை இட்டான் கடம்பன்! அதன்படி அந்த வெள்ளைத் தீவு முழுவதும் சென்று முரசுகளை முழக்கினார்கள்! அறிவிப்புகளை ஓலமிட்டார்கள்! அன்று பொழுது சாய்வதற்குள் வெள்ளைத் தீவு பட்டபாடு! ஆயிரம் ஆயிரம் வீரர்கள் — வீரர்களா அவர்கள், வெறியர்கள், திருடர்கள், குறும்பர்கள், கொலைகாரர்கள்—ஒன்று சேர்ந்து, ஈட்டியும், வேலும், வாளும், குந்தமும் ஏந்திய கைகளோடு குகை தோறும், சென்று சென்று, நுழைந்து, நுழைந்து, அந்தப் பேரறிவாளர்களை அந்தத் தவமா முனிவர்களை, அந்தத் துறவுச் சான்றோர்களை எல்லாம், எப்படி எப்படி எல்லாமோ துன்புறுத்தி மீகாமனுடைய மரக்கலத்திலே ஏற்றினார்கள். ஒதுங்கியவர்களையெல்லாம் வற்புறுத்தினார்கள். தங்கள் ஆசிரியருக்கு இழைத்த துன்பத்தைக் கண்டு வெகுண்ட சீடர்களை யெல்லாம் வதைத்தார்கள். என்னென்னவோ— செய்தார்கள். தலையைத் தூக்கியவர்களை யெல்லாம் அப்படியே தரையோடு தரையாகத் தேய்த்து மெழுகினார்கள் கடம்ப வீரர்கள்!

மரக்கலம் வெள்ளைத் தீவிலிருந்து புறப்பட்ட போது வானமண்டலக் கடம்பனே அங்கு போய் நின்று கொண்டான். ''துறவிகள்! துறவிகள்! துறவிகள் என்ற சொல்லே இனி இந்த வெள்ளைத் தீவில் ஒலிக்காது!'' என்று கூச்சலிட்டான்!

அன்றிரவு இத்தனைக்கும் மணிமுடி சூட்டியது போல், கடம்ப மன்னன் தனது அரண்மனையை விட்டு வெளியே வந்து வெள்ளைத் தீவில் உள்ள சோலைகள், நந்தவனங்கள், தவச் சாலைகள், பள்ளிகள் முதலிய எல்லா இடங்களிலும் சென்று, துறவிகளின் வெளியேற்றம் சரியாக நடந்திருக்கிறதா என்று மேற்பார்வை செய்தான்! பிறகு அரண்மனைக்குத் திரும்பி வந்து படுக்கையிலே படுத்தான். நன்றாகத் தூங்கினான். நிம்மதியோடு உறங்கினான்! எதிர்காலத்தைப் பற்றி அவனுக்கு என்ன தெரியும்! 'பூதம்' என்றும் 'புதையல்' என்றும் சொல்லித் தன்னுடைய உயிரையே ஒரு துறவி காவு கொடுத்ததில் எத்தனை உட்பொருள் இருந்தது என்பதைப் பிற்கால நிகழ்ச்சிகளே உணர்த்தின.



**ம**ண்டபத்தின் படிக்கட்டிலே உட்கார்ந்து, வேலவன் கோதையிடம் வானமண்டலக் கடம்பனின் வரலாற்றைச் சொல்லிக் கொண்டே வந்த நீலவல்லி, அவனுடைய நள்ளிரவுக் கனவுகளையும், அந்தக் கனவுகளால் ஏற்பட்ட அவனுடைய மனக் கொந்தளிப்புக்களையும் சொல்லும்

பெறுவீர் ஒரு கேவார்ட்

# கேவாபாக்ஸ்

அதன் உயர்வேக ஒளித் தடுக்குத் திரையின் அருஞ் செயல் **துரிதமான,** இமைக்கும் நேரத்தில் வரும் படங்கள்

கேவாபாக்ஸ் 3 வேக நிலைகள் உடையது- பல்பு, விநாடியிலே 1/50 பங்கு, 1/100 பங்கு: அதனால் நீங்கள் பெறும் வாய்ப்புகளை யோசித்துப் பாருங்கள். குழந்தைகள், செல்லப் பிராணிகள், ஆட்டத்தின் சிறப்புப் பகுதிகள், வண போறளம் அல்லது கூட்டத்தின் உச்ச கட்டம்- எதையுமே படமெடுக்கலாம்.

உச்சநிலைக்கு உயர்த்தும் கேவாபாக்ஸ் சிறப்பியல்புகள்:

- உறுதியான அழகு கவிகைக் கூடு- முழுவதுமே அதி உன்னத எஃகினாலானது.
- கணக்கான காம்பொஸிஷனோடு விருக்கென்று எளிதில் படமெடுக்க உதவும் பளிச்சென்ற, தெளிவுள்ள விழிமட்ட வியூஃபைண்டர்.
- 2 அபெர்ச்சர்கள் (F11 மற்றும் F16) ஆழத்தை ஃபோக்கஸ் செய்யும் பொருட்டு.
- சேர்த்தியான நீள் சதுரப் புகைப்படங்கள்- ஒவ்வொன்றும் 6செமீx9செமீ. தன்னொத்த காமிராக்களில் கிடைப்பதைவிட 50% பெரியவை. மிக மேம்பட்ட என்லார்ஜ்மெண்டுகளுக்கு வழியமைப்பவை.

தவிர, கேவாபாக்ஸ் இயக்க எளிதானதே. ஒரு கிளிக் அடித்தால் போதும்- மீதியை கேவாபாக்ஸ் முடித்துவிடும். உங்கள் விற்பனையாளரை இயக்கிக் காட்டச் சொல்லுங்கள். விலை: ரு 44.00.






## கேவார்ட்
# கேவாபாக்ஸ்



ஆக்பா-கேவார்ட் இந்தியா லிட்.
கஸ்தூரி பில்டிங், ஜாம்ஷெட்ஜி
டாடா ரோடு, பம்பாய்-1.

Benson/JT-AGIL-3 TM

# வலிதான் எங்கள் பிரச்சினை...

## உங்களுக்கு நாங்கள் உதவக்கூடிய விதம் இதுதான்!

ஆராய்ச்சி: 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் ஒரு ஆராய்ச்சிக் குழுவின் தலைமை வகிப்பவன் நான். எங்களுடைய பணி வலியை நிறுத்த மேன்மேலும் சிறந்த முறையைக் கண்டுபிடிப்பதே. இந்தப் பிரச்சினையில் ஆழ்ந்த நோக்கம் கொண்டுள்ள உலகத்தின் முதன்மையான பல கழகங்களுள் எங்களுடையதும் ஒன்று. வலிக்கு, இக்காலத்தில், சிறந்த ஒரே விடை 'ஆஸ்ப்ரோ' பார்முலா தான் என்பதை நாங்கள் இன்று அறிவோம்.

சமீபத்தில், அமெரிக்க அரசாங்கத்தின் ஆதரவில் நடைபெற்ற சோதனைகள் 'ஆஸ்ப்ரோ'வினுள்ள சுறுசுறுப்பாக இயங்கும் கூட்டுப் பொருள்தான் மிகவும் துரிதமான மற்றும் பயனுள்ள வலிநிவாரணி என்று தெளிவாக நிரூபித்துள்ளன. அதனால்தான் அது உலக முழுவதும் உள்ள டாக்டர்களாலும் ஆஸ்பத்திரிகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

வலி என்பது என்ன? உயிர்ப்பொருள், உடல் வேகத்திற்கும் மேலாக, மிக விரைவாகத் திசுக்களில் சேர்ந்து குவிந்து, ஒரு "மறைமுகமான" வீக்கத்திற்குக் காரணமாகிவிட அது நரம்புகளை அழுத்துவதின் மூலம் வலி ஏற்படுகிறது.

'ஆஸ்ப்ரோ' இயங்குவது எப்படி? 'ஆஸ்ப்ரோ' உடனடியாக இரண்டறக் கலந்துவிடுகிறது—வீக்கத்தை நீக்கி—நரம்புகளின் மீதிருக்கும் அழுத்தத்தைப் போக்கி—வலியை வெளியே இழுத்துவிடுகிறது.

இவைகளுக்கு 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: வலி • தலை வலி • உடல் வலி • பல் வலி • மூட்டு வலி • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • ஃப்ளு • டெங்கு.




A.G.36.66 TAM

**'ஆஸ்ப்ரோ'** வலியை வெளியே இழுத்துவிடுகிறது!

போது, பல இடங்களில் விம்மினள். உணர்ச்சிப் பெருக்கினல் கண் கலங்கினள். துறவிகளை யெல்லாம் நாடு கடத்திய நிகழ்ச்சியைச் சொல்லிவிட்டு நிறுத்தினள்! பெருமூச்சு விட்டாள். அப்போது வேலவன் கோதை கேட்டான்:

''நீலவல்லி! நீ சொல்லுவதைப் பார்த்தால் இந்த இறுதி நிகழ்ச்சி நடந்த பிறகு, கடம்ப வேந்தனின் மனம் இன்னும் அதிகமாக வேதனைப் பட்டிருக்க வேண்டும் என்றல்லவா தோன்றுகிறது. ஆத்திரத்தில் எல்லாத் துறவிகளையும் வற்புறுத்தி நாடு கடத்தி விட்டுப் பிறகு தனியாக இருந்து இத்தனைக்கும் சேர்த்து மனம் குழம்பியிருக்க வேண்டுமே! கனவுகளிலே ஒரே ஒரு துறவி வந்த இடத்தில் இப்போது பல துறவிகள், பற்பல துறவிகள் ஒன்று சேர்ந்து தோன்றி உள்ளத்தைப் பித்தாக்கி இருக்க வேண்டுமே!''

இவ்வாறு கேட்டான் வேலவன் கோதை. இதற்கு மறு மொழி சொல்லும் போது நீலவல்லியின் குரல் தளர்ந்தது. துயரம் நெஞ்சை அடைத்தது. சொன்னள் :

''அன்பரே! அப்படித்தான் யாரும் எதிர்பார்க்கக் கூடும். ஆனல் நடந்தது வேறு. அதுதான் எனக்கு வியப்பு. அதுதான் எனக்குத் துயரம்! ஒரு வேளை கனவுகளும் குழப்பங்களும் நீங்கள் கூறியது போல அதிகமாகியிருந்தால், என்னுடைய மனத்தில் ஒரு வகை ஆறுதலே ஏற்பட்டிருக்கும். எங்கள் அரசரும் கூட மனம் மாறி, மனம் திருந்தி, அவருடைய வாழ்வும் இந்தத் தீவின் எதிர்காலமுமே வேறு விதமாக ஆகியிருக்கும். ஆனல் நடந்தது என்னவோ முற்றிலும் மாருக இருந்தது! அப்படி என்ன ஆயிற்று என்று கேட்கிறீர்களோ? துறவிகளின் மரக்கலம் இந்தத் தீவை விட்டுப் புறப்பட்ட மறு விநாடியே எங்கள் அரசருக்கு ஒரு பெரிய மன நிம்மதி ஏற்பட்டு விட்டது! இந்தத் தீவுக்குள்ளே இருந்து கொண்டுதான் துறவிகள் தனது கனவுகளிலே வந்து போய்க் கொண்டிருந்தார்கள் என்பது போல ஒரு விந்தையான நினைப்பு எங்கள் அரசருக்கு! இந்த நினைப்பு எப்படியோ ஆழமாகப் பதிந்திருந்தது அவருடைய உள் மனத்திலே! ஆகையால் துறவிகள் வெளியேறியதும், அந்த நினைப்பும் எங்கள் அரசரை விட்டு வெளியேறி அகன்றது. அன்றிரவு அவர் நன்ருகத் தூங்கினர். மறு நாளும் அப்படியே. அதற்கு மறு நாளும், பிறகும் — இன்று வரை அவருடைய உறக்கத்தில் முறிவு இல்லை. கடல் மீது செல்வதிலும் எவ்விதமான பதற்றமும் காணும். ஆனல் ஒன்று. இந்தக் குகை வட்டாரத்துக்கு மட்டும் அவர் வருவதில்லை. அதனல்தான் நீங்கள் தப்பித்துச் செல்ல வேண்டும் என்று நான் சொன்னபோது, இந்தச் சோலையை உங்களுக்கு அடையாளம் காட்டினேன்!''

மண்டபத்தின் படிக்கட்டிலே மீண்டும் அமைதி குடிகொண்டது. நீலவல்லியின் சொற்களைக் கேட்டுக் கொண்டு வந்த வேலவனும் மௌனமாக இருந்தான். பிறகு கவலையோடு கேட்டான்:

''நீலவல்லி! பூதங்களிலும் வினைப் பயனிலும் பௌத்த சமணத் துறவிகளுக்குள்ள ஆழமான நம்பிக்கையை நினைத்தால் எனக்குக் கவலை உண்டாகிறது. இந்தத் தீவின் எதிர்காலத்தைப் பற்றி உன்னைப் போலவே நானும் கவலை கொள்கிறேன். இந்தத் தீவுக்கு நான் வந்தபோது, இந்த மண்ணை என் கையினல், நீந்தி நீந்திக் களைத்துப் போன என் கையினல், முதன் முதலாக நான் தொட்ட போது இருந்த மன நிலை வேறு. இப்போதுள்ள என் மன நிலை வேறு. என் வாழ்விலேயே அத்தனை பெரிய மாறுதலைச் செய்து விட்டது நம்முடைய சந்திப்பு! ஆனல் அதன் காரணமாகச் சேர அரசர் என்னிடம் ஒப்படைத்த பணியில் நான் தளரப் போவதில்லை. அன்புக்கு முரண்படாத முறையில், கடமையை எப்படிச் செய்யப் போகிறேம் என்றுதான் என் உள்ளத்தில் ஒரு தவிப்பு ஏற்படுகிறது! அதைப் பற்றித்தான் ஆழ்ந்து கருதுகிறேன்!''

''உண்மைதான்! என்னுடைய உள்ளத்தின் தவிப்பும் அதுதான். வளர்த்த தந்தை. அன்போடு ஆதரித்த தந்தை. ஆனலும் அவர் செய்துள்ள தவறுகள் எவ்வளவு கொடுமையானவை! தந்தை என்பதால் பாவம் புண்ணியமாகி விடுமா? வளர்த்தவரிடத்தில் ஒரு பாசம். அவருடைய செயல்களிலே ஒரு வெறுப்பு. இப்படிப்பட்ட தவிப்பிலே தான் நானும் இருக்கிறேன். என்ருலும் என் பாசம் தவருனதுதான். வளர்த்த தந்தை வளர்த்த தந்தை என்றே சொல்லுகிறேன். அது தவறு! பெற்ற தந்தையும், பெற்றெடுத்த தாயும் என்னை இவரிடம் கொடுத்து வளர்க்கும் படி கேட்டுக் கொண்டார்களா? உறவுக்கும் அன்புக்கும் ஆள் இல்லாமல் புகலற்றுப் போனேனு நான்? இவர் எடுத்து வளர்ப்பதற்கு அப்படி என்ன ஓர் அவசியம், ஒரு காரணம், நேர்ந்தது? அதை

எண்ணிப் பார்த்தால் ஆத்திரந்தான் வருகிறது. சீற்றந்தான் பொங்குகிறது!''

நீலவல்லியின் கண்கள் உணர்ச்சியினுல் சிவந்தன. வேலவன் கோதை எண்ணினுன்: 'ஒரு பெண் உள்ளத்தின் ஆழத்திலே எத்தகைய உணர்ச்சிகள் எல்லாம் புதைந்து கிடக்கின்றன! மனித மனந்தான் எத்தகைய விந்தையான நுட்பங்கள் நிறைந்தது! அன்பு, வெறுப்பு, தவிப்பு, கடமை, பாசம், அமைதி, சீற்றம் - எத்தனை எத்தனை உணர்ச்சிகள் ஒன்று சேர்ந்து வாழ்கிற ஒரு குகை மனம் என்ற குகை!' நீலவல்லி சொன்னுள்:

''என்னைப் பெற்றெடுத்த தாய் தந்தையர்கள் கடம்ப வேந்தரிடம் வந்து, என்னை வளர்க்கும்படி சொல்லி அவரிடம் ஒப்படைத்திருந்தால், நான் இவரிடம் நன்றியும் அன்பும் காட்டக் கடமைப்பட்டவள்! ஆனுல் நடந்தது அப்படியில்லையே! அன்பரே, மனித உயிர் என்பது விலைமதிக்க முடியாத புதையல்! மண்ணைத் தோண்டி அதிலிருந்து வெளியே எடுக்கக் கூடிய ஒரு தங்கப் பானைக்கே பூதங்கள் காவல் புரிகின்றன என்ருல், விலை மதிப்பற்ற புதையலாகிய மனிதப் பிறவியை எளிதாக ஒருவரிடமிருந்து ஒருவர் எப்படி வாங்கிவிட முடியும்? புன்னுடு என்னும் தமிழக அரண்மனையிலே, கிளிப் பிள்ளைகளை வளர்ப்பார்களாம்! நாகணவாய்ப் பறவைகளைப் பிடித்துக் கொண்டு வந்து கூண்டுகளிலே அடைத்து, அவற்றுக்குப் பேசச் சொல்லிக் கொடுப்பார்களாம். கூண்டு தங்கக் கூண்டாகவே இருக்குமாம்! — கொடுக்கும் உணவும் பாலும் பழமுமாகவே இருக்குமாம்! கால்களிலே நீலக் கல் பதித்த தங்க மோதிரமும், கிளிகளின் கழுத்திலே நீலக் கல் மாலையும் போட்டிருப்பார்களாம்! இத்தனை சீரும் சிறப்பும் செய்து அவற்றை வளர்ப்பார்களாம் புன்னுட்டிலே! ஏனென்ருல், அவற்றின் வளர்ப்புத் தந்தை அந்தப் புன்னுட்டுக்கே அரசன்! நீலக்கல் சுரங்கமே இருக்கிறது அவனுடைய நாட்டில்! எனவே, அவனுடைய அரண்மனையில் வளர்கிற கிளிப்பிள்ளைகளும், பூவைகளும் நீலக் கல்லினுலேயே இழைக்கப்பட்டிருக்க வேண்டும்! பொருத்தந்தான்! ஆனுல் நாம் அப்படியா! நீங்களும் நானும் கிளிப் பிள்ளைகளா? காட்டிலே பிடித்து வந்து கூட்டிலே வளர்க்க வேண்டிய நாகணவாய்ப் பறவைகளா நாம்! சொல்லுங்கள்! சொல்லுங்கள்!!'

''நீலவல்லி! உன்னுடைய நிலவுக் கண்கள் ஏன் இப்படிக் கலங்குகின்றன? ஏன் உன்னுடைய உடம்பு இப்படிப் படபடக்கிறது? கைகள் ஏன் இப்படிப் பதறுகின்றன?'' இவ்வாறு கேட்டுக் கொண்டே திகைப்பு மேலிட்டவனுய்ப் படிக்கட்டிலிருந்து எழுந்தான் வேலவன் கோதை!

**(தொடரும்)**

---

''மூளை மூன்று வகைப்படும்.''

''என்ன, என்ன?''

''கர்ப்பூர வகை. கரி வகை, வாழைத் தண்டு வகை.''

''விளக்கிச் சொல்லு, பார்ப்போம்.''

''கர்ப்பூர வகை மூளையிருக்கிறதே, ஒரு விஷயத்தைப் புரிந்து கொள்ள அதற்கு நேரம் பிடிக்காது. வத்திக் குச்சியைக் கிழித்து வைத்ததும் கர்ப்பூரம் பற்றிக் கொள்வது போலச் சொல்லும் விஷயத்தில் உள்ள பொருளை உடனே புரிந்து கொள்ளும்.''

''கரி வகை....?''

''கரியில் தீப் பிடித்துக் கொள்ள விசிறியைக் கொண்டு விசிற வேண்டும். சில சமயம் கைகூட வலி கண்டு விடும். அப்புறம் ஒரு வகையாகப் பிடித்துக் கொண்டால் நின்று எரியும். அது போலச் சிரமப்பட்டு நல்ல விஷயத்தை மனத்தில் ஏற்றி விட்டால், கரி வகையைச் சேர்ந்த மூளை உள்ளவர்கள் காரியத்தில் இறங்குவார்கள்.''

''மூன்ருவது?''

''வாழைத் தண்டு வகை. இந்த வகை மூளையிருக்கிறதே, இது நன்ருகப் பற்றிக் கொண்டிருக்கிற தீயை அணைத்து ஒரே புகைச் சலை எழுப்பிவிடும். கண் போயிற்று என்று கசக்கிக் கொண்டு எழுந்து வரச் செய்து விடும். வாழைத் தண்டு மூளை உடையவர்களுக்குத் தனக்காகவும் புரியாது, சொன்னுலும் புரியாது. புரிந்த விஷயங்களையும் புரியாமல் செய்து கொள்ளும் சாமர்த்தியம் அதிகம்!''

''பேஷான விளக்கம். உனக்கு இதை யார் சொன்னுர்கள்?''

காந்தி ஜெயந்தி அன்று ''காந்திக்கு வோட்டு'' என்னும் கலை நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். சென்னை சுதந்திரக் கட்சித் தலைவர் டாக்டர் எம். சந்தோஷம் அவர்கள் எழுதித் தயாரித்த இந்த நிகழ்ச்சியில் சிறந்த பாடல்களும் மூளையில் தைக்கும் தத்துவங்களும் நிறைந்திருந்தன. அன்று தொடங்கிய 'ராஜாஜி கலை மன்றம்' இந்த நிகழ்ச்சியைச் சுவையான முறையில் தயாரித்து அளித்தது. அதில் கூறப்பட்ட மூளை விளக்கம்தான் இது!

''காந்திக்கு வோட்டு'' நிகழ்ச்சி வரும் தேர்தலில் மூளைக்குச் சிறப்பான வேலை வைக்கும் நிகழ்ச்சி என்று சொல்லத் தேவையா?



## காந்திக்கு வோட்டு!



நிஜப் புகை வண்டிகள் நடம் புரள்வதை, பாதையை விட்டு இறங்கிச் சரிவதை, வண்டிகள் ஒன்றோடொன்று மோதுவதை ஆபத்தில்லாத வகையில் தத்ரூபமாகக் கண்டு ரசித்து மெய் சிலிர்க்கும்படி படமாக்கியுள்ளார்கள். அலுப்பே ஏற்படாத வண்ணம் பார்க்கும் படியானதொரு திரைப் படத்தை நமக்கு அளித்திருக்கிறார்கள் 'செஞ்சுரி பாக்ஸ்' நிறுவனத்தினர். காதல் இல்லை, கவர்ச்சி இல்லை, கட்டழகிகள் இல்லை. ஆனால் கதை இருக்கிறது!

இரண்டாவது உலகப் போரின்போது பாரிஸ் நகரில் மிகப் பெரிய ஓவியக் கண்காட்சி சாலையிலிருந்த பிரபலமான விலை மதிப்பற்ற ஓவியங்கள் அனைத்தையும் ஜெர்மனிக்கு அப்புறப்படுத்த முனைகிறான் ஒரு ராணுவ அதிகாரி. அத்தனை ஓவியங்களையும் சுமந்து கொண்டு செல்லும் ரயிலை, அது ஜெர்மானியர்களிடம் போய்ச் சேராமல் செய்வதற்காகப் பலர் உயிர்த் தியாகம் செய்கிறார்கள். இதுதான் கதை.

புகை வண்டிகள், தண்டவாளங்கள், இரும்புத் திருகாணிகளும் கூட 'நடிக்'கின்றன, 'பேசு'கின்றன! வெடிமருந்துகளைச் சுமந்து நிற்கும் வாகன்கள் விமானக் குண்டுவீச்சினால் வெடித்துச் சிதறுகின்றன. வண்டிகளும் எஞ்சின்களும் மோதி நொறுங்கி உருளும்போது நம் நெஞ்சத் துடிப்பே நின்றுவிடுகிறது. அத்தனை தத்ரூபம். காரணம் இந்தப் படத்தில் நடிக்கும் என்ஜின்களும் வாகன்களும் போலிகளல்ல. அசுர வேகத்தில் ஓடும் புகை வண்டியை நிறுத்தவோ, அதன் திசையைத் திருப்பவோ தனிப்பட்ட திறமை தேவை. அத்தகைய பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் நபர் பர்ட் லாங்காஸ்டர். டைரக்டர் ஜான் பிராங்கன் ஹிமர் காமிராவை அற்புதமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

அதிகாரமும், ஆயுத பலமும், இரக்கமற்ற முறையில் எதையும் சாதிக்கும் இறுமாப்பும் இருந்தாலும்கூட மக்களின் வெறுப்புக்கு ஆளும் வர்க்கம் ஆளாகிவிட்டால் அவர்கள் நிலை என்ன என்பதை 'தி டிரைன்' என்ற இந்தப் படம் அற்புதமாகச் சித்திரிக்கிறது. மறக்க முடியாத படம் இது.

## காதல் படுத்தும் பாடு!

காதலுக்குக் கண்ணில்லை என்பார்கள். காதல் படுத்தும் பாடு சொல்லி முடியாது. டைப்பிஸ்டு மாயாவும் முறைப் பெண் கருணாவும் கதாநாயகன் ராஜுவை மணக்க முயலுகின்றனர். வில்லன் பாஸ்கரன் இவர்கள் காதலுக்கு நடுவிலே விளையாடுகிறான். மாயா மண்டையைப் போட்டுக் கதாநாயகன் ராஜுவுக்குத் தலைமறைவைத் தருகிறாள். கடைசியில் மாயாவின் மறைவுக்குக் காரணம் வேலைக்காரி என்பது வெட்ட வெளிச்சமாகிறது. கதையை இவ்வளவு சுருக்கமாகச் சொல்லிவிட்டோமே தவிர இந்தக் கதைக்கு வருவதற்குள் நைட்கிளப் காட்சிகள், காதல் காட்சிகள், டுவிஸ்ட் நடனங்கள், சண்டைக்காட்சிகள் ஆகியவற்றையெல்லாம் தாண்ட வேண்டியிருக்கிறது. கதைக்காக இத்தகைய காட்சிகளா? அல்லது இந்தக் காட்சிகளுக்காகக் கதையா? இத்தனை வேதனைகளும் இந்த இரவுக் கேளிக்கைப் படங்கள் வந்து தொலைத்ததனால் ஏற்பட்ட விளைவோ?

ஜெய்சங்கர் கதாநாயகன் ராஜுவாக எம். ஜி. ஆர். பாணியில் வருகிறார். கருணாவாக வரும் வாணிஸ்ரீயும், மாயாவாக வரும் ஜயந்தியும் அவருக்குக் காதல் காட்சிகளில் ஈடு கொடுக்கிறார்கள். மீனாட்சியாக வரும் முத்துலட்சுமி போடு போடென்றுபோட்டுக் கணவனைத் திணற அடிப்பதுமட்டுமல்ல; நம்மையும் அயர வைக்கிறார். ஆனால் அத்தனை கல்மிஷம் கொண்ட அவள் காரணமின்றி நல்லவளாக மாறி விடுவது எப்படியோ?

பழைய மாடல் கார் பாணியில் அச்சு பிச்சுவாக வரும் தங்கவேலு - மூர்த்தி ஹாஸ்யங்கள் பழங்காலத்து ஸ்டால் - ஹார்டி ஹாஸ்யங்களை நினைவுபடுத்துகின்றன.

காதல் படுத்தும் பாடு பல 'நைட்' படங்கள் விஜயத்தின் பிரதிபலிப்பு; நம் பண்பாடு பறிபோகக் கொண்டிருப்பதைப் பறை சாற்றுகிறது.



## அத்தியாயம் 12

சுருளியாற்றில் சுழற்றியடித்து வந்த வெள்ளம் வீரன் வாய்க்காலுக்குள்ளேயும் முழு வேகத்துடன் பொங்கிப் பாய்ந்து கொண்டிருந்தது. இதே வேகத்துடன் இன்னும் கொஞ்ச நேரம் பாய்ந்தால் அந்த வாய்க்காலே இருந்த இடம் தெரியாமல் போய் விடும் என்று அஞ்சும்படி இருந்தது. இம்மாதிரி சந்தர்ப்பங்களில் வெள்ளப் பாய்ச்சலை ஆற்றுப் படுகைக்குத் திருப்பி வாய்க்காலைப் பாதுகாப்பதற்காகத்தான் அணைக்கட்டு மதகில் பொருத்தப்பட்ட உருக்குக் கதவும் அதை மேலே தூக்குவதற்கான ராட்டின யந்திரமும் பயன்பட்டன. ஆனால் இந்த வெள்ளம் அணைக்கட்டுக்கு மேலேயே பாய்ந்தோடிக் கொண்டிருந்ததே! ராட்டின யந்திரத்தையே பெயர்த்துக் கொண்டு போய் விடுமோ என்ற அளவுக்கு அணைக்கட்டின் உயரத்தையும் மீறிய அந்த வெள்ளச் சுழிப்பு இருந்தது.

அவ்வளவு பெரிய வெள்ளத்துக்குப் போலா தயாராயில்லைதான். அந்த அளவுக்கு அங்கே மழையும் பெய்யவில்லை. குமரனையும் மற்றவர்களையும் வேலன்கடவு வரை சோதித்த சோனா மாரியான மழை சம்பா நீர்த் தேக்க முகடுகளிலும் அதைச் சேர்ந்த மற்றப் பகுதிகளிலும்தான் அவ்வளவு பலமாயிருந்ததேயொழிய அணைக்கட்டுப் பகுதியில் சாதாரணமாகவே யிருந்தது. குமரனும் மற்றவர்களும் காரில் புறப்பட்டுச் சென்ற பிறகு போலா தனக்கென்று தயாரித்து வைத்திருந்த வறட்டு ரொட்டியையும் முழுக் கடலைச் சுண்டலையும் எடுத்து வைத்துக்கொண்டு சாப்பிட உட்கார்ந்தபோதுதான் சடசடவென்று மழை அடித்துப் பெய்ய ஆரம்பித்தது. ஆனால் அது ஐந்து நிமிஷங்களுக்கு மேல் நீடிக்கவில்லை. அப்புறம் பிசுபிசுவென்ற தூற்றல்தான் விட்டு விட்டுப் பெய்து கொண்டிருந்தது. சாப்பிட்டு முடிந்ததும் போலா ஹூக்காவைத் தயார் செய்து நேரம் போவது தெரியாமல் புகைத்துக் கொண்டு தாழ்வாரத்திலேயே உட்கார்ந்திருந்தான். உண்ட மயக்கமும் புகை மயக்கமும் சேர்ந்து அவனைக் கிறங்க வைத்தன. அப்படியே சுருண்டு படுத்து அயர்ந்து தூங்கி விட்டான்.

திடீரென்று ஏதோ புயல் காற்றுப் போன்ற பலத்த சத்தத்தைக் கேட்டுத்தான் அவன் கண் விழித்துப் பார்த்தான். சுருளியாற்றின் விசுவரூபம் ஆர்ப்பாட்டமான இரைச்சலுடன் அவன் கண்ணெதிரே காட்சியளித்து அவனைத் திக்குமுக்காடச் செய்தது. வெள்ளம் வீரன் வாய்க்காலைப் பாதிக்காத வகையில் அணைக் கதவைத் தூக்கி விட்டு வெள்ளத்தின் வேகம் முழுவதையும் ஆற்றுப் படுகையின் திசையில் திருப்பும் பொறுப்பு அவனுடையது. ஆனால் அணைக்கட்டுக்கும்



மேலே ஓரடி உயரத்துக்கு வெள்ளம் சீறிப் பாய்ந்து கொண்டிருந்தபோது ராட்டின யந்திரம் வரை அவனால் நடந்து போக முடியுமா? வயது காரணமாகச் சாதாரணமாகவே அவனுக்கு நடை தள்ளாடும். வெள்ளச் சுழிப்பு அவன் காலை வாரி விட்டு விட்டால் அவன் கதி என்ன ஆவது? ஆனால் யோசிப்பதற்கும் நேரமில்லையே! வெள்ளம் வீரன் வாய்க்காலில் பாய்ந்து சென்ற ஒவ்வொரு நிமிஷமும் ஒரு பெரிய பிரளயத்துக்கே அல்லவா அடிகோலிக் கொண்டிருந்தது? ஆனால் அதைத் தடுப்பது எப்படி? இந்த இக்கட்டான நிலையில், தான் என்ன செய்வதென்று அறியாது கையைப் பிசைந்து கொண்டு முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தான் போலா.



CIBA




# பினகா டால்க்

## புதுத் தோற்றத்துடன் மீண்டும் வருகிறது

என்றும் போலப் புதுமையும், மென்மையும், கொண்ட நேர்த்தியான பவுடர். இன்ப நினைவைப் போல நீடித்து நிற்கும். பரவசமூட்டும், சுகந்தமும், சருமத்தை மழமழவென வைத்திருக்கும் விசேஷ எண்ணெய்ப் பொருள்களும் அடங்கியது!

CIBA 66/69 TAM.

''போலா! அணைக் கதவு இன்னும் மூடியா யிருக்கிறது?'' என்று பரபரப்புடன் கேட்டுக் கொண்டே அவனருகில் ஓடி வந்தான் குமரன்.

''ஆமாம், ஸாப்! இவ்வளவு வெள்ளம் வரும்னு நான் நினைக்கவே இல்லேங்கோ. இப்போ போய்க் கதவை எப்படிச் சாத்தறது? கால் நழுவிடுச்சு. போலா உயிர் போயிடுச்சு!'' என்றான் போலா. அவனுடைய பதற்றம் அவனுடைய குற்றிய லுகரங்களுக்கு வழக்கத்தைவிட அதிகப்படியான மாத்திரைகளைக் கொடுத்து விட்டது.

''உன்னால் இனி மேல் முடியாது. நீ பதறாமல் இங்கேயே இரு. நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று கூறிய குமரன் அணைக்கட்டுப் பகுதியை நோக்கி விரைந்தான்.

''ஸாப்! உங்க ஒருத்தராலே முடியாது. நானும் வந்துடறேன்'' என்று கத்தினான் போலா.

''நீ அங்கேயே இரு. இது என் உத்தரவு'' என்று கண்டிப்பாகக் கூறிவிட்டுக் குமரன் அணைக்கட்டின் மேல் நடந்து செல்ல ஆரம்பித்தான்.

அணைக்கட்டின் மேல்பகுதி தண்ணீரில் மறைந்திருந்தாலும் பிடித்துக் கொள்வதற்காக அமைக்கப்பட்ட கம்பிகள் ஓரளவு நீர் மட்டத்துக்கு மேல் தெரிந்து கொண்டிருந்தன. ஆதாரத்துக்கு அவற்றைப் பிடித்துக் கொண்டு, காலைப் பறித்து விடுவதுபோல் அரித்தோடிக் கொண்டிருந்த அந்த வெள்ளத்தையும் மீறி ஒவ்வோரடியாக ராட்டின யந்திரத்தை நோக்கி நடந்து அதை எட்டி விட்டான் குமரன்.

ராட்டின யந்திரம்கூடப் பாதிக்கு மேல் தண்ணீருக்குள் அமிழ்ந்திருந்தது. அந்நிலையில் முழு மூச்சுடன் முயன்றால்தான் அதை இயக்க முடியும் என்று குமரனுக்குத் தோன்றியது. அதன் பிடி கையில் சிக்கியதுமே அதைப் பிடித்துக் கொண்டு அதை இயக்க ஆரம்பித்தான். இரண்டொரு சுற்றுகளுக்கு எளிதாக இடம் கொடுத்த அந்த யந்திரம் அதற்கு மேல் அசைந்து கொடுக்காமல் சிக்கினாற் போல் நின்று விட்டது. குமரன் எதிர்பார்த்த சிக்கல்தான் அது. கதவு வெள்ள நீரைக் கிழித்துக் கொண்டு தானே மேலே வர வேண்டியதாயிருந்தது! ஆனால் வெள்ளத்தின் வேகம் அதில் வந்து மோதியபோது அது சுலபமாக ஏற மறுத்தது. இன்னும் பலமாக யந்திரத்தின் பிடியை இரு கைகளாலும் சுற்ற முயற்சி செய்தான். வெள்ளத்தின் வேகம் அவன் கால்களை நிலை தடுமாறச் செய்தது. கீழே விழுந்து விடப் போனவன் எப்படியோ சமாளித்துக் கொண்டு தன் முயற்சியைத் தொடர்ந்தான். இந்தத் தடவை அவனுடைய முயற்சிக்குத் தகுந்த பலன் ஏற்பட்டது. கதவு அங்குலம் அங்குலமாக மேலேறி வந்து கொண்டிருந்ததை அவனால் உணர முடிந்தது.

வெள்ளத்தின் காரணமாகக் கால்களை நன்றாக ஊன்றி வைக்க முடியாத இடைஞ்சல் ஒரு பக்கம், தண்ணீருக்கு அடியிலேயே யந்திரத்துக்குள் விசையைச் சுற்ற வேண்டிய நிர்ப்பந்தம் ஒரு பக்கம், இந்த இரண்டு இடைஞ்சல்களுடன் எப்படியோ போராடிக் கொண்டு குமரன் அந்த வேலையைச் செய்து கொண்டிருந்தான்.

கரையிலோ போலா நிலை கொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்தான். குமரனுக்கு உதவியாகத் தானும் அந்த ராட்டின யந்திரத்தினருகே சென்று விட வேண்டுமென்றுதான் அவன் துடித்தான். ஆனால் அவ்வளவுக்குத் தன் உடம்பிலும் சக்தியில்லை, உள்ளத்திலும் துணிச்சல் இல்லை என்ற உணர்வு அவனைச் செயல் இழக்கச் செய்தது.

''ஸாப்''.... ''ஸாப்'' என்று அடிக்கொரு தரம் தொண்டையடைக்கக் கத்தியவாறு மேலும், கீழும் நடந்து கொண்டிருந்தான் போலா.

வெள்ளத்தின் உக்கிரம் இருக்க இருக்க அதிகரித்துக் கொண்டிருந்தது. அணைக் கட்டின் கைப் பிடிக் கம்பிகளில் ஒரு பக்கத்துக் கம்பி நிலைபெயர்ந்து விழுந்து விட்டது. வெள்ளத்தோடு அடித்து வரப்பட்ட மரக் கிளைகளும் செடி கொடிகளும் எந்த நிமிஷமும் தன் மீது மோதி நிலை தளரச் செய்து விடக் கூடாதே என்ற கவலையுடன் தான் குமரன் ராட்டின யந்திரத்துடன் போராடிக் கொண்டிருந்தான்.

ஆயிற்று, பாதிக் கதவு மேலே வந்திருக்கும் என்ற நம்பிக்கை தோன்றியது குமரன் மனத்தில். ஆனால் அதற்குள்ளேயே அவன் கைகள் இரண்டும் இற்று விழுந்து விடும் போல் சளைத்துப் போயின. நெஞ்சுரத்தின் பலத்திலேயே அவன் அந்தக் கைகளுக்கு வேலை கொடுத்துக் கொண்டிருந்தான்.

திடீரென்று அவன் முதுகில் ஒரு பலத்த அடி. என்னவென்று திரும்பிப் பார்ப்பதற்குள் அவன் முன்னே தள்ளப்பட்டான். கப்பும் கவருமான பெரிய மரக்கிளையொன்று அவன் மீது மோதி அவனை ஆற்று வெள்ளத்தோடு இழுத்துச் செல்லும் முயற்சியில் ஈடுபட்டிருந்

''சலவைக்குப் பின் உங்க பச்சை நிறப் புடவை வெள்ளை வெளேர்ன்னு வெளுத்துப் போயிட்டுதேன்னு கவலைப் படாதீங்க; பக்கத்துத் தெருவிலே என் தம்பி சாயம் போடுற கம்பெனி ஆரம்பிச்சிருக்கான். அங்கே கொண்டு போய் இதைக் கொடுங்கஅம்மா!''

தது. அணைக்கட்டின் கைப்பிடிக் கம்பி மட்டும் இல்லாதிருந்தால், குமரன் ஆற்றோடு போயிருக்க வேண்டியவன் தான். அந்தக் கம்பிதான் இப்போது குமரனைத் தாங்கிக் கொண்டிருந்தது. அந்த நிலையிலும் ராட்டின யந்திரத்தின் கைப்பிடியைத் தளர விடாமல் உறுதியாக நின்ற குமரன், உடலை வளைப்பதும் குனிவதுமாக ஏதேதோ செய்து அந்தக் கிளையரக்கனின் ஆக்கிரமிப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளப் பாடுபட்டான்.

கரையில் நின்றிருந்த போலா குமரனின் அந்தத் தவிப்பைப் பார்த்ததும் துடித்துப் போய் விட்டான்.

''ஸாப்! எனக்கு உத்தரவு குடுங்க. நான் வந்திடறேன்'' என்று கூச்சல் போட்டான்.

''நீ வரக் கூடாது. நான் எப்படியாவது சமாளித்துக் கொள்கிறேன்!'' என்று பதிலுக்குக் கூச்சல் போட்டவாறு மரக் கிளையின் கிடுக்கித் தாக்குதலை முறியடிக்க முயன்று கொண்டிருந்தான் குமரன்.

''ஐயோ.... ஸாபுக்கு ஏதாவது ஆயிடுச்சன்னு நான் என்ன செய்வேன்!'' என்று கைகளை உதறிக் கொண்டு நின்றான் போலா.

''தாத்தா, ஐயாவுக்கு என்ன?'' என்று பரபரப்புடன் கேட்கும் குரல் காதில் விழுந்ததும் போலா சட்டென்று திரும்பினான். வள்ளி நின்று கொண்டிருந்தாள்.

''நீ எப்படி வந்தே வள்ளி?''

''அண்ணனுக்குத் திடீர்னு காய்ச்சல் கண்டிருக்கு. உடம்பெல்லாம் நெருப்பாகக் கொதிக்குது. ஐயாகிட்ட சொல்லி ஆசுபத்திரி டாக்டரை அழைச்சு வரணும்னு....'' என்று கூறி வந்த வள்ளி அதே சமயம் குமரனின் நிலையைப் பார்த்துவிட்டு, ''ஐயையோ! அந்தக் கொம்பு ஐயா மேலே எப்படிக் கவிஞ்சுக்கிட்டிருக்கு. வெள்ளத்திலேயே தள்ளிடும் போலிருக்கே!'' என்று பதறியவாறு முன்னே பாய்ந்தாள்.

''வள்ளி, நீ எங்கே போறே?'' என்று கத்தினான் போலா.

''நீ சும்மா இரு தாத்தா! அந்தக் கொம்பை எடுத்து விடலேன்னா ஐயாவுக்கே ஆபத்து'' என்று உரக்கக் கூறிக் கொண்டே வள்ளி அணைக்கட்டின்மேல் ஏறி விட்டாள். குனிந்த நிலையில் மரக் கிளையுடன் போராடிக் கொண்டிருந்த குமரன், வள்ளியின் குரலைக் கேட்டதும் திடுக்கிட்டுத் திரும்பினான்.

''வள்ளி! நீ வராதே... ஆபத்து!... நான் பத்திரமாகத்தான் இருக்கிறேன்'' என்று கத்தினான்.

ஆனால் வள்ளி நிற்க வில்லை. அணைக்கட்டின் மேல் ஓடிய வெள்ளப் பெருக்கைக் கொஞ்சமும் இலட்சியம் செய்யாமல், பக்கவாட்டுக் கம்பியை உறுதியாகப் பிடித்துக் கொண்டு ஒவ்வோரடியாக முன்னேறிக் குமரன் நின்றிருந்த இடத்துக்கு மிகவும் சமீபத்தில் வந்து விட்டாள்.

குமரன் மேல் மோதவிருந்த முரட்டுக் கிளை வைரம் பாய்ந்த நூக்க மரக் கிளை. சுப்பும் கவரும் வளைவும் நெளிவும் நிறைந்த அந்தக் கிளை நாலு பக்கங்களிலிருந்தும் குமரனை அமுக்கிப் பிடித்திருந்தது. வெள்ளத்தின் வேகம் அதன் பிடியை நிமிஷத்துக்கு நிமிஷம் இறுக்கிக் கொண்டேயிருந்தது. கைகளால் அந்தக் கிளையைப் பிடித்திழுத்து அப்புறப்படுத்துவது சாத்தியமே இல்லை என்று தோன்றியது வள்ளிக்கு. ஆதாரமில்லாமல் கிளையைப் பிடித்து இழுக்க முயன்றால் வெள்ளம் அவளைப் புரட்டித் தள்ளிவிடும் என்பதில் சந்தேகமில்லை. எனவே வள்ளி பக்கவாட்டுக் கம்பியை ஆதாரமாகக் கொண்டு சாய்ந்து நின்று கிளையின் அடிப் பாகத்தைக் கால்களால் உதைத்துத் தள்ளி விட முயற்சி செய்தாள். ஆனால் அந்த முரட்டுக் கிளை அவளுடைய சிறிய பாதத்தின் உதைக்கு எப்படி அசைந்து கொடுக்கும்?

''வள்ளி! இது வீண் முயற்சி. நான் எப்படியாவது சமாளித்துக் கொள்

கிறேன். நீ போய் விடு'' என்றான் குமரன்.

''அது மட்டும் சொல்லாதீங்க. எவ்வளவு பெரிய ஆபத்திலே இருக்கீங்க நீங்க. உங்களை இப்படியே விட்டுட்டு நான் போயிட முடியுமா ?''

''என்னைக் காப்பாற்றும் முயற்சி உன் உயிருக்கே ஆபத்தாய் முடிந்து விடக் கூடாதே, வள்ளி.''

''அப்படி ஒண்ணும் என் உயிர் வெல்லக் கட்டி இல்லே எனக்கு'' என்றாள் வள்ளி. சட்டென்று ஒரு யோசனை தோன்றியது அவளுக்கு.

''தாத்தா.... தாத்தா....'' என்று உரக்கக் கத்தினாள், கரையில் நின்ற போலாவைப் பார்த்து.

''என்ன வள்ளி?''

''ஏதாவது முரட்டுக் கயிறு இருக்கா, உன்கிட்டே ?''

''இரு, இதோ எடுத்து வரேன்....'' என்று கூறிய போலா குடிசைக்குள் ஓடி ஒரு நீளத் தாம்புக் கயிற்றையே எடுத்துக் கொண்டு வந்தான்.

''கயிறு இதோ இருக்கு, வள்ளி.''

''ஒரு நுனியை அந்த அசோக மரத்திலே கட்டிட்டு மறு நுனியை இப்படி என்கிட்டே வீசு'' என்று கத்தினாள் வள்ளி.

போலா பரபரப்புடன் அவள் கூறிய வாறே கயிற்றின் ஒரு நுனியை அசோக மரத்தில் கட்டிவிட்டு, மறு நுனியை பலங்கொண்ட மட்டும் அவளை நோக்கி வீசியெறிந்தான். ஜாக்கிரதையாக முன்னுக்குப் பாய்ந்து அதைக் கையில் பிடித்துக் கொண்டாள் வள்ளி.

அடுத்த சில கணங்களுக்கு அவள் கைகள் மின்னல் வேகத்தில் இயங்கின. கயிற்றின் நுனியைக் கிளையின் அடிப் பாகத்தில் உறுதியாகக் கட்டிய பிறகு அவள் போலாவுக்குப் பலமாகக் குரல் கொடுத்தாள்.

''தாத்தா! மூச்சைப் பிடிச்சுக்கிட்டு வெள்ளத்துக்கு எதிர்ப் பக்கமாகக் கயித்தை நல்லா இழு.''

போலாவுக்கு ஒரே உற்சாகம். கையைப் பிசைந்து கொண்டு கரையில் நிற்பதற்குப் பதில் ஏதோ தன்னாலானதைச் செய்ய முடிகிறதே என்ற திருப்தி அவனுக்கு.

வெள்ளத்துக்கு எதிர்ப் பக்கமாகக் கயிற்றைச் சுண்டிச் சுண்டி இழுத்தான் போலா. விரைவிலேயே அதற்குத் தகுந்த பலன் ஏற்பட்டது. கிளையாகக் கன் குமரனைப் பிடித்திருந்த பிடி கொஞ்சம் கொஞ்சமாகத் தளர்ந்தது. கடைசி முறையாகப் போலா முழு பலத்துடன் கயிற்றை ஓர் இழுப்பு இழுக்கவும் அந்தக் கிளை அடிபட்ட அரக்கன் போல் மல்லாந்து விழுந்து வேறு பக்கமாக உருண்டது. வள்ளி சட்டென்று குனிந்து அதில் கட்டியிருந்த கயிற்றின் நுனியை அவிழ்த்து விட்டாள். மறு கணமே அந்தக்கிளை உயிரிழந்த ராக்ஷஸச் சிலந்தியைப் போல் வெள்ளம் இழுத்த போக்கில் பரிதாபமாகப் புரண்டு சென்றது.

குமரன் வள்ளியை நன்றியுடன் பார்த்தான்.

''வள்ளி! இப்போதாவது நீ கரைக்குத் திரும்பிப் போய் விடு'' என்றான்.

''ஐயாவுக்கு இன்னும் இங்கேயே வேலை இருக்கா ?''

''அணைக் கதவை முழுவதும் தூக்கிய பிறகுதான் நான் இங்கிருந்து நகர முடியும். அணை அடைத்திருந்தால், இந்த வெள்ளப் பெருக்கில் பெரும் பகுதி வீரன் வாய்க்காலில் பாய்ந்து வாய்க்காலே இருந்த இடம் தெரியாமல் போய் விடும்'' என்று கூறிய குமரன் மீண்டும் ராட்டின யந்திரத்தை இயக்க முற்பட்டான்.

ஆனால் வள்ளி அங்கிருந்து போய் விடவில்லை. யந்திரத்தின் மறுபக்கத்துப் பிடியை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு குமரன் சுற்றுவதற்கு ஏற்றாற் போல் அவளும் அதைச் சுற்ற ஆரம்பித்து விட்டாள்.

''வள்ளி! இது ஆபத்தான வேலை. எந்த நிமிஷம் அதிகப்படியான வெள்ளம் வந்து மோதுமென்று சொல்ல முடியாது.''

''அந்த ஆபத்து ஐயாவுக்கும் சேர்த்துத்தானே ?'' என்றாள் வள்ளி.

''இது என் கடமை. உத்தியோகம். உனக்கு அப்படியில்லையே.''

''கடமைக்காகத்தான் ஒன்றொண்ணும் செய்யணுமா ?''

''வேறு எதற்காக?''

''மனசுக்காகவும் செய்யலாமில்லே?''

''மனசுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம் ?''

''உங்களுக்கு வாய்க்காலைப் பத்தின கவலை. எனக்கு ஐயாவைப் பத்தின கவலை.''

''என்னைப் பற்றி உனக்கு என்ன கவலை ?''

வள்ளி ஒரு பெருமூச்சுடன் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''என்னை இங்கே நிற்கக்கூடாதுன்னு விரட்டறீங்களே, ஏன்?''

''உனக்கு வெள்ளத்தால் ஆபத்து நேர்ந்து விட்டால்?''

''என்னைப் பத்தி உங்களுக்கு என்ன கவலே ?''

வள்ளியின் இந்தக் கேள்வி குமர னைத் திகைக்கச் செய்தது. மௌனப் புன்னகையுடன் ராட்டின யந்திரத் தைச் சுற்றுவதில் கருத்தைச் செலுத்தி ஞன். வள்ளியின் ஒத்துழைப்பு அவன் வேலையைச் சுலபமாக்கியது. அணைக் கதவு மடமடவென்று மேலே ஏறிக் கொண்டிருந்தது. அது மேலே ஏற ஏற வெள்ள நீர் மதகு வழியே புகுந்து வடிய ஆரம்பித்தது.

ராட்டின யந்திரத்தைக் கடைசி முறையாகச் சுற்றி முடித்துக் கைப் பிடியை நன்ருகப் பொருத்தியபோது குமரனது நெஞ்சிலிருந்து திருப்தி நிறைந்த பெருமூச்சு எழுந்தது.

''வாய்க்கால் பிழைத்தது'' என்ருன் மகிழ்ச்சியுடன்.

''எங்க வீடும் பிழைச்சுது!'' என்ருள் வள்ளி.

''வீடா? எப்படி?''

''வீரன் வாய்க்கால் எங்கள் வீட்டை ஒட்டினுற் போலத்தானே ஓடுது. வாய்க் கால் மட்டத்துக்குப் பெரிய வெள்ளம் பாய ஆரம்பிச்சா எங்க வீடெல்லாம் வெள்ளக் காடாக ஆகியிருக்கும்'' என்ருள் வள்ளி.

அந்த நிலைமையைக் கற்பனை செய் யவே அவன் மனம் நடுங்கியது.

''உங்கண்ணன் வேறே காயத் தோடே படுத்திருக்கே பாவம்!'' என் ருன் குமரன்.

''காயம் மட்டுமில்லே, இப்போ காய்ச்சலும் சேர்ந்திருக்கு.''

''காய்ச்சலா ?''

''ஆமாம். பகலெல்லாம் அடிச்சுப் போட்டாப்பலே தூங்கிட் டிருந்திச் சில்லே..... சாயங்காலம் அத்தை டீ குடுக்கலாம்னு எழுப்பப் போச்சு. நாலஞ்சு தரம் கூப்பிட்டும் கண்ணை முழிக்கலே. பயந்து போய்த் தொட்டுப் பார்த்தால், உடம்பெல்லாம் நெருப் பாகக் கொதிச்சுக்கிட்டிருக்கு.''

''அட பாவமே.... அப்படி இருக் கவே கூடாதே.''

''அதனுலேதான் ஐயாகிட்டே சொல்லி ஆசுபத்திரி டாக்டரை அழைச் சுக்கிட்டு வான்னு என்னை அனுப்பிச் சுது அத்தை. அதுக்கு ஒரே கவலே. பச்சிலே வைத்தியம் ஒண்ணு கிடக்க ஒண்ணுலே கொண்டு விடக்கூடா தேன்னு வேண்டாத தெய்வமெல்லாம் வேண்டிக்கிட்டிருக்கு'' என்று குரல் தழுதழுக்கக் கூறிஞள் வள்ளி.



''பேஷ்! தம்பூர் குறிகளைத் தட்டி இரீர்களே! கச்சேரிக்கு அழைப்பு வந் திருக்கோ? எந்த சபாவிலே?''

''அழைப்பு எனக்கில்லே! தம்பூரா வுக்குத்தான். வீணை குப்பையருக்கு இது இரவல் வேணுமாம்.''

''நீ அதற்குக் கவலைப் படாதே. நான் அதற்கு வேண்டிய ஏற்பாட் டைச் செய்கிறேன்'' என்ருன் குமரன்.

இருவரும் அணைக்கட்டு மதகி லிருந்து கீழே இறங்கி வந்த போது போலா அவர்களை நோக்கி வேகமாக ஓடி வந்தான்.

''ஸாப், இந்த வள்ளிப் பொண்ணு இல்லேன்னு ஐயாவுக்கு என்ன ஆபத்து ஏற்பட்டிருக்குமோ? இந்தப் போலாக் கிழவன் தனியே என்ன செய்திருக்க முடியும்? தெய்வமாகப் பார்த்துத்தான் இந்த நேரத்துக்கு வள்ளியை இங்கே அனுப்பி வச்சது'' என்ருன் கண்களில் பெருகிய கண்ணீருடன்.

''உண்மைதான். வள்ளியின் துணிச்ச லும் சமயோசித யோசனையும்தான் என்னை இக்கட்டான நிலையிலிருந்து காப்பாற்றியது'' என்ருன் குமரன் உள்ளம் நிறைந்த உணர்ச்சியுடன்.

சங்கோசத்தை மறைப்பதற்காக வள்ளி அசோக மரத்தில் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்துச் சுருட்டி எடுத் துக் கொண்டு உள்ளே வைக்கச் சென்ருள்.

''உண்மையாகச் சொல்கிறேன் சாப்! இந்த மாதிரி திமுர் வெள்ளம் எப்ப வுமே வந்தது கிடையாது'' என்ருன் போலா.

''கதவை ஏற்றியிறக்கும் யந்திரத் தைக் கரையிலே அமைக்க உடனடியாக ஏற்பாடு செய்ய வேண்டும்'' என்று தனக்குத் தானே கூறிக் கொண்டான் குமரன். (தொடரும்)




அவர் பெயர் கோமகவரன். பொருத்தமாகத் தான் அவருடைய பெற்றோர்கள் அவருக்குப் பெயர் வைத்திருந்தனர். பெயருக்கேற்றாற்போல் அவர் எத்தனையோ கோடி பெறுமானமுள்ள சொத்துக்கு அதிபதி. ஆனால் என்றைக்காவது என்ன, எச்சில் கையால் கூடக் காக்காய் ஓட்டாதவர்.

அதோடு பணச் செருக்கு வேறு சேர்ந்து விடவே, ஆண்டவன் ஒருவன் இருக்கிறான் என்பதையே மறந்து விட்டவர்.

அவர் வீடு தேடி வந்தார் ஒரு யாசகர். கையில் ஓடு ஏந்தாத தோஷம் தான். அவ்வளவு வறுமையில் சிக்கியவர்.

கலைவாணனின் நாமத்தை ஜபித்துக் கொண்டு கோமகவரரிடம் யாசகம் கேட்டார்.

கோமகவரருக்குக் கோபம் வந்தது. "ஏன் ஐயா! இல்லாத ஒருவனின் மண்டையைப் போட்டு உருட்டுகிறீர்?" என்று கடிந்தார்.

"மெய்தான். கலைவாணன் இறந்து எத்தனையோ காலமாகி விட்டதுதான். அவன் குழந்தைகளான நானும் நீங்களும் பங்காளிகள் அல்லவா?" என்றார்.

"பேஷ்! பேஷ்! தேவலையே! அவன் பேரைச் சொல்லிக் கொண்டு என் சொத்தில் பங்கு கேட்க வந்துவிட்டீரா? அதுதான் நடக்காது!" என்றார் கோமகவரர்.

"அந்த கலைவாணன் உங்களிடம் பங்கு கேட்கும்படியாக என்னை அனுப்பவில்லையே!"

"என்ன?" ஆச்சரியமும் ஆத்திரமும் ஒருங்கே குழைந்து குழறக் கேட்டார் கோமகவரர்.

"ஆமாம். அவன் இறக்கும்போதே பங்கு பிரித்துக் கொடுத்துவிட்டான். தனது ஐசுவரியத்தை உங்களுக்கும், கைக்கப்பரையை எனக்கும் கொடுத்து விட்டுப் போய்விட்டான். இல்லாவிட்டால் தங்களைப் போன்ற செல்வர்களும் என்னைப் போன்ற ஏழைகளும் இப்படிப் பங்காளிகளாகக் காணப்படுவானேன்?" என்றார் யாசகர்.

கோமகவரர் வாய் அடைத்துப் போனார்.

---

## பொன்மொழிகள்

மூன்று விஷயங்கள் மிகையானால் மனிதனுக்குக் கேடுகளாம்; வேறு மூன்று குறைந்தாலும் கேடுகளாம். அதிகமாய்ப் பேசுதல், ஆனால் சொற்பமாக அறிந்திருத்தல்; அதிகமாய்ச் செலவு செய்தல், ஆனால் கையிருப்புச் சுருக்கமாயிருத்தல்; அதிகமாக எதிர்பார்த்தல், ஆனால் சொற்பத் தகுதியுடன் இருத்தல் ஆகியவையே அவை.

- செர்வாண்டிஸ்

அனுப்பியவர்: அ. பாண்டியன்.

---

## பொய்யின் விளை!



"நேர்மைப் பண்பில் பெரியோர்களைவிடக் குழந்தைகளே மேல். குழந்தைகளிடம் பொய் பேசுவது தகாது. இது என் அனுபவம்" என்று லால்பகதூர் சாஸ்திரியின் மனைவி லலிதா அம்மையார் அண்மையில் குறிப்பிட்டார். அந்த அனுபவத்தின் அடிப்படை நிகழ்ச்சியை அவரே விவரித்தார்:

"பெரிய பிள்ளை அசோக் குறும்புக்காரன். பொய் பேசுவான். அவனைத் திருத்த வழி தெரியாமல் ஒரு நாள் அவனிடம் 'பொய் சொன்னால் ஒவ்வொரு பொய்க்கும் ஒரு பல் விழுந்துவிடும்' என்று சொல்லி வைத்தேன். சிறிது காலத்துக்குப் பிறகு அவனுடைய தந்தைக்கு இரண்டு பல் விழவே, அசோக் பயந்த நிலையோடு என்னிடம் வந்து கேட்டான்: 'அப்பா இரண்டு பொய் சொல்லியிருக்கார் இல்லியாம்மா?' நான் என்ன சொல்ல? தவறு திருத்தப் போய் நானே தவறு இழைத்து விட்டதை எண்ணித் தலை குனிந்தேன்."

- நாரணன் சேனை

## கண்டுபிடியுங்கள்!

நீங்கள் ஒரு டவுன் பஸ்ஸின் கண்டக்டராக வேலை பார்க்கிறீர்கள். அந்தப் பஸ் புறப்படும் போது 8 பேர் ஏறுகிறார்கள். அவர்களில் 5 பேர் ஆண்கள். 3 பேர் பெண்கள். பஸ் புறப்பட்டு அடுத்த ஸ்டாப்பில் நிற்கிறது. அங்கே 7 பெண்கள், 5 ஆண்கள், 4 பள்ளிக்கூட மாணவிகள், 6 பள்ளிக்கூட மாணவர்கள் ஆக 22 பேர் ஏறுகிறார்கள். பஸ் புறப்பட்டு அடுத்த ஸ்டாப்பில் நிற்கிறது. 5 பேர் இறங்குகிறார்கள். அதில் மூன்று பேர் ஆண்கள்; 2 பேர் பெண்கள். அதே ஸ்டாப்பில் 7 ஆண்களும், 8 பெண்களும் ஏறுகிறார்கள். அடுத்த ஸ்டாப்பில் ஒருவர்கூட ஏறவில்லை. 2 பெண்கள் இறங்குகிறார்கள். அதற்கு அடுத்த ஸ்டாப்பில் 10 மாணவர்களும், 15 மாணவிகளும் ஏறுகிறார்கள். அடுத்த இரண்டு ஸ்டாப்புகளிலும், இடமில்லாததால் பஸ் நிற்காமல் சென்று விடுகிறது. கடைசி ஸ்டாப்புக்கு முந்திய ஸ்டாப்பான 'ஸ்கூல்' ஸ்டாப்பில் எல்லா மாணவர்களும், மாணவிகளும் இறங்கி விடுகிறார்கள். பின்பு பஸ் கடைசி ஸ்டாப்பை அடைகிறது. பஸ்ஸில் இருந்த எல்லோரும் கீழே இறங்கி விடுகிறார்கள். கண்டக்டரின் வயது என்ன?

---

விடை: உங்களுக்கு என்ன வயதோ அதேதான் கண்டக்டரின் வயதும். புரியவில்லையா?-- முதல் வாக்கியத்தை மறுபடியும் படியுங்கள். "நீங்கள் ஒரு டவுன் பஸ்ஸின் கண்டக்டராக வேலை பார்க்கிறீர்கள்." இப்போது புரிகிறதா?

-- தியாகு



## கடற்படையின் சப்த கன்னிகைகள்!

ஆஷா, உஷா, புஷ்பா, சாந்தி, லீலா, மீனு, நீனு — இன்பக் கனவை உண்டுபண்ணக் கூடிய இந்தப் பெயர்கள் திரையுலகத் தாரகைகளின் பெயர்கள் அல்ல. பம்பாயில் இந்தியக் கடற் படையின் கடலோரப் பீரங்கி அணி நடத்தும் பால் பண்ணையில் உள்ள ஏழு எருமைகளின் பெயர்களே ஆகும்! இந்த அழகான பெயர்கள் ஐ. என். எஸ். ட்ராடாவைச் சேர்ந்த மாலுமிகள் இந்த எருமைகளிடம் கொண்டுள்ள அன்பைக் காட்டுகின்றன. கடற் படையின் 'சப்த கன்னிகை'கள் இவைகள்.

இவைகளின் கன்றுகளுக்கும் மாலுமிகள் அழகான பெயர்களையே வைத்திருக்கின்றனர். சென்ற ஆண்டு, மாரி காலத் தொடக்க சமயத்தில் பீரங்கிப் படை அணி இருந்த பகுதியில் பசுமையான புல் எங்கும் வளர்ந்திருந்தது. அப்பொழுது பால் பண்ணை நிறுவலாம் என்ற யோசனை கமாண்டர் ஜே. டி. கூப்பருக்கு உதித்தது. பிறகு, சுதந்திர தினத்திற்காக மாலுமிகளும், அதிகாரிகளும் கூடிய போது இந்த யோசனையைச் செயலாக்க முடிவு செய்யப் பட்டது. முடிவு செய்யப் பட்ட மூன்று நாட்களுக்குள் பண்ணை ஆரம்பிக்கப்பட்டது. முதலில் 'ஆஷா', 'உஷா' எருமைகளைக் கொண்டு பண்ணை தொடங்கப் பட்டது. இந்த எருமைகளினால் ஏற்பட்ட லாபத்தைக் கொண்டு மேலும் ஐந்து எருமைகள் கடந்த பத்து மாதங்களில் வாங்கப் பட்டிருக்கின்றன. தற்போது பண்ணையில் பால் லிட்டர் ரூ. 1.30 வீதம் விற்கப்படுகிறது. ஐ. என். எஸ். ட்ராடாவைச் சேர்ந்த மாலுமிகளுக்கு லிட்டர் 50 பைசா வீதம் பால் விநியோகம் செய்யும் காலம் வர வேண்டும் என்பதே பண்ணையின் நோக்கமாம்.

## வண்டிகளை இயக்கிய வீரர்கள்

இந்தியாவில் இருக்கும் பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட சிவிலியன் டிரக் டிரைவர்கள் எப்பொழுதுமே அரிய பணி புரிந்து வந்துள்ளனர். ஆனால் நாட்டின் ஒரு பகுதியிலிருந்து மற்றவற்றுக்குப் பண்டங்களைக் கொண்டு சேர்த்தவாறு இருக்கும் அவர்களுடைய வாழ்க்கை சிரமம் மிகுந்தது. அவர்கள் நெடும் பயணங்கள் செல்ல நேருகிறது. அந்தப் பயணங்களிலும் அநேகம் இரவிலேயே நடக்கின்றன. ஓய்வோ மிக மிகக் குறைவு. சாதாரணச் சமயத்திலான இந்தச் சேவைச் சாதனையையும், சமீபத்தில் பாகிஸ்தானுடன் மூண்ட மோதலின்போது அவர்கள் மிஞ்சிவிட்டனர்.

சிவிலியன் டிரக் டிரைவர்களைப் பற்றிப் பேசும்போது தரைப் படைத் தளபதி ஜெனரல் ஜே. என். சௌதுரி நெஞ்சம் நெகிழ்ந்து கூறினார்: ''தாமாக முன்வந்து மனமார நீங்கள் புரிந்த உதவிக்காக ராணுவம் மட்டுமல்ல, நாட்டு மக்களும் உங்கள்பால் நன்றி கொண்டுள்ளது நிச்சயம்.''

இத்தகைய வீரப் பணி புரிந்த பன்மையிலே ஜோகிந்தர் சிங்கின் வரலாறு ஆதர்சமாக அமையவல்லது.

செப்டம்பர் 9-ஆம் தேதியன்று அம்பாலாவில் 25 டிரக்குகளில் வெடி வகைகள் ஏற்றப்பட்டன. இந்த வண்டியணியில் ஜோகிந்தரின் டிரக்கும் இடம் பெற்றிருந்தது.

இரவு ஒரு மணி சுமாருக்குத் திடீரென ஒரு ராணுவக் காப்டன் வந்து அவர்களைச் சந்தடி செய்யாமல் எழுப்பினார். ''புறப்படுங்கள். ஜலாலாபாதுக்குப் போக வேண்டும். வழியில் ஓரிடத்திலும் நிற்கலாகாது. எவ்வளவு முடியுமோ அவ்வளவு விரைவாகச் செல்லுங்கள். விளக்குகளைப் போடவே கூடாது'' என்பது அவர் இட்ட உத்தரவு.

கார்இருளில் அவர்கள் கிளம்பினர். நேரான சாலையில் மணிக்கு 60 மைல் வேகத்தில் அவர்கள் சென்றனர்.

விடியற்காலை 3-20 மணிக்கு ஜலாலாபாதை அவர்கள் அடைந்தனர். சரியாக 2மணி 20 நிமிடத்தில் அந்த 110 மைல் தூரத்தை அவர்கள் கடந்து விட்டனர்.

அவ்வாறு அவ்விடத்தை அடைந்ததும் டாங்கிகள் ஏற்கனவே புறப்படத் தொடங்கிவிட்டதைக் கண்டனர். நேராக டாங்கிகளின் அருகில் சென்று, அவற்றின் பக்கத்திலேயே டிரக்குகளை ஓட்டிச் செல்லலாயினர். பெட்டிகளைக் கிளீனர்கள் அவசரம் அவசரமாகப் பிரித்தனர். அவற்றிலிருந்து வெடிவகையைக் கையிலெடுத்து, ஓடிக் கொண்டிருக்கையிலேயே டாங்கி ஊழியர்களிடம் கொடுத்தனர்.

இவ்வாறு டாங்கிகளோடு சுமார் இரண்டு மைல் தூரம் வரையில் அவர்கள் சென்றனர். எதிர்ப் பீரங்கிகள் சுடத் தொடங்கின. அவர்களைச் சுற்றிலும் குண்டுகள் வந்து விழுந்து வெடித்தன. ஆயினும் அவர்கள் அஞ்சாமல் தொடர்ந்து சென்று, தாங்கள் கொண்டுவந்த மதிப்பு மிக்க பண்டங்கள் அனைத்தையும் காலை ஐந்து மணிக்குள் டாங்கி சிப்பந்திகளிடம் ஒப்படைத்து விட்டனர். இதன் பயனாகத் தாக்குதலுக்குத் தயாராகி டாங்கிகள் முன் செல்லத் தரைப் படை தொடர்ந்தது.



டிரக் டிரைவர்களை நினைவுகூரும்போது அவர்கள் ராணுவத்துடன் பணிபுரிய நேர்ந்த துணிகரச் செயல்களை நினைவுகூராமல் இருப்பதற்கில்லை. அவர்களையோ அவர்களுடைய வீரச் செயல்களையோ நாம் ஒரு நாளும் மறவோம்.

['வண்டிகளை இயக்கிய வீரர்கள்' என்னும் இந்த நூல் டன்லப் ஸ்தாபனத்தின் வெளியீடு; பாரதத்தின் பெருமைக்குப் பெருமை சேர்க்கும் ஒரு மதிப்பீடு.]

# நூலகத்துறையில் ஒரு முத்து

'அமெரிக்கன் லைப்ரரி அசோஸியேஷன்' என்ற ஸ்தாபனத்தார் சென்ற ஆண்டு நம் நாட்டு நூலகத் துறை அறிஞர்கள் நால்வருக்கு அமெரிக்காவுக்கு விஜயம் செய்யும்படி அழைப்பு விடுத்திருந்தார்கள். அந்த அழைப்பை ஏற்றுக் கொண்டு தமிழகத்தின் பிரதிநிதியாகச் சென்றவர் நூலகக் கலை பற்றி அங்கே சொற்பொழிவுகளும் நிகழ்த்துவது என்று ஏற்பாடாகியது. அவரது எளிமையான தோற்றத்தைக் கண்டு, 'இவர் அப்படி என்ன நமக்குத் தெரியாத புதிய விஷயத்தைச் சொல்லிவிடப் போகிறார்' என்று எண்ணிக் கொண்டு அவரது பேச்சைக் கேட்க வந்த கலிபோர்னியாப் பல்கலைக் கழக 'காடலாக்கிங்' துறைத் தலைவியான ஃபிரிஜ் என்ற பெண்மணி, 'காடலாக்கிங்' பற்றிப் பல புதிய கருத்துக்களைப் புதிய கோணத்திலிருந்து வழங்கிய சொற்பொழிவைக் கேட்டுப் பிரமித்துப் போய் விட்டார். தாம் தப்புக் கணக்குப் போட்டதைப் பற்றிப் பகிரங்கமாக ஒப்புக் கொண்ட அந்தப் பெண்மணி, சொற்பொழிவாளர் இந்தியாவுக்குத் திரும்பியதும் எழுதிய கடிதத்திலிருந்து இரண்டு வரிகள் இதோ :

"நீங்கள் இங்கிருந்து கொண்டு போகும் அறிவுச் செல்வத்தைவிட எங்களுக்குக் கொடுத்து விட்டுப் போகும் செல்வம்தான் அதிகமாக இருக்கிறது... மீண்டும் ஒரு முறை இங்கு வாருங்கள்!....."



மேற்படி பாராட்டுதலுக்குப் பாத்திரமாயிருப்பவர்தான் திரு அ. திருமலை முத்துசுவாமி.

தமிழ் மணக்கும் திருநெல்வேலிச் சீமையின் எட்டையாபுரத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட இவரது பரம்பரையே தமிழ்ப் புலமை மிக்க பரம்பரைதான். அந்தப் பரம்பரையின் வழித்தோன்றலான இவர் தமிழில் எம். ஏ., எம். லிட். பட்டம் பெற்றிருந்தாலும், அன்றும் சரி, இன்றும் சரி, இவரது நெஞ்சைக் கவர்ந்திருப்பதென்னவோ நூலகத் துறைதான்.

ஆரம்பத்தில் திருச்செந்தூரில் குமாஸ்தாவாகவும், இடைக்காலத்தில் கல்லூரித் தமிழ் விரிவுரையாளராகவும் பணியாற்றி விட்டு இன்று சென்னைப் பல்கலைக் கழக நூலகப் போதனைப் பிரிவில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றும் இவர், மதுரை தியாகராய கல்லூரியில் நூலகத் துறைத் தலைவராகவும் இருந்திருக்கிறார். எல்லாக் கல்லூரிகளிலுமே மாணவர்கள் தங்களுக்குவேண்டிய புத்தகங்கள் இவையிவை என்று நூலகத் தலைவரிடமோ பேராசிரியர்களிடமோ குறிப்பிட்டுக் கொடுத்து விட்டு, அவர்கள் மூலமே புத்தகங்களைப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்ற வழக்கம்தான் நிலவி வருகிறது: இந்த முறையை மாற்றி, மாணவர்களே கல்லூரி நூலகத்துக்குள் புகுந்து தங்களுக்கு வேண்டிய புத்தகங்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்கிற முறையை முதன்முதலாக அந்தக் கல்லூரியில் புகுத்திய பெருமை இவரையே சேரும்.

தமிழை முறையாகப் பயின்றவராதலால், தமிழாராய்ச்சியிலும் ஈடுபட்டுப் பல அரிய நூல்களை எழுதியிருக்கிறார். இருபதுக்கு மேற்பட்ட நூல்களின் ஆசிரியரான இவர் இப்போது செய்து முடித்திருப்பது: 'பழந் தமிழ் இலக்கிய நூல் விவரத் தொகுதி.' இந்தத் தொகுப்புக்கென இவர் புரட்டியிருக்கும் புத்தகங்களின் எண்ணிக்கை : 2500!

'சங்க இலக்கியத்தில் இயற்கை' என்ற தலைப்பில் இவரது ஆசிரியரான டாக்டர் மு. வ. அரியதொரு நூல் வெளியிட்டிருக்கிறாரென்றால் அதே போல, 'இலக்கியத்தில் பறவைகளும் விலங்குகளும்' என்ற நூலைப் படைத்த பெருமை திரு திருமலை முத்துசுவாமியைச் சேரும். இந்த நூல் மிருகக் காட்சிச் சாலை நூற்றாண்டு விழாவில் கலந்து கொண்டு பரிசும் பெற்றிருக்கிறது.

நூலகத் துறை சம்பந்தமான மூன்று அரிய புத்தகங்கள் உள்பட இவரது புத்தகங்களுக்கு வரவேற்பு நல்லவிதமாக இருந்த போதிலும், ஒரே ஒரு புத்தகம் வெளி வந்த போது மட்டும் சிறிது சலசலப்பும் எதிர்ப்பும் இருந்ததென்று கூறுகிறார். அந்தப் புத்தகத்தின் பெயர்: 'மலைவாழ் மக்கள்'. நீலகிரிப் பகுதியில் வாழும் பழங்குடி மக்களைப் பற்றிய ஆராய்ச்சி நூல் அது. சலசலப்புக்குக் காரணம்: அவர்களைப் பற்றி வேறு யாரும் கூறாத பல உண்மைகளை இவர் கூறியிருந்ததுதான்.

நூலகத் துறையில் தலைசிறந்த அறிஞரான டாக்டர் எஸ். ஆர். ரங்கநாதன் அவர்களை 'இருபதாம் நூற்றாண்டின் ஒரு மேதை'

என்று குறிப்பிடும் இவர், டாக்டரவர்களின் சில முடிவுகளுக்குக் கருத்து வேற்றுமை தெரிவித்துக் கட்டுரைகள் எழுதி, டாக்டரிடமிருந்தே பாராட்டும் பெற்றிருக்கிறார் என்பது ஒரு ரஸமான விஷயமாகும்.

சைவ சித்தாந்தத்தில் பெருமளவுக்கு ஈடுபாடு கொண்ட இவருக்குக் கைரேகை ஜோசியத்திலும் ஆழ்ந்த நம்பிக்கையுண்டு. பல்கலைக் கழகத்திலேயே பணி புரியும் ஒருவர் இவரது கையைப் பார்த்துவிட்டுக் கூறிய மூன்று விஷயங்களில் இரண்டு பலித்திருக்கின்றனவாம்; மூன்றாவதும் பலிக்கும் என்று தீவிரமாக நம்புகிறார்.

இவருடைய பொழுதுபோக்கு என்ன?

பள்ளிகளில் ஆசிரியர்களாகப் பணி புரிந்து கொண்டே தமிழில் பட்டம் பெற முயற்சி செய்பவர்களுக்கு இலவசமாகப் பாடம் சொல்லித் தருவதுதானாம்! — முகுந்தன்

# படித்துப் பாருங்கள்

## இந்தி ஏகாதிபத்தியம்

மேற்கண்ட தலைப்பில் இந்தி எப்படி நுழைக்கப்படுகிறது அல்லது திணிக்கப்படுகிறது; அதற்காகத் தமிழக மக்கள் எத்தகைய மகத்தான உயிர்த் தியாகங்களும், இயக்கங்களும் நடத்தியிருக்கிறார்கள் என்பனவற்றையெல்லாம் தொகுத்து அருமையான வரலாறு நூலாக இயற்றியிருக்கிறார் ஆசிரியர் ஆலடி அருணா.

''ஏற்கனவே மொழியுணர்வு கொண்டுள்ளோர்க்கு மட்டுமின்றி அதனை ஒரு பிரச்னையாகக் கொள்ள மறுத்திடுவோர்க்கும் இந்த நூல் ஒரு புதிய விழிப்புணர்ச்சியைத் தந்திடும் முறையில் அமைந்திருப்பது இதற்கு ஒரு தனிச் சிறப்பாகும்'' என்று இதற்கு முன்னுரை அளித்துள்ள திரு அண்ணாதுரை எம். பி. அவர்கள் கூறுகிறார்கள்.

ஆனாலும் இந்நூலினை ஒரு வரலாற்று நூலாகக் கொண்டோமானால், ஒருசில குறைகள் நடுநிலையிலிருந்து பார்ப்போருக்குத் தோன்றவே செய்யும்.

முக்கியமாக 1938ம் ஆண்டு நடந்த இந்தி எதிர்ப்பு இயக்கத்துக்கும் 1965 ஜனவரி 26ல் நடந்த மாபெரும் இயக்கத்துக்கும் பெரும் வித்தியாசம் உண்டு.

1938ல் இந்தியைப் பள்ளிகளில் தேர்வுக் கணக்கில் எடுத்துக் கொள்ளாத ஓர் உபபாடமாக நடத்தி வரவேண்டும் என்று ராஜாஜி ஏற்பாடு செய்திருந்தார். பின்னர் அவரே எதிர்ப்புக் குரல் கொடுத்தார். இந்த இரண்டு நிலைக்கும் உள்ள வித்தியாசத்தைப் போதியபடி ஆசிரியர் வலியுறுத்தவில்லை.

ஹிந்திப் பிரசாரத்துக்காகப் பெரும் தொண்டாற்றிய ராஜாஜியே எதிர்ப்புக் குரல் கொடுத்ததும், இயக்கத்துக்குத் தமிழகத்தில் மட்டுமின்றி, தென்னகத்தில் மட்டுமின்றி, ஹைதராபாத், வங்கம், பஞ்சாப் முதலிய பல இடங்களிலும் பேராதரவும், கௌரவ நிலையும் ஏற்பட்டது.

1938ல் ராஜாஜி கொண்டுவந்த ஹிந்தித் திட்டத்தை எதிர்த்து ராமசாமிப் பெரியார் நடத்திய இயக்கத்தைப் பாராட்டி எழுதியுள்ளார் ஆசிரியர். பின்னால் தமிழகம் முழுதும் ஒருமொத்தமாக இந்தியை எதிர்த்து வீறுகொண்டு எழுந்தபோது எத்தகைய ஆதரவும் அதற்குத் தராமல் பெரியார் வாளாவிருந்தது, 1938ல் ராஜாஜி பெரியாருடைய இயக்கத்தைப் பற்றிக் கூறியது முற்றும் உண்மை என்பதை நிரூபிக்கிறது.

1965 ஜனவரி, பிப்ரவரியில் எழுந்த எழுச்சி, எந்தக் கட்சித் தலைவரும் சற்றும் எதிர்பாராத மாணவ சமுதாயத்தின் வீறு கொண்ட எழுச்சியேயாகும். அந்தச் சமீப கால வரலாற்றைப் படிக்கும்போது ஒவ்வொருவருக்கும் விம்மிதம் உண்டாகும். ஹிந்திக்கும் ஹிந்துஸ்தானிக்கும் உள்ள வித்தியாசங்களையும், இதில் காந்தி மகான் கொண்ட அபிப்ராயங்களையும் அதனையொட்டி காங்கிரஸ் தலைவர்களிடையே ஏற்பட்ட கருத்துக்களையும் ஆசிரியர் நுட்பமாக ஆராய்ந்து அளித்திருக்கிறார்.

பிரசுரம்: மதிவாணன் வெளியீடு, 18, முனுசாமி செட்டித் தோட்டம், 3வது சந்து, சென்னை-21, விலை: ரூ. 5.00

## ஏசுநாதர் பிள்ளைத் தமிழ்

''கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும்'' என்னும் பழமொழியோடு 'கவிமணி வீட்டுப் பேரப் பிள்ளையும் கவிஞன்தான்' என்னும் புதுமொழியையும் சேர்த்துக் கொள்ளலாம். நூலாசிரியர், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின் உறவினர். பேரன் முறையாக வேண்டும். வாக்கு நயம், பொருள் நயம் எல்லாம் ஒருங்கே அமையப் பெற்றவர் என்பது இந்நூலைப் படிக்கையில் புரிகிறது.

பாட்டுடைத் தலைவனின் குழந்தைப் பருவத்திலிருந்து தொடங்கிச் சிறுதேர் உருட்டும் பருவம் வரையில் — அதாவது வளர்ச்சியடைந்த குழந்தையின் பருவம் வரையில் கூறுவது பிள்ளைத் தமிழ் என்னும் பிரபந்தம்.

தியாக சிகரமும், தீர்க்கதரிசியும், தீனபந்துவும், மனிதாபிமானம் மிக்க மாபெரும் மனிதருமான ஏசு பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இந்நூல் புனையப்பட்டிருக்கிறது. உதாரணத்துக்கு ஒரு பாடல்:

'' கன்னத் தறைந்த கயவனையும்
கருத்தால் எண்ணி நேசித்துப்
பின்னும் கன்னம் காட்டியவன்
பேதைத் தன்மை மாற்றிடவே
தன்னைச் சான்றாய்க் காட்டிய சீர்
தலைவா ஆடாய் செங்கீரை;
அன்னை மரியாள் அரும் புதல்வா
[illegible] அமுதே ஆடாய் செங்கீரை ''

இந் நூலில் உள்ள நூறு பாடல்களிலும் இனிமையும், எளிமையும் ததும்புகின்றன.

இயற்றியவர்: கவிஞர் இ. குற்றாலம். கவிமணி இல்லம், புத்தேரி, நாகர்கோவில்; விலை ரூ. 1.50.



# பம்பாய்த் தமிழ்ச் சங்கம்

ஸயான் ரோடு - பம்பாய்-22

# வெள்ளி விழா நாடகப் போட்டி

## முடிவுகள்

❖

நாடகங்களைப் பரிசீலனை செய்த நாங்கள், கீழே கொடுக்கப்பட்டுள்ள வரிசைப்படி முதல், இரண்டாம், மூன்றாம் பரிசுகளுக்கு உரியனவாக மூன்று நாடகங்களையும், தவிர பரிவுப் பரிசுகளுக்கு உரியனவாக மூன்று நாடகங்களையும் ஏகமனதாகத் தேர்ந்தெடுத்துள்ளோம்.

முதற் பரிசு ரூ. 1500
**அருணோதயம்** — குமாரி ஆர். சூடாமணி
6, டாக்டர் அழகப்ப செட்டியார் ரோடு
வேப்பேரி, சென்னை-7

இரண்டாம் பரிசு ரூ. 1000
**எல்லாம் நிறைந்தவள்** — எஸ். பரமஸ்வாமி, புள்ளி விவர அலுவலர், சிலோன் பெட்ரோலியம் கார்ப்பொரேஷன் காலி ரோடு, கொழும்பு-3 (இலங்கை)

மூன்றாம் பரிசு ரூ. 500
**காகிதப் பூ** — அருணகிரி, காந்தி ஸென்டர், 62-ஏ, லஸ் சர்ச் ரோடு, மைலாப்பூர், சென்னை-4

பரிவுப் பரிசுகள்
ஒவ்வொன்றுக்கும் ரூ. 200

1. தெய்வம் வெறும் சிலையல்ல — குடியேற்றம் ச. நாகராஜ்
21, செல்லியம்மன் கோயில் தெரு
நடுப்பேட்டை, குடியேற்றம், வ.ஆ.மாவட்டம்
2. மரமும் நிழலும் — எஸ். சத்தியமூர்த்தி (பூரம்)
12/302, திருவல்லிக்கேணி ஹைரோடு
சென்னை-5
3. விலந்திச் செல்வன் — விமலா ரமணி (அரவிந்த்)
ராம் நகர், கோயமுத்தூர்-9

பி. எஸ். ராமையா.

தமிழ் நாடக மேடைக்குச் சிறந்த நாடகங்கள் கிடைக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் சங்கத்தின் வெள்ளி விழா ஆண்டாகிய இச்சமயம் எங்களால் ஏற்பாடு செய்யப்பட்ட இப் போட்டிக்கு நூற்றுக்கணக்கான நாடகங்கள் திரண்டுவரும் வண்ணம் அளவு கடந்த உற்சாகம் காட்டி எங்கள் முயற்சிக்கு வெற்றி தேடித் தந்த எல்லா எழுத்தாள அன்பர்களுக்கும் எங்கள் அன்பு கனிந்த நன்றிகள். கண்ணும் கருத்துமாக எல்லா நாடகங்களையும் பொறுமையுடன் பரிசீலனை செய்து தீர்ப்பளித்த நீதிபதிகளுக்கும் எங்கள் மனமுவந்த நன்றிகள்.

பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தார்

# வேங்கை வேட்டையா? மங்கை வேட்டையா?

மாலை மங்கும் நேரம். நீண்ட நாட்களுக்குப் பிறகு அன்னையும் மகளும் மட்டும் டாகுர் துவாரத்துக்குக் கால்நடையாகச் சென்றனர். முன்பு பரம மங்களமாகப் பொலிந்த அச்சூழல் இப்போது யாரும் கவனிப்பாரற்று முள்ளும் புதரும் மண்டிப் போயிருந்தது. மீரா தன் உடம்பு உள்ளம் இரண்டிலுமே முட்களால் கீறப்பட்டுக் கண்ணபெருமான் சந்நிதியை நெருங்கினாள்.

அருகேயிருந்த புதரில் ஒரு சலசலப்பு எழுந்தது. அடுத்த விநாடியே செந்தழல் கண்களுடன் ஒரு புலி அங்கிருந்து வெளிப்பட்டது.

## காற்றினிலே வரும் கீதம்



## ரா. கணபதி

"ஆகா, என்னைக் கண்ணனுடன் சேர்க்க வந்தாயா?" என்று கூறியவாறு மீரா அதனை வரவேற்ற அதே சமயத்தில்,—

எதிரெதிர் திசைகளிலிருந்து இரண்டு அம்புகள் வேங்கையின் உடலில் பாய்ந்து அதை வீழ்த்தின.

அம்புகளில் ஒன்றுக்கு உரியவனாக ஒரு திசையிலிருந்து வந்தான் ஜயமல். அவன் மீராவின் பெரியப்பா வீர்சிங்கின் மகன்.

மறு திசையிலிருந்து இன்னோர் அம்புக்கு உரிமையாளனாக மற்றொருவன் வந்தான். அந்தி மயக்கத்திலும் தேஜஸ் பொலியும் அவனது கட்டழகு புலனாயிற்று. முப்பத்தைந்து பிராயத்துக்கு அதிகமாகவே மதிக்கக் கூடியவன் எனினும் அவனிடம் மூப்புக்குரிய கௌரவமும் இளமைக்குரிய எழிலும் ஒருங்கே பொலிந்தன.

கம்பீரமும் கனிவும் மிகுந்த அவனது கண்கள் மீராவின் மீது நிலைத்தன. இறைவனின் லீலாவினோதத்தை யாரே தடுத்து நிறுத்த முடியும்?



**பு**லியின் மீதே பார்வையுடன் வந்த ஜயமல் எதிரே நிற்கும் சுந்தரபுருஷனைக் கண்டதும் ஒரு நிமிடம் திக்பிரமித்து நின்றான். மறு விநாடி அவன் பாதத்தில் விழுந்து, ''என்னுடைய பாக்கியம் இன்று தங்களைக் கண்டேன்'' என்றான்.

அந்த வீர புருஷனின் கண்கள் மீராவிடமிருந்து விலகமாட்டாமல் விலகின. தன் பாதத்தில் தண்டனிட்ட ஜயமல்லைத் தூக்கி நிறுத்தினான்.

''நீயும் நானும் சண்டையல்லவா போட வேண்டும்? நீ ஏன் என்னை வணங்குகிறாய்?'' என்று கேட்டான்.

''சண்டையா? நான் போடுவதா? தாங்கள் என்னைத் தவறாக நினைத்து விட்டிருக்கிறீர்கள். முன்பு ரண்மல்லுடனும் இப்போது அவர் மகன் ஜோதாவுடனும் எங்கள் குடும்பம் சேர்ந்திருந்தாலும் தங்கள் உடலில் இந்தக் குடும்பத்தின் ரத்தம் ஐம்பது சதவிகிதம் பாய்வதை.....''

இடைமறித்துப் பேசினான் ஆனைமுகன். ''நான் அந்த அரசியல் சண்டைகளைப் பற்றிப் பேசவேயில்லை. அது ஒரு மாதிரி முடிகிற தருணம் வந்து விட்டது. இப்போது இந்த வேங்கையின் மீது நம் இருவரின் அம்புகளும் தைத்து அது இறந்திருக்கிறது. போர் மரபுப்படி, அது என் அம்பால் இறந்தது; எனவே அதன் உடல் எனக்குத்தான் சொந்தம் என்று நான் வாதாட வேண்டும். 'இல்லை, என் அம்பால்தான் இறந்தது' என்று நீ மறுத்துப் பேச வேண்டும். சாட்சாத் சிவபெருமானிடமே அர்ஜுனன் இப்படிச் சண்டை பிடித்திருக்கிறான். நீயோ அப்படியெல்லாம் சொல்லாமல் என்னை வணங்குகிறாயே'' என்று கூறி விட்டுக் கம்பீரமாகச் சிரித்தான்.

பளிச்சென்று பதில் சொன்னான் ஜயமல். ''அர்ஜுனனுக்குச் சண்டை பிடித்த போது எதிரேயிருப்பவர் சிவபெருமான் என்று தெரியாது. எனக்கோ தாங்கள் யார் என்று தெரியுமே. இந்தப் புலி மட்டுமல்ல; நானும் என் குடும்பத்தினர் அனைவரும் எங்கள் பிரஜைகள் யாவரும் தங்களுக்கு உரிமையானவர்கள் அல்லவா?''

"அப்படியா? உங்கள் ராஜ்யப் பிரஜைகள் யாவரும் எனக்கு உரிமையா?" என்று பொருள் பொதிந்த சிரிப்புடன் வினவியவாறு மீராவைப் பார்த்தான் அந்த மாவீரன். மீராவோ புலி வந்ததையோ, மாண்டதையோ, எதிரே நடப்பதையோ கவனியாமல் இருளடைந்த டாகுர் துவாரத்தின் உள்ளே தன்னுடைய பார்வையைப் பதித்திருந்தாள்.

ஜயமல் சடக்கென்று சந்திர முகியின்புறம் திரும்பினான். "சித்தி, ராஜஸ்தான தருமம் முழுவதற்கும் உரிமையாளரான மேவார் மகாராணா கும்பாஜி இவர்தான்" என்றான்.

ராணாவிடம், "இவர் என் காலஞ்சென்ற சிற்றப்பா ரத்தன்சிங்கின் பாரியை சந்திரமுகி தேவி. இவள் இவரது புதல்வி மீரா" என்றான்.

சந்திரமுகி தன் முகத் திரையை நன்கு இழுத்துப் போர்த்திக் கொண்டு, "ராவல்ஜி, தாங்கள் மேவார் வந்தது எங்கள் பாக்கியம். எனினும், எங்கள் ராஜ்யத்துக்கு இப்படி முன்னறிவிப்பில்லாமல், வரவேற்பு உபசாரங்கள் பெறாமல் வரலாமா?" என்றாள்.

மேவார் ராணா கும்பாஜியின் கண்கள் மீராவை மொய்த்தன. சந்திரமுகியைப் பார்த்துக் குறும்புடன், "அதற்கென்ன, அல்லோலகல்லோல உபசாரத்துடன் உங்களூருக்கு இன்னொரு முறை மாப்பிள்ளை மாதிரி வந்தால் போகிறது" என்றான்.

சந்திரமுகிக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. 'மாப்பிள்ளை மாதிரி என்றல்லவா சொல்கிறார்! கிருஷ்ணா, உன் கோயில் வாசலில் சொல்கிறார்! இது உன் திருவுள்ளமாகவே இருக்கட்டும். இந்தப் பைத்தியக்காரப் பெண்ணுக்குப் புத்தியைக் கொடு' என்று பிரார்த்தித்துக் கொண்டாள்.

நினைவு மறந்திருந்த மீராவைத் தட்டி, "கண்மணி, மேவார் மகாராணாஜி வந்திருக்கிறார் பார். நம்மைப் புலி வாயிலிருந்து அவர்தான் காத்திருக்கிறார். நமஸ்காரம் பண்ணு" என்றாள். அப்போதுதான் மீரா கும்பராணாவைப் பார்த்தாள். தன்னையே வெறிக்க நோக்கும் அவனது கண்கள் புலியின் வாயைவிடப் பயங்கரமாக அவளுக்குத் தோன்றின. அன்னை சொன்னதற்காகவே அவனை வணங்கினாள்.

"ஜயமல், எனக்குப் புலி வேண்டாம், நீயே வைத்துக் கொள்; ஒரு மானைப் பிரதியாகக் கொடுத்தால் மகிழ்ச்சி அடைவேன்" என்று கூறிவிட்டுச் சரேலென்று புரவி மீது பாய்ந்து, அதிவேகமாக மறைந்துவிட்டான் சித்தோர் சிம்மாசனாதிபதி.

"சித்தி, மகாராணா இங்கே எப்படி வந்தார், எதற்கு வந்தார் என்றே தெரியவில்லை. இந்தச் சீமைகளில் ஜோதாவுக்கு எவ்வளவு ஆதரவு இருக்கிறது என்று அறிந்து போக வந்திருப்பார் போலிருக்கிறது" என்றான் ஜயமல்.

"அதெல்லாமில்லை; டாகுர்தான் அனுப்பி வைத்திருக்கிறார்" என்றாள் சந்திரமுகி, எதையோ நினைந்தவளாக.

சந்திரமுகியும் மீராவும் ஆலயத்துக்கு வந்திருப்பதை அறிந்த புஜாரி இதற்குள் அங்கு வந்து சேர்ந்தார். ஆலயத்துக்குள் சென்று தீபத்தை ஏற்றினார். அசைகின்ற கொழுந்தின் ஒளியில் டாகுரின் திருமுகத்தில் பலவிதச் சாயைகள் விழுந்தன.

'ஆமாம், நான்தான் ராணாவை அனுப்பி வைத்தேன்' என்று விக்கிரகம் தலையை ஆட்டிக் கூறுவது போலிருந்தது.

மீராவுக்குத் தன் உடலிலிருந்த சக்தி அவ்வளவும் போய் விட்டது போன்ற பலவீனம் ஏற்பட்டது. புலியின் மீது பட்ட அம்பை விடக் கூரிய அம்பு மகாராணாவின் பார்வை என்ற உருவில் தன் மீது பாய்ந்து வதைப்பது போல் இருந்தது அவளுக்கு. மயங்கித் தரையில் சாய்ந்தாள்.

## அத்தியாயம் 10

## "சுபஸ்ய சீக்ரம்"

"குழந்தாய்! தன்னந் தனியாக இப்படி ஆபத்துச் சூழ்ந்த இடங்களுக்குப் போகலாமா?" என்று சித்தோரில் மகாராணா கும்பனைக் கேட்டுக் கொண்டிருந்தார் பெரியப்பா சண்டன்.

"குழந்தை என்று என்னை நீங்கள் கூப்பிடும் வரையில் நான் தனியாகப் போகக் கூடாதுதான். ஆனால் என் குழந்தைகளுக்கே கலியாணப் பருவம் வந்து விட்டதைத் தாங்கள் என்மீதுள்ள வாத்ஸல்யத்தில் மறந்து விட்டீர்கள்" என்று பதிலிறுத்தான் கும்பாஜி.

"ஆம், ராய்மல்லுக்கும்தான் வயசு பதினெட்டாகிறது. விவாகம் செய்து விட்டால் நன்றாகத்தானிருக்கும். பேரன் அகமுடையானின் கையினால் அன்னம் உண்ண இந்தக் கிழவனுக்குக் கொடுத்து வைத்திருக்கிறதோ, இல்லையோ? அது போகட்டும். நீ போன காரியம் என்ன?" என்று கேட்டார் சண்டன்.

"நான் போன காரியமா? உங்கள் பேரனுக்குக் கலியாணம் கொண்டு வந்திருக்கிறேன். பெண் யார் தெரியுமா? நீங்களே யோசித்துச் சொல்லுங்கள்."

ராஜநீதியில் தேர்ந்த சண்டன் அதிகம் யோசிக்கவில்லை. "ஜோதாவின் பெண்.... அவள் பெயர்..... சிருங்கார தேவிதானே?" என்று கேட்டார்.

"பெரியப்பா கண்டு பிடித்தது எப்படிப் பிழையாகப் போகும்? சிசோதிய ராட்டோர் பகைமையைப் போக்க இதைவிடச் சிறந்த உபாயம் எனக்குத் தோன்றவில்லை. தாங்களும் நிச்சயமாக இதற்கு ஒப்புதல் அளிப்பீர்கள் என்ற நம்பிக்கையில்தான் ஜோதாவிடம் இவ்விஷயமாகப் பேசி, வென்று வந்து விட்டேன்" என்றான் கும்பராணா.

"மிகவும் நல்ல காரியம் செய்தாய் குழந்தாய்! அந்நிய மிலேச்சரை எதிர்க்க வேண்

டிய தருணத்தில் உள்ளூர்ப் பூசல்களை எப்படியாவது தீர்த்துக் கொண்டேயாக வேண்டும் என்றுதான் நானும் ஓயாமல் நினைத்து வருகிறேன். ஜோதா எப்படி ஒப்புக் கொண்டான்? ரொம்பவும் விரோதமாக இருந்ததாக அல்லவா கேள்விப்பட்டேன்?''

''அது மிகவும் சுவாரசியமான கதை பெரியப்பா. நான் மண்டோர் எல்லையில் ஒரு பாழ்வெளியில் மாறுவேஷத்தில் சுற்றிக் கொண்டிருந்தேன். தூரத்தில் ஒரு ஜாட் பழங்குடியின் குடில் தெரிந்தது. பருக நீர் கேட்கலாமென்று அங்கே சென்றேன். குடிசையின் பின்புறத்தில் குதிரை வால் தெரிந்தது. சட்டென்று என்னை ஜாக்கிரதை செய்து கொண்டு, சுவரில் இருந்த ஒரு துவாரத்தின் வழியாக உள்ளே கவனித்தேன். ஆச்சரியமாகி விட்டது! ஜோதா ஒரு தாலத்தின் முன் அமர்ந்திருந்தான். ஜாட் பெண்மணி ஒருத்தி அவனுக்குக் கூழ் வார்த்தாள். சூடாக இருந்த அந்தக் கூழின் நடுவிலே கையை வைத்த ஜோதா வெப்பம் தாங்க மாட்டாமல் கையை அவசரமாக எடுத்து வாயில் வைத்துக் கொண்டு உறிஞ்சினான். ஜாட்னி களங்கமில்லாமல் பெரிதாகச் சிரித்தாள். 'சாகேப்! நீங்கள் யார் என்று சரியாகச் சொல்லிக் கொள்ளவில்லை. இருந்தாலும் பசியோடு வந்திருப்பவரிடம் பூர்வோத்தரம் கேட்கக் கூடாது என்று கூழ் படைத்தேன். இப்போது நீங்கள் சொல்லாமலே யாரென்று தெரிந்து கொண்டு விட்டேன். ஜோதாவுக்கு உடன் பிறந்தவர் நீங்கள்'' என்றாள். ஜோதா தனது பதற்றத்தை வெளிக் காட்டிக் கொள்ளாமலே 'எதைக் கொண்டு அப்படிச் சொல்கிறாய்?' என்று கேட்டான். 'சூடாக இருக்கும் கூழில் ஓரத்திலிருந்து சிறிது சிறிதாக எடுத்துச் சாப்பிட்டாலே கைச்சுடாமலிருக்கும். நீங்கள் நடு மையத்தில் கையை வைத்தீர்கள். ஜோதா சாகேப் மண்டோரின் எல்லைப்புறங்களில் படையெடுக்காமல் மத்தியில் தாக்குதல் செய்து மகாராணாவின் படையிடம் உதைபடுகிறாரே அதுதான் எனக்கு நினைவு வந்தது. நீங்களும் அந்த ஜோதாவுடன் பிறந்தவராயிருப்பீர்கள் என்று நினைத்தேன்' என்றாள் ஜாட்னி. ஜோதா அதற்கு மேல் பேச்சை வளரவிடாமல் ஒருவாறு வெளியேறினான். இனி அவன் எல்லைப் பகுதிகளில் தான் படையெடுப்பான் என்று ஒருவாறு அநுமானித்தேன்.




'' 'கணவருக்குப் பணிவிடை செய்தல்' என்ற புத்தகம் வேணுமா?''

'' 'கணவரைப் பணிய வைத்தல்' என்ற புத்தகம் இருந்தால் கொடுங்க, போதும்!''

இந்தப் படையெடுப்புக்குப் பின் ராஜஸ்தானியரின் ரத்தம் உட்பூசலில் வீணாகாமலிருக்க ஏதேனும் செய்ய வேண்டுமென்று முடிவு செய்தேன். அடுத்து அவன் படையெடுக்கக் கூடிய எல்லைப் பகுதியில் நம் படைப் பிரிவைப் பலப்படுத்திவிட்டு நானே அங்கு சென்றேன். இம்முறை ஜோதாவைச் சிறைப்படுத்தியே விட்டோம். அவனிடம், 'உன்னை விட்டுவிட நான் தயார். ஒரு ஜாகீரும் உனக்குத் தந்து விடுகிறேன். எனினும், சிசோதியர் — ராட்டோர் பகை தீர இது மட்டும் போதாது. மிளகாயால் வந்த சிரங்கைப் போக்க மிளகாயையே அரைத்துப் போடுவது போல் இப்போது ஒரு வைத்தியம் செய்ய வேண்டும். முன்பு நம் இரண்டு ரத்தங்களும் கலந்ததால்தான் பேதங்கள் அதிகமாயிற்று. இப்போது பேதங்கள் மறைவதற்காக மீண்டும் இவ்விரு ரத்தங்களும் கலக்க வேண்டும். என் இரண்டாவது மகன் ராய்மல்லுக்கு உன் மகன் சிருங்கார தேவியைத் தருகிறாயா?' என்று கேட்டேன். அவன் மனம் நெகிழ்ந்து போய்விட்டான். விவாக சம்பந்தத்துக்கு ஒப்புக் கொண்டு விட்டான்'' என்று முடித்தான் கும்பாஜி.

''அருமையான காரியம் செய்தாய், குழந்தாய்!'' என்று அவனை ஆரத்தழுவிக் கொண்டார், ராஜஸ்தானியரின் ஒற்றுமைக்காக இதயம் துடித்த சண்டன்.

''குழந்தாய் என்று நீங்கள் சொல்வதற்கேற்பக் குழந்தையாகவே இன்னொரு காரியமும் செய்ய ஆசைப்படுகிறேன் பெரியப்பா!'' என்று கூறித் தயங்கி நிறுத்தினான் ராணா.

''அதென்ன குழந்தைக் காரியம்?'' என்று ஆவலுடன் வினவினார் சண்டன்.

''ஜோதாவிடம் நல்ல முறையில் விடை பெற்றபின், மண்டோரின் மற்றொரு மாவீரரான ராவ்தூதாவை பார்க்க எண்ணி மேர்தாவுக்குக் கிளம்பினேன். ஊருக்கு வெளியிலேயே ஒரு கண்ணன் கோயில். அங்கு நான் முன்னிரவு வேளையில் சென்றபோது புலியொன்று பதுங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். அதன் மீது அம்பு செலுத்தினேன். எதிர்த் திசையிலிருந்து இன்னோர் அம்பும் வந்து பாய்ந்தது. ராவ்தூதாவின் பேரன் ஜயமல் தான் அதைச் செலுத்தியவன். புலி செத்து விழுந்தது. அந்தப் புலியின் வாயிலிருந்து ரத்தன் சிங்கின் மனைவியையும், மகளையும் காப்பாற்றியதாகத் தெரிந்து கொண்டேன். பெரியப்பா, அந்த மகளை நினைக்கும் போதுதான் நீங்கள் சொல்வது போல் குழந்தையாகி விடுகிறேன். இது ஏன் என்று எனக்கே புரியவில்லை. எத்தனையோ ராஜஸ்திரீகளை மணந்தேன்; அனைவரையும் பறிகொடுத்தேன். கும்பலாதேவியையும், அபூர்வ தேவியையும் இழந்த பின்னும் இன்னொரு

பெண்ணை விரும்புகிறேன் என்றால் அது எனக்கே அவமானமாகத்தான் இருக்கிறது.

"இருந்தாலும் தூதாராவின் பேத்தி விஷயத்தில் ஏனோ என் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை. இது கண்ணன் கோயில் முகப்பில் நடந்ததால் ஏதோ காரணார்த்தமாகத்தான் இப்படி ஓர் ஆசையை ஆண்டவன் உண்டாக்கியிருக்கிறானோ என்றுகூடத் தோன்றுகிறது. இதை உங்களிடம் சொல்லிச் சம்மதம் பெறுமுன் ராவ்தூதாவைப் பார்க்கக் கூடாது என்பதாலேயே அவரைச் சந்திக்காமல் இங்கு வந்து விட்டேன்" என்றான் கும்பராணா.

"கும்பா, நீ உன் சொந்த உணர்ச்சியை வைத்துப் பேசவில்லையே தேச க்ஷேமமும் உள்ளடங்கியிருப்பது எனக்குத் தெரிகிறது. ஜோதாவின் மகனை ராய்மல்லும், ராவ் தூதாவின் பேத்தியை நீயும் மணந்து விட்டால் அது இரட்டைச் சங்கிலிகள் போட்டு சிசோதியரையும் ராட்டோர்களையும் கட்டிப் போட்டது போலாகும். முதலில் உன் திருமணத்தை முடிப்போம். 'சுபஸ்ய சீக்ரம்' என்பார்களே. மீண்டும் உன்னை விரைவிலேயே மண மேடையில் பார்க்கிறேன்" என்று கூறியவாறு எழுந்திருந்தார், நைஷ்டிகப் பிரம்மசாரியான சண்டன்.

## அத்தியாயம் 11

# அக்கினிப் பிரவேசம்

மேவாரிலிருந்து ஏகலிங்கரின் அர்ச்சகர்களும் சாரணர்கள் எனப்படும் கவிகளும் வீரர்களும் மேர்தாவுக்கு வருவதாக அறிந்து எல்லையற்ற ஆனந்தமடைந்தார் ராவ்தூதா. என்ன விஷயமாக வருகிறார்கள் என்று அவருக்கு நிச்சயமாகத் தெரியாது. இருந்த போதிலும் அண்மையில் ஜோதாவுடன் மகாராணா விவாக சம்பந்தம் வைத்துக் கொண்ட செய்தி அவருக்கு எட்டியிருந்ததால் இதுவும் ஏதோ நல்ல காரியத்துக்குத் தான் முன்னோடி என்று ஊகித்தார்.

சாரணர்கள் சபையில் படாடோபமாக பிருதாவளிகளைக் கூறினர்.

மகாராஜ ராஜேசுவர, மத்யபதிசுவர, சத்ரபதி, ராஜகுரு, தானகுரு, சைலகுரு, ஹிந்து குலசூரிய, சூரிய வம்சப் பிரதாப, மகாபண்டித, மகாராணா கும்பாஜியின் வடிவழகையும், வீர பராக்கிரமத்தையும், கலை அறிவையும் பற்றி அற்புதமான வடமொழி சுலோகங்கள் சொல்லி, அப்படிப்பட்ட மகாராணா என்ற மகாசமுத்திரம் ராட்டோர் வமிசமென்ற மகாநதியிலிருந்து பிரிந்துவரும் மதுரமான ஓடையாகிய மீராவைத் தன்னில் கலந்து கொள்ள விரும்புவதாக வாசாலகத்துடன் முடித்தார்கள்.

ராவ்தூதா ஆனந்தக் கூத்தாடினார். மகன் மரணமுற்ற பின்னும் இவ்வளவு காலம் தாம் உயிர் வாழ்ந்தது வீண் போகாமல் பேத்தியை சித்தோர் சிங்காதனத்தில் அமர்த்திப் பார்க்கும் பாக்கியம் கிடைத்ததே என்று பேருவகை கொண்டார். பெண் வீட்டார் தேங்காயை எடுத்துச் செல்லாமல், பெண் வீட்டாரிடமிருந்து தேங்காய் வந்ததைப் பெரும் பாக்கியமாகக் கருதினர்.

ஃ ஃ ஃ

"டாகுரின் திரு உள்ளம்தான் இது" என்று மீராவிடம் அடித்துச் சொன்னாள் சந்திரமுகி. அன்று டாகுர் துவாரத்தில் மகாராணாவைப் பார்த்தவுடனேயே என் மனத்தில் பட்டு விட்டது" என்றாள்.

புயல் காற்றில் அகப்பட்டுக் கொண்ட துரும்பு போல் மீரா பிடிப்பின்றித் தடுமாறினாள். கிரிதர விக்கிரகத்தின் கழலினைக் கைகளால் பற்றிக் கொண்டாள். ஆனால் எவ்வளவு நாழிகைப் பற்றிக் கொண்டிருக்க முடியும்? அவளையறியாமலேயே அவளது கைகள் தாமாகப் பிடிப்பை இழந்தன. மீண்டும் பற்றிக்கொள்ள முடியாமல் புறங்கை எலும்புகளும் நரம்புகளும் நெகிழ்ச்சியின்றிச் சோர்ந்து விழுந்தன.

கண்ணனைப் பிடித்துக் கொள்வதோ, அவனை விடுவதோகூடத் தன் கையில் இல்லை என்பது ஸ்தூலமாகவே பட்டுவிட்டது அவளுக்கு. அவன் விட்டுவிட நினைத்தால் இவள் எப்படி அதன்பின் ஒட்டிக் கொள்ள முடியும்? 'விட்டு விடாதே' என்று வேண்டிக் கொண்டு கானம் செய்தாள் :

கொள்ளுவதும் தள்ளுவதும்
என்வசம் இல்லை ஐயா!
உன் பரம் என்பதனால்
தள்ளி விடாதே ஐயா!

பழ மரம்நீ -- உன்னைப்
புகலடைந்த பட்சி நான்
சரோவரம் நீ -- உன்னுள்
சஞ்சரிக்கும் கயல் நான்

மால்வரை நீ -- உன் மேல்
மகிழ்ந்தாடும் மயில் நான்
பால் நிலாநீ -- உன்னைப்
பருகும் சகோரம் நான்

ஆணி முத்துநீ -- உந்தன்
ஊடே செல்லும் இழை நான்
காஞ்சனம் நீ -- உன்னைக்
கரைக்கும் அமலன் நான்

ஆயர்பாடிச் செல்வா! மீராவின் நாதனே!
ஆண்டவன் நீ எனக்கு அடியாள் நான்
உனக்கு

"மீரா, இதென்ன அசட்டுத்தனம்? நடக்க வேண்டிய விஷயத்தை ஏற்க மறுக்கிறாய்? நடக்க முடியாத விஷயத்துக்காக இதயத்தை நொறுக்கிக் கொள்கிறாய்! உனக்கு என்ன வந்து விட்டது?" என்று சந்திரமுகி எவ்வளவோ 'சொல்லிப் பார்த்தாள். மீரா அடங்கவில்லை. பூரண சந்திரனைப் பார்த்துக் கொந்தளிக்கும் கடலை 'அடங்கியிரு' என்று யார் உத்தரவிட முடியும்? மீரா

தாஜ் பப்ளிசிட்டீஸ்

அலை வீசி ஆடிப் புரண்டாள்; சீறி எழுந்தாள்; சோர்ந்து துவண்டாள்.

அவளுடைய பித்தத்தைத் தீர்க்க வேண்டும்என்று மருத்துவர்களை வரவழைத்தார்கள்.

மீரா சிரித்தாள். வெயில் மிகவும் அதிகமானால் அது காரணமாகவே கோடை மழை பொழியுமல்லவா? துக்கத்தின் எல்லையில் சிரிப்புப் பிறந்தது. சங்கீதம் பிறந்தது.

வைகுந்தனின்றேல் வாழ்கில்லேன் -- அம்மா
மருந்து தந்தால் இந்நோய் பறந்திடுமே அம்மா
செல்லரித்த மரம்போல் செல்வனைப் பிரிந்தேன்
சித்தம் சிதைந்துபோகும் பித்தம் பிடித்து நின்றேன்
மருத்துவத்தால் எனது வருத்தம் தீருமோ-என்றும்
இயலாத செயலுக்கு முயலவேண்டாம் அம்மா
அமல நீரில் பிறந்த கமலமும் கமடமும்
கயலும் அதனைவிட்டு அயலிடத்தில் வாழுமோ!
கிரிதரன் இடம்தேடி திரிந்து வனம் வனமாய்
மீராப்ரபுவைக் கூடிப் பேரானந்தம் பெறுவேன்

வைத்தியர் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வெளியேறினார். இளைத்து வெளிறிப்போய், கண் சிவந்து கிடக்கும் மகளைக் காணக் காணச் சந்திரமுகியின் பெற்ற வயிறு உருண்டு புரண்டது. மீராவின் மதுர கண்டமும் உருண்டு புரண்டது.

கதறிக் கதறிக் கண்கள்
குருதிச் சிவந்திடுவேன்
குருதிச் சிவந்திடுவேன்
பதறிப் பண் பாடிடுவேன்
கிரிதரனே எனக்கு
அரிதிற் கிடைத்த வரன்
பிறிதொரு மனிதரைச்
சிறிதும் கண்கொண்டு பாரேன்
கூடல் என்ற கங்கை
ஊடல் எனும் யமுனை
இரு விழி வழியாய்
இழிய நீராடுவேன்
இதயக் கமலத்திலே
இணைய நினைவிருத்தி
மீராவின் ப்ரபுவுக்கு
நீராஜனம் செய்வேன்

மீரா கதறுவதற்கே விரும்பினாள். மீரா கண்ணீர் பெருக்கவே விரும்பினாள். எந்த வகைய கண்ணீர்? கண்ணனைச் சேர்ந்த ஆனந்த வெள்ளமையில் பெருகும் தூய பனிங் கனைய கங்கைக் கண்ணீர்; அவனைப் பிரிந்த துயர் இருளில் பெருகும் கரிய யமுனைக் கண்ணீர். ஆம், அவனைப் பிரிந்து கண்ணீர் விடவும் அவள் உள்ளூற, தன் இதயத்தின் அடி ஆழத்தில் ஆசைப்படத்தான் செய்தாள். ஏனெனில் அந்தப் பிரிவுக் காரிருளில் கண்ணனின் கார்மேனியைக் காணலாமல்லவா? அப்போது பெருக்கும் கண்ணீரில் அமிழும்போது யமுனையிலேயே மூழ்குவதாக மகிழலாமல்லவா?

மீரா கண்ணனைக் குறித்துக் கண்ணீர் விடவே அவாவினாள். பூலோக மானுடருடன் தொடர்பு பட்டு, அதைக் தடுப்பதற்காகக் கண்ணீர்விட அவள் விரும்பவில்லை. அது தாங்கவொண்ணாத அருவருப்பாகவே அவளுக்குப்பட்டது.

சந்திரமுகி அவளை அண்டுவதையே நிறுத்திவிட்டாள். ஆயினும் திருமண ஆயத்தங்கள் மட்டும் தடையின்றி முன்னேறிக் கொண்டே யிருந்தன.

மீராவும் கண்ணனின் காப்பு கடைசி கடைசி விநாடியிலாவது கிட்டியே தீரும் என்று நம்பி உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருந்தாள். ஆம், உயிரை விடுவது அவளுக்குப் பெரிதாக இல்லை. ஆயின் தானே உயிர் விடுவது எனில் கண்ணன் தன்னைக் காப்பான் என்பதில் நம்பிக்கையில்லை என்றுதானே பொருள். ஏன் அப்படி நம்பிக்கை இழக்க வேண்டும்?

நம்பிக்கை நிறைந்த நயனங்களுடன் கிரிதரனையே நோக்கியவாறு தீபாராதனை செய்துகொண்டிருந்தாள் மீரா. தீபமே தீபத்தைத் தூக்கித் தீபத்துக்கு ஆராதனை செய்வது போலிருந்தது. தீபம் கையில் பிடித்தபடியே இருக்க, மீராவின் நினைவு முழுதும் கண்ணனிடமே நங்கூரமடித்தாற் போல் நிலைத்தது. ''ஹரி! துயரப்படுவதற்கும் பிரார்த்திப்பதற்கும் கூடச் சக்தி இழந்து துரௌபதி இற்று விழுகிற இறுதி நேரத்தில் சேலை தந்து அவளது சீலத்தைக் காத்தாயே! என்னையும் இறுதிப் பொழுதில் ரட்சிப்பாய் அல்லவா?'' என்று அவளை வாய் விட்டுக் கேட்டவாறு, அப்படியே கண்களை மூடிக் கொண்டாள். மூடிய கண்கள் மூடியபடியே இருந்தன. தீபத்திலிருந்து சுடர்கள் 'சுறுசுறு'வென்று அவள் பாதத்தில் தெறித்தன; பாதத்தைத் தழுவிய காங்க்ரா எனும் ஆடையைப் பற்றின. அடுத்த விநாடி மீராவைத் தீ சூழ்ந்து கொண்டது.

''தீ, தீ'' என்று அலறிக்கொண்டு சேடிகளும், சேவகர்களும் ஓடி வந்தனர்.

உள்ளே வெந்து கொண்டிருந்த மீராவுக்கு வெளியே வெந்துகொண்டிருப்பது இதுவரை தெரியவில்லை.

சத்தம் கேட்டுக் கண்களைத் திறந்தாள். தன் ஆடையில் குதித்துப் பரவும் தீயைப் பார்த்தாள். குதித்து விளையாடும் குழந்தைக் கோமளன் தன்மீது ஏறி வருவதாக அவளுக்குத் தோன்றியது. தனது வலது கையால் தானாகவே தீக்கொழுந்தை அள்ளி எடுத்தாள்.

தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா - உன்னைத்
தீண்டும் இன்பம் தோன்றுதடா நந்தலாலா

என்று நம் தமிழகக் கவி பாடிய இன்பத்தை அநுபவித்தாள்! ஆனால் அந்த இன்பத்தை இகவுலகில் அநுபவிக்க முடியாது. இக உலக நினைவு தப்பிய மானசீக லோகத்தில் அந்த ஆனந்தத்தைத் துய்த்தாள் மீரா.

மீரா கண்ணைத் திறந்து பார்த்தபோது சுற்றிலும் உற்றார் உறவினர் கவலை கொண்ட முகத்துடன் அமர்ந்திருந்தனர்.

சந்திரமுகி விம்மி விம்மிப் பேசினாள்: ''கண்ணே! நீ உன் உயிரை விட்டுவிட முயலுவாய் என்று தெரிந்திருந்தால் நான் இந்த விவாக ஏற்பாட்டை நிச்சயமாக நிறுத்தியிருப்பேனே? நீ இப்படிச் செய்யலாமா?'' என்றாள்.

(தொடரும்)



ஸ்ரீ வி. எஸ். கே. துரைசாமி நாடார் Commissioner of Incometax (Retd.) அவர்கள் புதல்வன் சிரஞ்சீவி D. G. ராஜன் A. C. A. (England & Wales), Chartered Accountant, Calcutta, அவர்களுக்கும் தென்னிந்திய பிரபல தொழிலதிபர் ஸ்ரீ அய்யா நாடார் அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி ரதி சுதா அவர்களுக்கும் சமீபத்தில் திருமணம் சிவகாசியில் வெகு சிறப்பாக நடைபெற்றது.

# சிபாரிசு

பி.வி.ஆர்

ஒரு சனிக்கிழமை. காலை ஒன்பதரை மணி.

சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்த பரமசிவம் மூன்றாவது தடவையாக அன்றைய தினசரியைப் படித்து விட்டார். அவர் இது வரையில் வகித்திருந்த பதவிக்கும் வயதுக்கும் அனுபவத்துக்கும் ஏற்றபடியான வேலை எந்தக் கம்பெனிக்கும் தேவையில்லை என்று எத்தனையோ விளம்பரங்களை யெல்லாம் பார்த்த பின்தான் அவருக்குப் புரிந்தது. இரண்டு மாதங்களாகவே அவரும்தான் தினம் தினம் காலையில் காப்பி சாப்பிட்டதிலிருந்து வெள்ளெழுத்துக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு தினப் பத்திரிகையின் மூலை முடுக்குகளிலெல்லாம் தேடுகிறார். ஒன்று அவர் வாங்கியிருந்த சம்பளத்தில் பாதிக்கும் குறைவான வேலைகள் காலியாயிருக்கின்றன; அல்லது இரண்டு மடங்கு சம்பளத்துக்குக் குறைவாக ஊதியம் பெற்றவர்கள் விண்ணப்பித்துக் கொள்ள முடியாத வேலைகளுக்குத் தேவைகள் தோன்றுகின்றன. அப்படியே அவருடைய மனத்துக்கு ஏற்றவையாக ஏதாவது இரண்டு மூன்று கண்ணில் பட்டாலும் அவை பம்பாயிலோ கல்கத்தாவிலோ காலியாகி விட்ட வேலைகள்.

இன்றும் என்றும்போல் அவர் மனம் ஏமாற்றத்தில் முடிந்து அலுத்துக் கொண்டது. ஏற்கனவே புகைந்து கிடக்கும் வெறுப்பும், தம்மீது தாமே அர்த்தமில்லாமல் எழும் கோபமும் வேறு. இந்த நிலையில்—

கல்லூரிக்குப் புறப்படத் தன்னைத் தயார் செய்து கொண்டிருந்த அமிர்தம் திடீரென்று ஹாலில் பிரவேசித்து ஒரு கணம் நின்றாள். அவள் தம்மைத்தான் காண வந்திருக்கிறாள் இப்போது தம்மைத்தான் தான் இருந்த இடத்திலிருந்தவாறே கவனிக்கிறாள் என்பதைப் பரமசிவம் உணர்ந்தார். ஆனால் இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்னால் அவர் எழுந்திருக்கவோ, பேச்சை ஆரம்பிக்கவோ முயலவில்லை. அதற்குண்டான மன நிறைவோ, ஏன், ஒரு தைரியமோ அவரிடம் இல்லை. மேலும், அவர் தாமாகத் தம் முன் அவருடைய கற்பனையின் கோளாறினால் சிருஷ்டி செய்து கொண்டு விட்ட அவருடைய பரிதாப உருவம் கண்முன் நின்று வதைத்தது.

வந்த அமிர்தம், ஹாலின் கோடியில் கண்ணும் கருத்துமாய் வெள்ளைப் பூட்ஸ்களுக்குப் பாலிஷ் பூசிக் கொண்டிருந்த மகனிடம் தாழ்ந்த குரலில் ''ஏம்பபா, பாபு! நேத்தே நான் சொன்னேனே?'' என்று ஆரம்பித்தாள். குரலின் தயக்கத்திலேயே தன் நோக்கம் அவன் மூலமாக நிறைவேறாது என்ற அவளுடைய பயம் தெரிந்தது.

''என்ன அம்மா சொன்னே?'' பாபுவின் இடது கையில் பூட்ஸ் அமுந்திக் கிடக்க, வலது கை வேகத்துடன் முன்னும் பின்னுமாக ஒரு வெள்ளைக் கட்டியைத் தேய்த்துக்கொண்டிருந்தது.

''இன்னிக்கு டெப்போவிலே கூபனை வாங்காமப் போனால் தேனாம்பேட்டை ஆபீஸிலே தான் போய் வாங்கணுமாம்...''

''நீதான் பார்க்கிறாயே, அம்மா. நான் என்ன செய்கிறேன்னு?''

''சைக்கிள்ளே போய்ட்டு வந்தால் பதினைந்து நிமிஷத்திலே வந்து விடலாம்...''

''முடியாது, அம்மா! கடைசி நாள்னு கண்டிப்பா பெரிய 'க்யூ' இருக்கும்... எனக்கு கிரிக்கெட் பந்தயம் சரியாக பத்தரை மணிக்கு ஆரம்பிக்கிறது....''

''எனக்கு இன்னிக்குப் பேராசிரியர்கள் கூட்டம் இருக்குடா பாபு... அதுக்கே நேரமாகி விட்டது....இல்லாவிட்டால் நானே போய் விடுவேன்....''

''அப்பா சும்மாத்தானே இருக்கார்... அவரைப் போகச் சொல்லேன்... அவருக்குத் தான் இப்போ ஆபீஸ் கீபீஸ் இல்லையே....''

பின்னே யதார்த்தமாகக் கூறியது பரமசிவத்தைச் சாட்டை கொண்டு அடிப்பது போலிருந்தது. முன்னெல்லாம் பாபுவோ, மற்ற யாருமோ இந்த மாதிரி வார்த்தைகளைச் சொல்லி அவர் கேட்க வேண்டிய வாய்ப்புகளே கிடையாது. அப்படியே பாபு



சொல்லியிருந்தாலும், கல்லூரிக்குப் போகும் பிள்ளை என்று மனம் அதில் ஒட்டாமற் போயிருக்கும். ஆனால் இன்று ஒவ்வொரு வார்த்தையும் அவருடைய உள்ளத்தைத் தைத்தது. 'அப்பாவைப் போகச் சொல்லேன், அப்பா சும்மாத்தானே இருக்கார்... ஆபீஸ் பியூன் இல்லையே!'

ஆனால் அமிர்தம் பின்வாங்கினாள். அவருக்குத் தெரியும்; அவள் தானாக வந்து அவரிடம் பால் கூபன் வாங்கும் வேலையைக் கொடுக்க மாட்டாள் என்று. இரண்டு மாதங்களாக அவர்களுக்குள் தோன்றிவிட்ட— தோன்றிவிட்டதாக அவர் நினைத்துக்கொண்டிருந்த அகழி நாளுக்கு நாள் பெரிதாகிக் கொண்டே வருகிறது. அவள் எது சொன்னாலும் அவருக்குக் குத்தலாய்ப் படுகிறது. அவருடைய தளர்ந்து போன தன்னம்பிக்கையால் பீறிட்டு வரும் கோபம் 'சுரீர், சுரீர்' என்று அமிர்தத்தைத் தாக்கி யிருக்கிறது.

பரமசிவம் மாதா மாதம் அறுநூறு ரூபாயுடன் வந்த நாட்கள் மறைந்து விட்டன. அவருடைய அறுநூறுடன் அமிர்தத்தின் ஐந்நூறும் அலமாரியில் சேர்ந்து உறவாடும் தாம்பத்தியத்தின் ஐக்கியமே அந்த உறவாடலில் பிரதிபலிக்கும். 'உன் பணம்' 'என் சம்பாத்தியம்' என்ற வார்த்தைகளுக்கோ, உணர்வுகளுக்கோ இடமில்லாத ஓர் அன்பும், இருவரையும் கட்டிப்போட்ட ஒரு பரஸ்பர அபிமானமும் இருந்த நாட்கள் அவை. அவர் வேலை பார்த்த கம்பெனியின் கதவுகளைக் கோர்ட்டார் ஸீல் போட்ட பின் பரமசிவம் பிள்ளையின் 'வெறும் கை' அமிர்தம் கொண்டுவந்த ஊதியத்தைத் தொட்டுப் பார்த்தபோது கை சுடுவதை அவர் உணர்ந்தார். திடீரென்று மனத்தில் ஒரு வெற்றுமை உணர்ச்சி அவரையும் மீறி எழுந்தது. இதற்குக் காரணம் அவருடைய மனத்தில் அவரையும் மீறி எழுந்த பொறாமை உணர்ச்சியோ, அல்லது ஒரு மனைவி சம்பாதித்துத் தாம் சாப்பிடவேண்டிய நிலை வந்துவிட்டதே என்ற ஏக்கமா என்பதை அவராலேயே அறிந்து கொள்ள முடியவில்லை. இந்தப் பரிதவிப்பின் போது ஒரு நாள் அமிர்தம் செலவு ஜாபிதாவை விகல்பமில்லாமல் படித்தபோது, அவர் வெகுண்டார். அக்கோபத்தில் 'நான் வேண்டுமானால் இன்னொரு வேலை கிடைக்கிற வரை தங்கையிடமோ அண்ணாவிடமோ போய் விடுகிறேன்!' என்று கத்தினார். அதற்குப் பின் அமிர்தம் இன்று வரையில் பணத்தைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசியவள் அல்ல.

பக்கத்து வீட்டுப் பையனிடம் கெஞ்சிக் கூத்தாடி, அவனைப் பால் கூப்பன் வாங்க அனுப்பிவிட்டு, அமிர்தம் மீண்டும் ஹாலுக்குள் வந்தாள். பாபு, தான் போட்டு முடித்துவிட்ட வெள்ளைப் பாலிஷின் வெண்மையைக் கண்டு தன்னுள் வியந்து கொண்டிருந்தான்.

சாய்வு நாற்காலியில் பரமசிவம் கண்களை மூடியவாராய்ப் படுத்திருந்தார். தொந்தியின் மேல் இருந்த பேப்பர் நழுவி, பாதி நாற்காலியிலும், பாதி அந்தரத்திலுமாய்த் தொங்கிக் கொண்டிருந்தது.

''என்னங்க... தூங்குறீங்களா?....?''

திடுக்கிட்டுப் போய்க் கண் விழித்த பரமசிவம் தம் எதிரே நிற்கும் அமிர்தத்தைப் பார்த்தார். ''என்ன வேணும்?''

''எனக்கு கல்லூரியிலே ஒரு மீட்டிங்.... அதுக்குப் போறேன்....''

''சரி...''

''நீங்க போய் இன்னிக்கு உங்க இன்ஷூரன்ஸ் பிரீமியத்தைக் கட்டிவிடுங்களேன்... ஒரு மாதத் தவணையும் தாண்டியாச்சு...''

''செத்தப்புறம் கெடைக்கிற பணத்துக்கு இப்போ நான் உசிரை விடுவானேன்! கட்டுவதற்கு என்கிட்ட பணம் இல்லை! உன் சம்பாத்தியத்தில் எனக்கு ரெண்டு வேளை சோறுமட்டும் கிடைத்தால் போதும்!''

''இப்போ கட்டலைன்னு பாலிஸி 'லாப்' ஸாகிவிடும்...''



திடீரென்று சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்தார் பரமசிவம். ''இந்த இன்ஷூரன்ஸ் லே உங்களுக்காக எடுத்ததுதான். இப்போ என்னை நீயே காப்பாத்தறே... இந்த நிலைமையிலே அது லாப்ஸாகப் போனால் எனக்கு ஒண்ணும் நஷ்டம் இல்லே.... நான் செத்தப்புறம் கட்டியிருக்கிற பணத்திலே எத்தனை கொடுக்கிறார்களோ, அதை வாங்கிக்கோ.''

''ஏன் இப்படியெல்லாம்தான் பேசுகிறீர்களோ, எனக்குத் தெரியவில்லே.''

''பெண்டாட்டி உழைச்சு ஒரு புருஷன் அவளுக்கு முன்னால் கையேந்தி நின்றால் அப்படித்தான் பேசுவான்...''

''இதே 'எம். ஏ.'யை வைச்சுண்டு நான் அன்னிக்கு வேலேயில்லாம இருந்தபோது நான் இப்படி நடந்து கொள்ளவில்லேயே...! ...சரி! நான் வீட்டிலேயே இருந்து கொண்டு ஒரு பெண்டாட்டி தன் புருஷனுக்குச் செய்ய வேண்டிய கடமையை இனிமே செய்யறேன்... இன்னிக்கே இந்தப் பேராசிரியர் வேலேக்குக் கால் காகிதம் கொடுக்கிறேன். என்ன சொல்கிறீர்கள்?''

பரமசிவம் மௌனமானார்.

அவள் தொடர்ந்தாள்.

''கல்லூரியிலே படிக்கிற பிள்ளையையும், பெண்ணேயும் காப்பாத்தறது இனிமேல் உங்க பொறுப்பு... உங்களுக்கு உழைச்சுப் போடறதுக்குன்னு நான் இருக்கேனே, என் மானத்தை மறைக்கத் துணியும், வயிற்றைக் கழுவச் சோறும் போடறது உங்க பொறுப்பு...அதை நீங்க நாளையிலிருந்து செய்யுங்கள்... நான் இன்னிக்கே ராஜினுமா பண்ணிடறேன்...''

இதுவரையில் என்றுமே முகத்தில் அடித்தாற்போல் பேசியிராத அமிர்தத்தைப் பார்த்தபோது பரமசிவத்துக்கு உடம்பெல்லாம் சிலிர்த்தது.

**ப**த்து மணிக்கு பாபு கிரிக்கெட் மட்டையை ஆட்டிக் கொண்டே கிளம்பினன். அமிர்தம் சொல்லிக் கொள்ளாமலே புறப்பட்டாள். மீண்டும் சாய்வு நாற்காலியில் அமர்ந்த பரமசிவத்துக்குச் சாப்பிட வேண்டும் என்ற உணர்வே தோன்றவில்லே. முன்னெல்லாம் 'சாப்பாடு தயார்' என்று வேளை தவறிவிட்டால், நிமிடத்துக்கு மூன்று தடவை ஞாபகப்படுத்தும் சமையற்காரி பாக்கியத்தம்மாள், இப்போது பரமசிவம் உயிரோடு இருக்கிறாரா இல்லேயோ என்பதைப் பற்றிக்கூடக் கவலே கொள்வதாகத் தெரியவில்லே. அந்த வீட்டில் அவளுக்கு இருக்கிற ஒரு வேலேகூடப் பரமசிவத்துக்கு இல்லேயே?

சுமார் பதினெரு மணிக்கு பெண் சீதாவும் அவளுடைய சிநேகிதி பங்கஜமும் பக்கத்து அறையிலிருந்து இரைந்து பேசிக்கொண்டிருந்தது அவருடைய காதுக்குக் கேட்டது.

''என்ன சீதா! இந்த விண்ணப்பத்திலே உன் அப்பா பெயரை மட்டும் எழுதியிருக்கே அவருக்கு வேலே என்னன்னு எழுதலேயே... இப்படியே அனுப்பினல் பிரின்ஸிபால் திருப்பி அனுப்பிவிடுவாரே?''

''ரெண்டு நாளா எனக்கு அதைப் பத்தித்தானடி யோசனேயா இருக்கு? என்ன எழுதறதுன்னே புரியல்லே...அம்மா பேராசிரியையாகயிருக்காள்னு பெருமையாக எழுத முடியல்லே. அப்பாவுக்கு வேலேயில்லே என்று எழுத அவமானமாயும் இருக்கு... என்ன எழுதலாம்னு நீ நினைக்கிறே?''

''தாற்காலிகமாக வேலே இல்லாதவர் என்று எழுது. உங்க அப்பா சீப் அக்கௌண்டண்டாக இருந்தவர்...! அந்த மாதிரி வேலே மறுபடியும் கிடைக்காதா என்ன?''

''அந்த மாதிரி எழுதினல் அப்புறம் அப்பா கிட்டே காட்டிக் கையெழுத்து வாங்க முடியாது....''

''ஏன்?...''

''மூஞ்சியிலே எறிஞ்சுடுவார்.''

''அவருக்குக் கோபம் வரும்னு சொல்றதையே என்னல் நம்ப முடியல்லே...சிரிச்சுச் சிரிச்சுப் பேசி, கேலியெல்லாம் செய்வாரே!''

''அதெல்லாம் பழைய காலம்....இப்போ என் அம்மா படற அவஸ்தையைக் கண்டால் எனக்கே ஏண்டா இந்த வீட்டிலே இருக்கோம்னு தோணிடறது...''

''சரிசரி.. உனக்குத் தொட்டதற்கெல்லாம் இப்படித்தான் ஏதாவது தோணும்... இப்படிக் கொண்டா உன் அப்பா கிட்டேயே என்ன எழுதலாம்னு நான் கேட்டுண்டு வரேன்....''

''உன் மேலே எரிந்து விழுவாரடி...''

''அதையும்தான் பார்க்கிறேனே!''

இரு பெண்கள் பரமசிவத்தைப் பற்றி எப்படி எடை போட்டிருக்கிறார்கள்.

அவர் தம்முள் தேம்பிக் கொண்டிருக்கையிலேயே பங்கஜம் தனக்கே உரித்தான புன்முறுவலுடனும், அலட்சியத்துடனும் கையில் ஒரு நீல நிறத்தாளே எடுத்துக் கொண்டு அவர் முன் வந்து நின்றாள்.

''இந்தக் 'காலம்'த்திலே என்ன மாமா எழுதறது....?''

''நீதான் கரெக்டா சொல்லிட்டியே... அதையே எழுது....'தாற்காலிகமாக வேலே இல்லாதவர்.'

''அப்போ நாங்க பேசினதெல்லாம் காதில் விழுந்ததா மாமா...?''

''ஏன்... விழுந்தால்தான் என்ன?''

''எங்களே மன்னிச்சுடுங்கோ மாமா.... நாங்க ஏதாவது தப்பாப் பேசியிருப்போம்.''

''இப்போ நீங்க என்னேப் பற்றி எது பேசியிருந்தாலும் அது தப்பாக இருக்க முடியாது. ரைட்டாகத்தான் இருக்கும்...''

''தயை செய்து இதிலே உங்க கையெழுத்தைக் கொஞ்சம் போட்டுத் தர்றீங்களா?''

அவள் கொடுத்த பேனவாலே அவர் கையெழுத்திட்டார். கதவோரத்தில் நிற்கும் சீதாவின் நிழல் ஒரு விநாடி நேரத்துக்கு அவர் மனத்தை அறுப்பது போல் இருந்தது.

பி. ஏ. படிக்கும் பிள்ளே, தகப்பனரைப் பால் கூப்பன் வாங்கி வரட்டும் என்கிறான். பெண்ணுக்கு அப்பாவுக்கு வேலேயில்லாததால் அவமானம்! பெண்டாட்டி அலட்சியப்படுத்துகிறாள்!

இவற்றையெல்லாம் பொறுத்துக் கொண்டு பரமசிவம் இன்னும் உயிரோடு இருக்கிறார்! நாற்பது குமாஸ்தாக்கள், எட்டு உதவி அக்கௌண்டண்டுகள், மூன்று துணை அக்கௌண்டண்டுகள் இவர்களுக்கெல்லாம்

தலைமை வகித்து, கம்பெனியின் நிதி நிர்வாகத்தைப் பல்லாண்டுகளாகப் பொறுப்புடன் நடத்திய பரமசிவம் இன்று, துரும்புக்கும் கேவலமாகி விட்டார்! கம்பெனியின் நலிவிதி அவரை இந்த நிலைக்கு இறக்கி விட்டது.

**ம**றுநாள் ஞாயிற்றுக் கிழமை. ஏழு மணி.

தம் முன் அப்போதுதான் பாக்கியத்தம்மாள் வைத்துவிட்டுப் போன காப்பியைக் குடிப்பதா, வேண்டாமா என்ற யோசனையில் ஆழ்ந்தவரைப் போல் அமர்ந்திருந்தார் பரமசிவம். அவரைப் பார்த்து, தினப் பத்திரிகையும், கையுமாக வந்த அமிர்தம், "இந்த விளம்பரத்தைக் கொஞ்சம் பாருங்கள்..." என்று கூறினாள்.

அவருடைய கை தானாகப் பத்திரிகையை வாங்கிக் கொண்டது.

"இது கம்பெனி பிராஸ்பக்ட்ஸ்... உருவாகப் போகிற கம்பெனி!"

"அதனால் என்ன? சீப் அக்கௌண்டண்டு, மானேஜர் வேலைகளெல்லாம் இருக்குமே.."

"அதை எனக்குத்தான் தூக்கிக் கொடுக்கப் போகிறார்களாக்கும்... டைரக்டர்களுக்கு வேண்டப்பட்டவர்கள் ஆயிரம் பேர்கள் இருப்பார்கள்...." என்ற பரமசிவம் பத்திரிகையை அவளிடம் கொடுத்து விட்டு, "நான் ஒரு வேலை யில்லாதது பற்றி நானே ராத்திரியும் பகலுமாய்ச் செத்துக் கொண்டிருக்கிறேன். நீ ஏன் வேறு துளைக்கிறாய்?" என்றார்.

"எதற்கும் ஒரு விண்ணப்பத்தைப் போட்டு வையுங்களேன். அதிருஷ்டம் இருந்தால் கிடைக்கிறது..."

"அதிருஷ்டம் இருந்தால் இருந்த வேலை போயிருக்காது! சரி சரி...நீ சொல்லிக் கேட்க வேண்டியவன்தானே. போட்டு வைக்கிறேன். பாவம், உன் பணம் முழுதும் ஒரு காசு பாக்கி இல்லாமல் வீட்டுச் செலவுக்குக் கரைகிறது!"

"நான் அதை உத்தேசம் பண்ணிச் சொல்லவில்லை."

"எதை உத்தேசம் பண்ணிச் சொன்னால் என்ன? நான் வீட்டுக்கு ஒரு பாரம்...சமையற்காரி கூடக் காப்பியை 'லொட்டு'ன்னு வைக்கிறா... சம்பாதிச்சப்போ இருந்த மதிப்பு இப்போ இல்லே என்கிறதை நீங்க எல்லாரும் பேர் பேரா சொல்லாம சொல்லுகிறீர்கள்.."

"சரி, நீங்கள் போட வேண்டாம். வர வர கைபட்டா குத்தம், கால் பட்டா குத்தம்னு உங்களுக்குத் தோண ஆரம்பிச்சாச்சு..."

"கையும் காலும் உடம்பிலே பட்டா குத்தமில்லே, அமிர்தம், குத்தமில்லே! என் மனசைக் கையாலே பிழிஞ்சு, காலாலே உதைக்கிறபோதுதான் என் உடம்பெல்லாம் எரியறது..."

"நீங்கள் இவ்வளவு தூரம் பேசுவதற்கு, இந்த வீட்டிலே ஏதும் நடந்துவிட்டதாக எனக்குப் படவில்லை. உங்க மனசுதான் 'நான் வேறே, என் பெண்டாட்டி வேறே' என்று நினைக்கிறது. நீங்களும் நானும் புருஷன் பெண்டாட்டின்னு நான் நினைக்கிற அளவுக்கு உங்க சுகம்தான் என் சுகம், உங்க துக்கம்



முதலாளி: உன்னைத் திருமணம் செய்துகொள்ளச் சொல்லி என் மகனைக் கேட்டது உண்மையா?
டெலிபோன் ஆபரேட்டர்: ஆமாம், சார்!
முதலாளி: என்னையல்லவா நீ வந்து முதலில் கேட்டிருக்க வேண்டும்?"
டெலிபோன் ஆப்பரேட்டர்: உங்களுக்கு வயதாகி விட்டதே சார்!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

என் துக்கம்னு நான் என் மனசிலே என்னென்னிக்கும் மறக்காம இருக்கிற மாதிரி நீங்களும் நினைச்சா, மறக்காமல் இருந்தா, இந்த மாதிரி நீங்க எரிஞ்சு விழறதுக்கோ, தாபப்படறதுக்கோ ஒண்ணுமே இருக்காது.... இப்போ உங்களுக்கு வேலை யில்லாமல் போயிருக்கிறதுக்கு என் சம்பாத்தியமாவது ஏதோ மானமா வாழ இருக்கேன்னு நீங்க திருப்தியா யிருக்கணும்... அதை விட்டுவிட்டு, உங்களுக்குள்ளே, நீங்களே ஒரு வட்டத்தைப் போட்டு, அதுக்குள்ளே சுற்றிச் சுற்றி வந்தா, என்ன பிரயோசனம்? உங்களுக்கு வேலை இருந்து, நான் என் வேலையை இழந்து போயிருந்தா என்ன வாயிருக்கும்? சமையற்காரியை அனுப்பிவிட்டு நானே இன்னொரு வேலை கிடைக்கிறவரைக்கும் வீட்டு வேலையைத் தலைமேல் போட்டுண்டிருப்பேன்..."

பரமசிவம் அவளுடைய பேச்சின் கடுமையில் அசந்து போனாலும், அசம்பாவிதமாகப் பதில் சொன்னார்:

"ஏன் என் தலையிலே வீட்டு வேலையைத் தன்னு... சமையற்காரியை அனுப்பிவிட்டு நான் நளபாகம் செய்யறேன்!"

அவருடைய பதிலே அமிர்தத்துக்கு நாராசமாகப் பட்டது.

"சரி... இன்னும் உங்களுக்கு என்னைப் புரியவில்லைன்னுதான் நான் நெனைக்க வேண்டியிருக்கு... காப்பியையாவது குடியுங்கள்."

அடுத்த நிமிஷம் அவள் பேப்பரை வைத்து விட்டு வெளியேறினாள்.

**சீ**ல்லூரியில தனக்கு நான்கு ஆண்டுகள் பேராசிரியையாக இருந்த அமிர்தம் எதற்காக வரப்போகிறாள் என்பதைத் தனக்குத் தானே கேட்டுக் கொண்டிருந்த ரேவதி,

# இப்போழுது hgec வழங்கும் இந்த ரேடியோ அபூர்வமான தோனியும், எழிலுமுடையது!



## எச்ஜிஇஸி ஸெஞோரா

அகில உலக நிகழ்ச்சிகளையும் தெளிவாக வழங்கு இதன் விலை ரூ. 300 தான். எக்ஸைஸ் தீர்வை வரிகள் தனி.

6 வால்வுகள் 9 பணிகளுக்கு. 3 அலைவரிசைகள் மின்விசைச் செலவு 3.2 வாட்டுகள். ஏஸி மற்றும் ஏஸி/டிஸி மெயின்கள். மாஜிக் ஐ. பியானோ கீ ட்யூனிங். வெளிப்புற ஸ்பீக்கர் மற்றும் ரிகார்டு பிளேயர் இணைக்கவும் வசதி உண்டு. உறுதிமிக்க அழகிய வேலைப்பாடுகள் கொண்ட கேபினட்.

தன் கணவனிடம், ''பத்து மணிக்கு ப்ரொபஸர் வருவதாகச் சொல்லியிருக்கிறார்... உங்களுக்கும் அறிமுகம் செய்து வைக்கிறேன்'' என்றாள்.

''நான் எதற்கு ரேவதி இருக்க வேண்டும்? உன்னைத் தேடிக் கொண்டுதானே வருகிறாள்?'' என்றான் தாமோதரன்.

''இத்தனை நாள் இல்லாமல் திடீரென்று என்னைப் பார்க்க வருவதென்றால் ஏதாவது முக்கியமான காரணம் இருக்கும்!'' என்று ரேவதி போர்ட்டிகோவைப் பார்த்தாள். ஒரு டாக்ஸியிலிருந்து பேராசிரியை அமிர்தம் இறங்கிக் கொண்டிருந்தாள்.

ஹாலிலிருந்து விரைந்தோடி வாசலுக்குச் சென்று அமிர்தத்தை வரவேற்றாள் ரேவதி.

தன் கணவருக்கும் அமிர்தத்தை அறிமுகப்படுத்திய பிறகு, உள்ளே சென்ற அவள் மூன்று கண்ணாடித் தம்ளர்களில் எலுமிச்சம் பழ ரசத்துடன் திரும்பி வந்தாள்.

''இதெல்லாம் எதற்கு ரேவதி!'' என்ற அமிர்தம், ஏதேதோ பேசிவிட்டு, கடைசியில், ''போன வாரம் பேப்பரைப் பார்த்த போது எனக்கு சந்தோஷமாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது!'' என்றாள்.

''ஏன், என்ன இருந்தது பேப்பரில்...''

''உங்கள் புதிய கம்பெனியைப் பற்றிய விவரங்கள்...''

''ஓ... ப்ராஸ்பெக்டஸா!'' என்று சிரித்தான் தாமோதரன்.

''நீங்கள் மானேஜிங் டைரக்டர்...ரேவதியும் ஒரு டைரக்டர்!'' என்றாள் அமிர்தம்.

''ஆமாம்... என் இரு சகோதரர்களும் அவர்களுடைய மனைவிகளும் கூட டைரக்டர்கள்தான்!'' என்ற தாமோதரன், ''ரேவதி, புரொபஸர் தம் மாணவிகளை மைக்கா சுரங்கம் பார்க்க அழைச்சுண்டு வரலாம்.....'' என்றான்.

''நானே இன்னும் பார்க்கவில்லை...'' என்ற ரேவதி, ''இப்போ ஏதோ சுரங்கமாக கொஞ்சம் வாங்கியிருக்கிறோம்... ஆனால் இனி மேல்தான் சுரங்கத்தில் வேலை ஆரம்பிக்கணும்!'' என்று சொல்லிச் சிரித்தாள்.

அவளுடைய முகத்தையே பார்த்த அமிர்தத்துக்கு எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்று புரியவில்லை.

பிறகு திடீரென்று, ''என் கணவர் ஒரு மைகா கம்பெனியில்தான் பிரதம அக்கௌண்டண்டாக இருந்தார்!'' என்றாள்.

''ஏன் இப்போது இல்லையா?'' —ரேவதி.

''இல்லை... இரண்டு மாசத்துக்கு முன்னாடி தான் அது மூடிந்து விட்டது...''

''பாரதமாதா மைகா மைன்ஸா?'' என்று கேட்டான் தாமோதரன்.

''ஆமாம்.''

ரேவதி மீண்டும் ஆரம்பித்தாள்: ''உங்களுடைய கணவர் வேறு வேலையில் இருக்கிறார், இல்லையா?''

''இல்லை....தம் வயசுக்கும் அனுபவத்துக்கும் வாங்கின சம்பளத்துக்கும் ஏற்ற வேலை வரவில்லை என்கிறார்...''

''நான் கேட்கிறேனே என்று தவறாக எடுத்துக் கொள்ளாதீர்கள். அவர் கடைசியாக என்ன சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தார்?'' என்று கேட்டாள் ரேவதி.

''வருமான வரியும் சேமிப்புத் தொகையும் போகக் கைக்கு அறுநூறு ரூபாய் தேறியது.''

''ப்ரொபஸருடைய கணவர் ஒரு பி. ஏ.'' என்றாள் ரேவதி. ''மிஸ்டர் பரமசிவம் என்று பெயர்...''

''கேள்விப்பட்ட பெயராக இருக்கிறது!''

''ஒருவேளை அப்ளிகேஷன் போட்டிருக்கிறாரோ என்னமோ?'' என்ற அமிர்தம் தொடர்ந்து, ''அவருக்கு இந்த மாதிரி மைகா கம்பெனிகள் என்றால் தனி விருப்பம் உண்டு...'' என்று இழுத்தாள்.

சொன்னவள் மறு விநாடியே, ''ரேவதி, என்னால் உன் கணவருக்குச் சிரமமாயிருக்கும். பாவம் டிரஸ் பண்ணிக் கொண்டு காத்துக்கொண்டிருக்கிறார் வெளியே புறப்பட! நான் வரட்டுமா?'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தாள்.

ஒரு வெள்ளிக் கிழமை.

என்றுமில்லாத அவசரத்துடன் பரமசிவம் காலையில் முகக்ஷவரம் செய்து கொண்டு குளித்து விட்டு அவசரம் அவசரமாக ஆடைகளை அணிந்து கொண்டார்.

''என்ன, அப்பா... இன்னிக்கு ஆபீஸ் டிரஸ் அமர்க்களமாயிருக்கு?'' என்றான் பாபு.

அமிர்தத்துக்கு ஒன்றும் புரியவில்லை.

''ஏதாவது இன்டர்வ்யூவா?'' என்று கேட்டாள் அவள்.

''இல்லை. எனக்கும் ஒரு வேலை கிடைத்து விட்டது. ஒரு கம்பெனிக்கு எழுதிப் போட்டேன். என் பிரத்தியேக அனுபவத்தையெல்லாம் விவரிச்சிருந்தேன்...''

''எத்தனை சம்பளம் அப்பா?'' — கீதா.

''எண்ணூறு ரூபாய்!''

''கம்பெனியின் பெயர்?'' — அமிர்தம்.

''மாடர்ன் மைகா மைனிங் ஸிண்டிகேட்!''

''காலையிலேயே சொல்லியிருந்தால், ஒரு பாயசமாவது வைக்கச் சொல்லியிருப்பேன்'' என்றாள் அமிர்தம்.

''சாயங்காலம் வர்றபோது அப்பாவே ஸ்வீட் வாங்கிக் கொண்டு வருவார்!'' என்றாள் கீதா.

''ஆமாம். அன்னிக்கு நான் ப்ராஸ்பெக்டஸைப் பார்த்து அதற்கு விண்ணப்பம் போடுங்கன்னு சொன்னேனே, அதே கம்பெனியா?'' என்று கேட்டாள் அமிர்தம்.

''அதுவேதான். ஏதோ ஓர் எரிச்சலிலே எழுதிப் போட்டேன்...''

''பெண்டாட்டி சம்பாதிக்கப் போட்டுச் சாப்பிடுகிறோமே என்கிற எரிச்சல் அல்லவா! நல்ல வேளை! நான் அதிர்ஷ்டம் இருந்தால் கிடைக்கும்னு சொன்னது சரியாப் போச்சு!''

''அதிருஷ்டம்தான். இல்லா விட்டால் இந்தக் காலத்தில் இந்த மாதிரி வேலைகள் ஷிபாரிசு இல்லாமல் யாருக்குக் கிடைக்கிறது! ஆனால் ஒரேயடியாய் அதிருஷ்டம் மட்டும்னு சொல்ல முடியாது. என் முந்தி அனுபவம் அவர்களுக்குப் பிடிக்கப் போயிருக்கும்...''

''இருக்கலாம்!'' என்றாள் அமிர்தம்.

## 23. கேசம் களைந்தார்! பாசம் களைந்தார்!




வீராணத்து ஏரி மிகப் பெரியது என்றாலும் கடலை நோக்க அது சிறியதுதானே? இவ்வாறே ஆண்டவன் பெரிய பொருளாயினும் அவருடைய நாமத்தைச் சொல்கிற அடியவர்கள் அவரை விடப் பெரியவர்களாம்! அதனால்தான் ''தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே'' என்றார் ஞானக் கிழவியாகிய ஔவைப் பாட்டி.

மானக்கஞ்சாற நாயனார் சிறந்த அடியவர். கஞ்சாறூர் என்பது சோழ நாட்டில் மாயூரத்துக்கு அருகே ஆனைதாண்டவபுரத்துக்குப் பக்கத்தில் இருக்கிறது. அங்கு வேளார் மரபில் அவதரித்தவர் மானக்கஞ்சாற நாயனார். அரசருக்குப் படைத் தலைமை வகிக்கும் உரிமையுடையது அக்குடி. சிவபெருமான் திருவடியிற் சிறந்த அன்பு பூண்ட நாயனார் இறைவரது சரணகமலத்தை மனத்திலேயே கோயிலாகக் கட்டி வைத்துக்கொண்டார். அவர் மெய்ப் பொருளை அறிந்தவர் மட்டுமன்று; அறிந்து உணர்ந்தவர். அறிவது வேறு; உணர்வது வேறு. சிந்தையைச் சிவனுக்காக்கிய நாயனார் செல்வத்தை அடியவர்க்காக்கினார்.

எல்லா நலங்களும் அமைந்திருந்த நாயனாருக்கு மகப்பேறு இல்லாதது பெருங் குறையாக இருந்தது. மகப்பேறு வேண்டிப் பல விரதங்களை மேற்கொண்டார்.

சிவபெருமானின் திருவருளால் நாயனாரின் மனக்குறை நீங்கியது. அவரது மனைவியாருக்கு மணிவயிறு வாய்த்தது. ஐயிரண்டு திங்கள் சென்றதும் அழகொழுகும் பெண் குழந்தை பிறந்ததால் பெற்றோர் மிகவும் மகிழ்ந்தனர். அக்குழந்தை செல்வத்தில் தவழ்ந்து, அன்பில் வளர்ந்தது. நாளடைவில் அக்குழந்தை மணப்பருவம் அடைந்தது.

புதல்வியைத் தகுந்த மணாளனுக்குத் திருமணம் செய்து கொடுத்துவிட வேண்டும் என்று எண்ணினார் நாயனார். வைத்தீசுவரன் கோவிலுக்குப் பக்கத்திலுள்ள பெருமங்கலத்தில் சேனாதிபதி மரபில் வந்தவர் ஏயர்கோன் கலிக்காம நாயனார். அவருக்கு அப்பெண்மணியை மணம் முடிக்க வேண்டிப் பெரியோர்கள் மானக்கஞ்சாற நாயனாரிடம் வந்தனர்.

**வந்தமூ தறிவோரை மானக்கஞ் சாறனார்**
**முந்தைமுறைமையின் விரும்பிமொழிந்து**
**மணத் திறங்கேட்டே**
**''எந்தமது மரபினுக்குத் தரும்பரிசால்' ஏயும்'' எனச்**
**சிந்தைமகிழ் வுறவுரைத்து மணநேர்ந்து செலவிட்டார்.**

அழகாகப் பாடுகிறார் சேக்கிழார் பெருமான்: அறிவாளிகள்தான் பெண் பேச வேண்டுமாம்!

வந்த அறிஞர்களை மானக்கஞ்சாறனார், ''வாருங்கள்; வாருங்கள்'' என்று வரவேற்றுப்

பால், பழம் கொடுத்து உபசரித்து வந்த காரியத்தை வினவினார்.

"எங்கள் ஊர் பெருமங்கலம். அங்கே ஏயர்கோன் என்று ஒருவர் இருக்கிறார். அவருக்குத் தங்கள் புதல்வியை மணம் பேச வந்தோம்" என்று அவர்கள் கூறினார்கள்.

பிள்ளையின் குலம், கோத்திரம், குணம், ஒழுக்கம் முதலியவற்றையெல்லாம் விசாரித்தறிந்த மானக்கஞ்சாறனார், தம் மகளைக் கலிக்காமர்க்கு மணம் செய்து கொடுக்க இசைந்தார். பொருத்தமான மண நாளைச் சோதிடர்கள் கூறினார்கள். அதன்படி திருமணம் நிச்சயிக்கப் பெற்று, மணமகள் மாளிகையிலேயே திருமணத்தை நடத்துவது என முடிவு செய்யப்பட்டது.

மாப்பிள்ளை அழைப்புக்குக் கலிக்காமர் வெண் புரவி மீது வந்து கொண்டிருந்தார். சுற்றம் அவரைச் சூழ்ந்து சென்றது. கலிக்காமர் கஞ்சாறனாரின் அருகில் சென்றார்.

மானக்கஞ்சாற நாயனாரது அன்பின் திறத்தையும், அவரது புதல்வியின் பண்பையும் உலகுக்கு அறிவிக்கவேண்டும் என்று கருதினார் எம்பெருமான். மாவிரதம் என்பது சைவத்தின் அகப்புறச் சமயம். மாவிரத முனிவராக வேடம் பூண்டு வந்தார் சிவபெருமான், திருநீற்றைக் குழைத்திட்ட நெற்றி, குடுமியின் நுனியில் எலும்பு மணி, காதுகளில் குண்டலங்கள், தோளில் உத்தரீயம், மார்பில் மயிர்ப் பூணூல். இடையில் செருகிய திருநீற்றுப் பை ஆகிய இந்தக் கோலத்துடன் ஞானசூரியனாக மானக்கஞ்சாறனார் மனையை அடைந்தார்.

ஞானச்செய் தவரடிமேற் பணிந்துமனை
யகம்நண்ணி
மானக்கஞ்சாறனார் மணக்கோலம்
புனைந்திருந்த
தேனக்க மலர்க்கூந்தல் திருமகளைக்
கொண்டணைந்து
பானற்கந் தரமறைத்து வருமவரைப்
பணிவித்தார்

மாவிரத முனியைக் கண்டார் மானக்கஞ்சாறனார். அவரது உள்ளத்தில் அன்பு பொங்கியது. கைகள் சிரத்தில் குவிந்தன; எதிரே சென்று, "கோவே வருக; மெய்ஞ்ஞானக் குருவே வருக' என்று அன்பு வழிய அழைத்து வந்து ஆசனத்தில் இருத்தினார். "தங்கள் வருகை குலம் செய்த புண்ணியம்" என்று வலம் வந்து வணங்கினார்.

நாயனார் வீட்டில் திருமணம். மாப்பிள்ளை வந்து கொண்டிருக்கிறார். மணப்பெண் அலங்காரம் செய்து கொண்டிருந்தாள். வந்த பெரியவர் ஒன்றும் தெரியாதவர் போல், "இங்கு நிகழும் மங்கலச் செய்கை யாது?" என்று வினவினார்.

"அடியேனின் மகளுக்குத் திருமணம்" என்றார் நாயனார்.

திருமணத்தன்று பெரியவர் யாராவது மணப் பெண் வீட்டுக்கு வந்தால் மணப்பெண்ணை அவரது திருவடியில் வீழ்ந்து வணங்கச் செய்து, "திருநீறு பெற்றுக் கொள்" என்பார்கள்.

மானக்கஞ்சாற நாயனார் விரைந்து இல்லத்தினுட் சென்று மணக்கோலம் பூண்டிருந்த மணமகளை அழைத்து வந்து, "குழந்தாய்! இம் மாதவரடியில் வீழ்ந்து வணங்குக" என்றார். உடனே, அப் பெண்மணி முனிவரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்



கிஞர். முனிவர், ''மங்களம் உண்டாகுக'' என்று வாழ்த்திஞர்.

முனிவரின் பார்வை வணங்கிய மணப் பெண்ணின் கூந்தல்மேற் சென்றது. மைபோல் கறுத்திருந்த அவளது கூந்தல் நாற்றுப் போல் அடர்ந்து, ஆலம் விழுது போல நீண்டிருந்தது. ''இவள்தான் மணப் பெண்ணே ? நிரம்ப அழகு. மானக்கஞ்சாறரே ! நான் மாவிரத சைவன். நான் அணிந்துள்ள முப்புரி நூல் தலை மயிரிஞல் ஆக்கப்பட்டது. இப்பெண்ணின் நீண்ட கூந்தல் நமக்குப் பஞ்சவடியாகும்'' என்ருர் முனிவர்.

மானக்கஞ்சாறஞர் ஒரு நொடி கூடத் தாமதிக்கவில்லை. மகளின் அழகுக்கும் மூலமானது கேசம் என்பதும், அவளுக்கு அப்போது திருமணம் நிகழவிருக்கிறது என்பதும்கூட அவர் நினைவிலில்லை. சிவனடியாரின் விருப்பமொன்றே அவர் சிந்தை முழுதும் நிறைந்திருந்தது.

பஞ்சவடி என்பது பூணூலில் ஒரு வகை. இடையில் வைத்திருந்த வாளையெடுத்தார், வேகமாக. ''நான் செய்த நல்வினையே நல்வினை. முன்னைத் தவப் பயன் இருந்தால்தான் இந்தத் தானம் கொடுக்க முடியும்'' என்று கூறி மகளின் அழகிய கூந்தலை அப்படியே அறுத்தார். அம்மங்கையும் மறுக்காமல் முடி தந்த பெருமையை என்னென்பது ?

மயிர்க்கற்றை மானக்கஞ்சாறர் கைக்கு அடங்கவில்லை. இருளைப் பிடித்துக் கொடுத்தது போல், அவர் மாவிரதியர் மலர்க் கையில் அதனை நீட்டிஞர்.

மங்கைக்கு அடுத்த கணத்தில் திருமணம். அந்த நேரத்தில் விதவைக் கோலத்தைக் காட்டும் வண்ணம் கூந்தலை எடுக்க யாரே துணிவர் ? மானக்கஞ்சாறர் அறுத்தது மகளின் கூந்தலையன்று ; பிறவிப் பிணியின் வேரை அறுத்து விட்டார்.

கூந்தலைப் பெற்றுக் கொள்பவர் போல் நின்ற மாவிரதியர் மாயமாய் மறைந்து விட்டார். வெள்ளிமலைமேல் பொன் மலை இருப்பது போல் சிவபெருமான் விண்ணில் காட்சி தந்தார்.

''அன்பனே! இந்த அன்பு யாருக்கு வரும்? அடியாரிடத்து நீ பாய்ச்சுகின்ற அன்பு வெள்ளத்தை உலகறியச் செய்தோம்'' என்று விண்ணிலிருந்து ஒரு குரல் ஒலித்தது. அறுக்கப்பட்ட கூந்தல் முன்னையினும் மேலாக அம்மங்கையின் தலையில் பொலிவுற்றது.

கலிக்காம நாயஞர் மாப்பிள்ளைக் கோலத்தில் மணமகளின் இல்லத்தை அடைந்தார். அங்கு சிவபெருமான் முனிவர் கோலத்தில் வந்து மணப் பெண்ணின் கூந்தலைக் கேட்டுப் பெற்று அருள் புரிந்த நிகழ்ச்சியை அங்கு கூடியிருந்தவர்கள் அதிசயத்துடன் அவரிடம் கூறினர். அதனைக் கேட்டுப் பெருவியப்புற்ற கலிக்காமர், ''சிவபெருமானுக்குக் கூந்தலைக் கொடுத்த அறமகள் எனக்கு மனைவியாக வருகிருளா ?'' என்று கூறி மகிழ்ச்சியடைந்தார். மானக்கஞ்சாற நாயஞரின் புதல்விக்கும், கலிக்காமர்க்கும் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. சிவனடியார்களுக்கும், ஏழைகளுக்கும் இன்னமுது ஊட்டிப் பொருள் கொடுத்தனர். கலிக்காமர் மணமகளை அழைத்துக் கொண்டு தமது ஊருக்கு வந்து இல்லறத்தை நல்லறமாக நடத்திஞர்.

# 24. அமுது செய்வித்த அடியார்

திருத்துறைப் பூண்டியி லிருந்து திருவாரூர்க்குச் செல்லும் வழியில் உள்ளது கணமங்கலம் என்ற ஊர். அந்த ஊரின் வயல்களில் விளையும் பயிர்கள் யானையையும் மறைக்கும் உயரம் வளர்ந்ததாம். அவ்வளவு வளம் செறிந்த ஊர். அந்த ஊரில் வேளாளர் குலத்தில் தோன்றியவர் தாயஞர். சிவத்தொண்டில் ஈடுபட்ட அவர், சம்பா அரிசியின் அமுதும், செங்கீரையும், மாவடுவும் சிவபெருமானுக்கு நாள்தோறும் அமுது செய்வித்தார். இவ்வாறு நீண்ட காலம் அவர் சிவத்தொண்டு செய்து வந்தார். அவரது அன்பை உலகுக்கு உணர்த்த வேண்டும் என்று திருவுளம் கொண்டார் சிவபெருமான். அதஞல் நாயஞரின் செல்வம் எல்லாம் மறைந்து விட்டது. தாயஞர்க்கு வறுமையை உண்டாக்கிஞர் ஆண்டவன். ஆயினும், அவர் முன் செய்து கொண்டிருந்த திருத் தொண்டினை விடவில்லை. கூலியாட்களை வைத்து வேலை வாங்கிய அவர் இப்போது மிகுந்த ஏழையாகிக் கூலிக்கு நெல்லறுக்கத் தொடங்கிஞர். கூலியாகக் கிடைக்கும் நெல்லில் செந்நெல்லைச் சிவபெருமானுக்கு ஒதுக்கித் திருவமுது படைப்பது என்றும், கூலியாகக் கிடைக்கும்



**" ஆணி அடிக்கப் போய் இதோட நான்குதடவை நான் கையில் அடித்துக் கொண்டுவிட்டேன். ஆணியை நீங்கள் பிடித்துக் கொள்ளுங்கள் !"**

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

கார் நெல்லைத் தாம் உண்பது என்றும் உறுதி கொண்டார்.

ஈசன் விளையாடினார்! நாயனாருக்குக் கிடைத்த கார் நெல்லெல்லாம் செந் நெல்லாக—சம்பா நெல்லாகத் தொடங் கியது. அதாவது நாயனார்க்குச் செந் நெல் மட்டுமே கிடைத்தது. கார் நெல்லே கிடைக்க வில்லை. நாயனார் சிறிதும் கவலைப்படவில்லை. "எல்லா நெல்லையும் சுவாமிக்குத் திருவமுது ஆக்கி விடலாம்" என்று மகிழ்ந்தார். அப்படியே சிவபெருமானுக்குத் திரு வமுது செய்வித்தார். தாம் பட்டினி கிடந்தார். நாயனாரின் மனைவியார் தோட்டத்தில் உள்ள கீரைகளைப் பறித்துப் பல வகைக் கறிகளாகச் சமைத்துக் கணவனார்கிட்டுத் தாமும் உண்டு வந்தார். ஈசன் இதனையும் நீண்ட நாட்கள் தொடர விடவில்லை. அவர்களது தோட்டத்தில் கீரைகளும் இல்லாமற் போய் விட்டது. தண்ணீர் மட்டுமே அவர்களுக்கு ஆகாரமாகியது.

வழக்கம் போல் நாயனார் செந் நெல்லரிசி திருவமுது, மாவடு, செங் கீரை ஆகியவற்றைக் கூடையில் வைத் துக் கொண்டு அம்மையாருடன் திருக் கோயிலுக்குத் தளர்ந்து சென்றார். அவரது மனைவியார் அவரைவிடத் தளர்ந்து சோர்ந்து சென்றார். நாய னார் தளர்ந்து விழப் போனார். அச் சமயம் அவரது மனைவியார் பஞ்ச கவ்வியத்தை மூடிச் சென்ற தமது கையினால் கணவர் விழாமல் தடுத் தார். நாயனார் விழவில்லை. அவர் வைத்திருந்த கூடையில் இருந்த திரு வமுது, மாவடு, செங்கீரைகள் முதலிய யாவும் நில வெடிப்பில் சிந்தின. அத னைக் கண்ட நாயனார் மிகவும் மன முடைந்து போனார். பட்டினியால் ஏற்பட்ட உடற்சோர்வைவிட சுவாமி யின் திருவமுது கீழே சிந்தியதால் ஏற்பட்ட உள்ளச் சோர்வு அவருக்குப் பெரும் துன்பம் தந்தது.

"இன்றைக்கு இனி திருவமுது ஆக்க முடியாது. திருவமுது படைக்கவில்லை யென்றால் ஆண்டவர் பட்டினி கிடப் பார். சிவபெருமானுக்குத் திருவமுது செய்வது என்னுடைய கொள்கை. கொள்கை தவறினால் இனி உயிர் வாழக் கூடாது" என்று எண்ணினார் நாயனார். "அடியார்க்கு இரங்கும் அண்ணலே! இவ்வெடிப்பில் உள்ள திருவமுதை உண்க. இல்லையேல் என் கழுத்து ஊட்டியை அறுத்துக்கொண்டு சாவேன். இது உன் மேல் ஆணை" என்று கதறி நின்றார்.

சுவாமி சிறிது காலம் தாழ்த்தினார். நாயனாரோ காலம் தாழ்த்தாமல், கத்தியை எடுத்துக் கழுத்தோடு ஊட் டியை அறுக்கத் தொடங்கினார்.

திருவமுது சிந்திய நில வெடிப்பி லிருந்து சுவாமியின் திருக்கரம் வெளியே வந்தது; அன்னத்தை எடுத்து உண்ண வில்லை அந்தத் திருக்கரம். நாயனாரின் கையைப் பற்றிக்கொண்டது. ஆண்டவ னின் ஸ்பரிசம் பெறும் பாக்கியம்பெற்ற நாயனார் கொலை முயற்சியை விட்டார். சுவாமியின் திருக்கரம் அன்னத்தை யும், வியஞ்சனங்களையும் எடுப்பதும், பிறகு நில வெடிப்புக்குள் மறைவது மாக இருந்தது. சுவாமி திருவமுது செய்து மாவடுவை வெடுக்கு வெடுக் கென்று கடிக்கும் ஓசையும் நில வெடிப்பிலிருந்து கேட்டது.

திருவருளை வியந்த நாயனார் உள்ளம் உருகிக் கண்ணீர் பெருக்கினார்.

உண்டு முடித்த ஐயன் "நீ செய்த செயல் நன்று. நீ உன் மனைவியுடன் சிவலோகம் வருக" என்று கூறி அனுக் கிரகம் புரிந்து மறைந்தார்.

நாயனார் தம் கழுத்தினை அரி வாளால் அரிய முற்பட்டதால், "அரிவாட்டாயர்" என்று போற்றப்பட் டார்.

(தொடரும்)

# ஸிங்கர்*

## விலைவாசியைக் கட்டுப்படுத்துகிறது! இப்போது எல்லா மெர்ரிட் தையல் மெஷின்களும் குறைந்த விலைகளில் கிடைக்கின்றன




எல்லா மெர்ரிட் தையல் மெஷின் மாடல்களுக்கும் விலை கணிசமாகக் குறைக்கப்பட்டிருப்பதை அறிவிக்கிறது ஸிங்கர்!

காலேக் கடத்தாதீர்கள் ... அருகாமையிலுள்ள அங்கீகாரம் பெற்ற ஸிங்கர் வியாபாரியையோ அல்லது ஸிங்கர் கடையையோ அணுகுங்கள்! இப்போதைய விலை இறக்கத்தைப் பயன் படுத்திக் கொள்ளுங்கள்!

குறைக்கப்பட்ட புதிய தவணை
முறைத் திட்டம் முதல்
தவணை

**ரூ.31**

*ஸிங்கர் கம்பெனியின் ஒரு டிரேட் மார்க்

தரத்திலே புது உயர்வு...விலையிலே புது இறக்கம்!






பெயரில் மெர்ரிட், புகழில் ஸிங்கர்.

SSG - 40 TAM

# வீழ்க்கை

கல்கி வெள்ளி விழா

ஸ்ரீப்ரியா

ஒலிபெருக்கியில் அருமையான நாதஸ்வர இசை பெருகிப் பரவிக் காற்றின் அணுக்களை இனிமையாக்கியது. வண்ண விளக்குகளும், ஒளி சிந்தும் 'நல்வரவு' என்ற எழுத்தும், வாழை மரமும் மாவிலையும் அலங்கரித்த பந்தலும் ஜனங்களைக் கவர்ந்து இழுத்தன. கல்யாண மண்டபமோ என்று ஒரு முறை நின்று பார்த்தவர்களை உள்ளே அழைத்தது வாசலில் இருந்த கரும் பலகையில் எழுதிய வாசகங்கள்:

''வீணா நாதஸ்வரூபிணி, பிரம்ம வித்யாராணி கலாவதிக்கு அரசாங்க விருது கிடைத்ததையும், வெளிநாட்டுக்கு நம் கலைப் பிரதிநிதியாகச் செல்லப் போவதையும் ஒட்டி ரசிகர் சங்கத்தில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள பாராட்டு விழா.

அனைவரும் வருக.

ஸ்ரீமதி கலாவதியின் இசைக் கச்சேரியும் உண்டு.........''

ஜரிகை அங்கவஸ்திரமும் பளீரென்று ஒளிவீசும் மில் வேட்டியுமாகக் காரியதரிசி உள்ளுக்கும் வெளிக்குமாக அலைந்து கொண்டிருந்தார். நேரம் ஆக ஆகக்



கூட்டம் அதிகரித்துக் கொண்டேயிருந்தது. கலாவதியின் இசை மகிமை அப்படி.

'' வர வேண்டும்.....'' பெரிய தொரு கும்பிடுடன் படகு போல் வந்து நின்ற கார் அருகே சென்று குழைந்தார் காரியதரிசி.

வெள்ளைத் தாமரை போல் மலர்ந்த முகம். அதில் வட்டமிடும் வண்டு போன்ற அழகான, அடக்கமான கண்கள், மலர்ந்த தாமரையின் மையத்தில் பிரியாத மொட்டாக, முகத்தில் எடுப்பான நாசி. அதற்குமேல் பரந்த நெற்றியில் தீச்சுடர் போலச் சிவப்புத் திலகம். மலருக்குக் கீழுள்ள தண்டு நீருக்குள் இருப்பது போல் உடலை மறைத்துத் தழுவி நின்றது ஒரு பட்டுச் சேலை. கழுத்து ஆபரணங்களோ, ஏன் 'சோளி'யின் நிறமோகூடத் தெரியாமல் போர்த்தி நின்றது அது. மலர் அருகே மிதக்கும் இலைகள் போல இரு கரங்கள் வெளியே தெரிந்தன ; அழைத்தவரை வணங்கின. பட்டுப் பாதங்கள் மெல்லடி வைக்கஉள்ளே சென்றாள் இசையரசிகலாவதி.

சுற்றியிருந்தவர்கள் தொடர்ந்தனர்.

''பூர்வ ஜன்மத்தில் நல்ல புஷ்பங்களை இறைவனுக்கு அர்ச்சித்திருப்பாள். இன்று அந்த விரல்கள் அப்படி இசை பேசுகின்றன...'' பெருமூச்சு விட்டனர் பல ரசிகர்கள்.

''முகத்தில்தான் என்ன தெய்வீகக் களை; குவித்த தலை நிமிரவில்லை. உண்மையில் இப்படிப்பட்ட கலைஞர்களால்தான் நம் கலா சாரம் உலகம் முழுதும் பெருமையடைய முடியும்......'' — இது ஒரு விமரிசனம்.

## சிறுகதைப் போட்டியில் மூன்றாவது பரிசு பெற்ற கதை 10



றால் நிரம்பி விட்டது. ஆனால் மந்திர ஸ்தாயித் தந்தியை மீட்டினால்கூட 'மைக்' இன்றி 'ஞொய்' என்று மறுகோடி வரையில் சீராக ஒலிக்கக் கூடிய அமைதி !

காரியதரிசி ஜிப்பாக் கைகளைச் சரி செய்து கொண்டு மேடைக்கு வந்தார், வரவேற்புரை நிகழ்த்த. "நமது கலைவரசியைப் பற்றி நான் அதிகம் கூறத் தேவையில்லை. கலைகளே பெண்மையின் நளினத்துடன் கையாளவேண்டிய பொக்கிஷம். அதிலும் இசைக் கலை இன்னும் மேன்மையானது. அதனினும் வீணுவாதனம் என்பது தெய்வாம்சம் பொருந்தியது. அப்படிப்பட்ட சகஸ்வரார்ப்பணமான வாத்தியத்தைக் கலை நுணுக்கங்களை நன்கு அறிந்து, ஒரு பெண்ணே அப்பியசித்து விட்டார். அப்போது இசையால் அவருக்குப் பெருமையா, அவரால் இசைக்கு மேன்மையா என்பது பற்றி என் போன்ற வெறும் கேள்வி ஞானம் மட்டும் உள்ள ரசிகனால் என்ன கூற முடியும்? இருந்தாலும் ஒரு வார்த்தை..... என் அறிவுக்கெட்டிய வரை அவர் வீணை வாசிக்கவில்லை. வீணை என்னும் மதலை, தன் மழலை மொழியில் தாயிடம் கொஞ்சுகிறது. ஆனால் அது அவருக்கு மட்டும் குழந்தையல்ல. இசையெனும் மதலை ஒவ்வொரு ரசிகனுக்கும் உடைமை. அதனால் 'தன் மதலையின் மழலை இனிதாகத் தெரிகிறது ரசிகர்களுக்கு.... இல்லை... அவர் விரல்களில் சரஸ்வதி நர்த்தனம் செய்கிருள். சுருதியும், தாளமும் அவருக்கு அடிமைகள். ஆனால் இத்தனை திறமையும் உள்ள அவரிடத்தில் இல்லாதது ஒன்றுண்டு. அதுதான் கர்வம்! இரசிகர்கள் ருசியறிந்து, நேரம் காலம் அறிந்து, இசைக்கும் இசையன்பர்களுக்கும், இசை மூதாதையர்களுக்கும் குறைவு ஏற்படா வண்ணம் 'விளையாடு'வதில் நம் இன்றைய பாராட்டுக்குரியவர் மிகத் தேர்ந்தவர். 'கட்டி'க் குழந்தை 'பாண்டி'க் கோட்டில் தத்தித் தத்தி ஓடித் துள்ளிப் பறந்து வெற்றியடைவது போல் அவர் விரல்கள் மெட்டில் தாவிக் குதிக்கும். இன்னிசை பிறக்கும். அவர் அரசாங்க விருது பெற எத்தனை தகுதி வாய்ந்தவர் என்பதற்கு ரசிகர்கள் கூட்டமே — உங்கள் வருகையே— அத்தாட்சி. அவர் வெளிநாடு செல்வது எத்தகைய பெருமை என்பது சொல்லித் தெரிய வேண்டுவதில்லை......"

முன்னணியில் இருந்த ஒரு பெண் குழந்தை மாலை சூட்ட, மக்கள் அதற்குக் கைதட்டி ஆரவாரிக்க, அடக்கமாக ஒரு கும்பிடு போட்டபடியே 'மைக்' அருகில் வந்தாள் கலாவதி.

நெடிய உருவம்; உயரத்துக்கு ஏற்ற பருமன்; கம்பீரமான தோற்றம்.... கலாவதி நன்றிகூற முன்வந்தாள். "இறைவன் தந்த அருளாக என் விரல்கள் பேசுவது போல், நாவுக்குப் பேச வராது. இருந்தாலும் திடீரென்று முன்னேற்றப் பாதையில் 'என் அநுபவங்கள்' பற்றிக் கூறப் பணித்துவிட்டனர். என் முன்னேற்றமும், பெருமையும் வளர நான் அறிந்தது ஒரே இரகசிய வழிதான். அதுதான் இசையுலகில் நான் முதலடி எடுத்து வைத்த பாதை. அதை மட்டும் இரகசியமாகச் சொல்கிறேன் இன்று உங்களுக்கு.... அதில் ரஸமான பகுதியிருந்தாலும் அது அன்று எனக்கு ஆணையிட்டவரின் பெருமை." — கலாவதி தன் இனிய குரலில் ஆரம்பித்தபோது பல 'காமிரா'க்கள் 'கிளிக்'கென்றன.

"இத்தனை புகழுக்கும், பெருமைக்கும் நான் உரியவளே அல்ல என்பது முதல் இரகசியம்......"

'ஆகா!' — முன்வரிசை ரசிகர்கள் சிரக்கம்பம் செய்து அவள் தன்னடக்கத்தை வியந்தார்கள்.

"தெய்வ சங்கல்பம் என்று நாம் சொன்னாலும் அந்தத் தெய்வம் நம் முன் ஏதோ ஓர் உருவத்தில்தான் வந்து நமக்கு வழி காட்டுகிறது. அத்தகைய அவதாரமாக எனக்குக் காட்சி அளித்தவர் என் குருநாதர் 'சுப்பிரமணியம்' அவர்கள்தான். ஆம், அவர்தான் என்னை, 'இந்த வழியில் போ' என்று கை காட்டியவர். அவரை உங்களில் பலருக்குத் தெரிந்திராது. ஏனெனில், அவர் சுமார் கால் நூற்றாண்டுகளுக்கு முந்தியவர். அத்துடன் இன்று போல் அன்று கலைஞர்களை விளக்குப் போட்டுக் காட்ட ஆட்கள் இல்லை! குடத்து விளக்காகவே வாழ்ந்தவர் அவர். இன்றும் எங்கோ ஓரிடத்தில் அப்படித்தான் அவர் 'இருப்பார்' என்று நான் சொன்னால்.... அதென்ன இருப்பார் என்ற ஸந்தேஹச் சொல் என்று கேட்பீர்கள். ஆம், அவரைப் பற்றி நான் அறிந்து இருபது ஆண்டுகள் ஆகிவிட்டன. அதன்பின் நான் பல குருக்களை ஆச்ரயித்தாலும், ஏன் இன்றும்கூட என்னை விட அநுபவஸ்தர்களைக் கண்டு விட்டால் அவரிடம் ஒரு மணி நேரமாவது பாடம் கேட்கும் வழக்கம் என்னிடம் இருந்தாலும், என் ஆதி குரு அந்த சுப்பிரமணியத்துக்கே, அந்தக் கண் காணாத தெய்வத்துக்கே என் பெயர், புகழ், பெருமை எல்லாவற்றையும் அர்ப்பணித்து அஞ்சலி செய்கிறேன். அதுதான் அவருக்கு என் குருதட்சணை....." உணர்ச்சிவசப்பட்டதாலோ, குரு தியானத்தாலோ ஒரு கணம் கலாவதி தன் கண்களை மூடித் தன்னைச் சுதாரித்துக் கொண்டாள்.

கலாவதி தன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு ஒரு முறை கடிகாரத்தைப் பார்த்து விட்டுத் தொடங்கினாள். இயற்கையாகப் பிரவகித்தது பேச்சு.

"**வா**, அம்மா...குழந்தை! வீணை கற்றுக் கொள்வதற்கு உனக்கே ஆசையா? அல்லது அம்மா சொல்கிருளே என்று வந்து உட்கார்ந்து விட்டாயா?" இதுதான் சுப்பிரமணியம் தம் எதிரே உட்கார்ந்த குட்டி சிஷ்யை கலாவை அறிமுகம் செய்து கொண்ட விதம்.

"எனக்கேதான்... ஆசை." இரு கரங்களின் விரல்களையும் பிணைத்தபடி தலைகுனிந்து நின்றாள் கலா.

"ம்.... சரி..... உனக்கென்ன வயது?"

"பதினொன்று....."

"வீணை மகாமக வாத்தியம், அதாவது பன்னிரண்டு வருஷங்கள் குறைந்த பட்சம் பயிலவேண்டியகலை என்பார்கள், தெரியுமா?"

குழந்தை கலா விழித்தாள்.

"அதாவது இதைக் கல்யாணப் பாட்டாக்கி, நாலு வர்ணம் பதினைந்து கீர்த்தனம் ஆனதும் பெண் பார்க்க இரண்டு பாட்டுப்

# க்ருஷன் ஸால்ட்ஸ்

அருந்துங்கள்

## ரத்தத்திலுள்ள அசுத்தங்களை

அகற்ற உதவுகிறது அது.

அதன் பயன்
மிக்க 7-வழிச்
செயல் முறை
உங்கள் உடல்
நலனைத்
தக்கபடி
பாதுகாக்கிறது




நிக்கொலஸ் (N) தயாரிப்பு

KS. G 6

---

# டெபாசிட்டுகள்

# ரூ 1,000 மும்

## அதற்கு மேற்பட்ட தொகைகளும்

## ஏற்றுக் கொள்ளப்படும்.

### பிக்ஸட் டெபாசிட்டுகள்

கவர்ச்சிகரமான வட்டியில் ரூ 50,000/- வரை
இப்பொழுது ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

| | |
|---|---|
| ஒரு வருடமும், அதற்கு மேலும் ஆனால் 2 வருடங்களுக்குள்ளாக | — 6¼ % |
| 2 வருடங்களும், அதற்கு மேலும் ஆனால் 3 வருடங்களுக்குள்ளாக | — 6½ % |
| 3 வருடங்களும், அதற்கு மேலும் ஆனால் 5 வருடங்களுக்குள்ளாக | — 6¾ % |
| 5 வருடங்களும், அதற்கு மேலும் ஆனால் 7 வருடங்களுக்குள்ளாக | — 7¼ % |
| 7 வருடங்களும், அதற்கு மேலும் | — 7½ % |

## மதராஸ் இண்டஸ்ட்ரியல்
## இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட்

எல். எல். ஏ. பில்டிங்ஸ், 150-A, மவுண்ட் ரோடு, மதராஸ்-2

போன்: 82026

1231, தெற்கு மெயின் தெரு, தஞ்சாவூர்

Criterion-MII-928-TL

பாடி விட்டுப் பின் உறையிலிட்டு மூடி உன் புக்ககத்திலவர் வீட்டு மூலைக்கு அலங்கார மாக்கிவிடக் கூடாது. இந்த வாத்தியத்தை. பின் இது உன் பெண் பெரியவளானதும் அதே போல உன் வழியில் கற்பித்துச் சிதலை மாக்கிவிடக் கூடாது'' என்கிறேன்.

கலாவுக்கு இன்னும் புரியத்தான் இல்லை. இருந்தாலும் தலை ஆட்டினாள்.

''என்ன இப்படிச் சொல்லி விட்டீர்களே'' என்று பெண்ணைப் பெற்றவள் அப்போது குறுக்கிட்டாள்.

''ஆமாம், அம்மா! அதுதான் என் நிபந்தனை. நான் வெறும் டியூஷனுக்கு வரும் வாத்தியார் அல்ல. என் பெயர் சொல்ல ஒரு சிஷ்ய பரம்பரையைத் தேடும் வித்துவான். குழந்தையின் ஞானத்தையும், ஆசையையும் பற்றி என் நண்பர் கிருஷ்ண பாகவதர் கூறிய தாலும், உங்கள் குடும்பத்தில் சங்கீத வாஸனை இருக்கிறது என்பதாலும்தான் நான் சம்மதித்தேன்.'' சுப்பிரமணியத்தின் பேச்சு விலை சாதகம் போல் கடுமையானதுதான்; ஆனால் உண்மை சுவாரசியமாக இருந்தது.

கலாவின் தாய் வாய் திறக்கவில்லை. புத்தம் புது வீணையைக் கண்களில் ஒத்திக் கொண்டு ஒரு பிறந்த குழந்தையைத் தூக்குவது போல் மெல்லக் கையிலெடுத்து ஏந்தினார் குரு. முதலில் தம் விரல்களை மீட்டி ஒரு விநாயகர் துதி, சரஸ்வதி சுலோகம் வாசித்தார். அதன் பின் தயாராயிருந்த எதிர் வீணையைத்தான் எடுத்துக் கொண்டு புதியதை சிஷ்யையிடம் கொடுத்தார். பயபக்தியுடன் அதை வாங்கிக் கொண்டாள் கலா.

பாடம் ஆரம்பித்து இரண்டு வருஷங்களா யின. ஏதோ ஓரளவுக்கு வாசிக்கக் கை பழகி விட்டது. ஒரு நாள் நண்பர் வீட்டில் வாசித் தாள் கலா. அவர்கள் ஒரு சரஸ்வதியின் வெள்ளிப் படத்தைப் பரிசளித்தனர்.

''கலா, படம் ரொம்ப நன்றாக இருக் கிறது, இல்லையா?'' வாத்தியார் சுப்பிர மணியம் கேட்டார் வீணையை மீட்டியபடி.

''ஆமாம், ஸார்! உங்கள் ஆசியிருந் தால்....'' இப்போது கலா சற்றுத் தைரிய மாகப் பேசினாள் அவரிடம்.

''என் ஆசி உனக்கு என்றும் உண்டு. ஆனால் கலா, கலை என்பது கட்டட வேலை அல்ல, அஸ்திவாரம் முதல் ஒவ்வொரு தளம் கட்டும் போதும் அதை எல்லாரும் பார்க்க! பூரணமான கலைதான் பிரகாசிக்கும். அரை குறையாக அதை வெளிப்படுத்துவது கலைஞ னின் ஞானத்தை மட்டும் அல்ல. கலைக்கும் மதிப்பைக் குறைத்து விடும். நாலு ராகம் ஆலாபனை, எட்டு கீர்த்தனை ஆனதும் ரேடியோ ஆடிஷனுக்கு மனுப் போடும் பாடகி அல்ல நீ; புரோகிராம்களுக்குத் தக்கபடி பாடம் பண்ணி வைப்பவன் அல்ல நான். உன்னை நான் அப்படித் தயார் செய்யவில்லை. நீ சங்கீதத்தின் நேர் வாரிசு. உன் இசையைக் கேட்டு ரசிகர்கள் தானே வரவேண்டும். நீ இசையை மீட்டி அவர்களை வலுவில் அழைக் கக் கூடாது. அதாவது உன் கலை பூரணத் துவம் பெறுமுன் நீ அதை வியாபாரப் பொரு ளாக்கி விடாதே என்று எச்சரிக்கிறேன்....'' உணர்ச்சியுடன் பேசினார் குரு.

கலாவுக்குப் புரிந்தது. ஆம், மின்னி அழைக்கும் அவசரப் பரிசுகள் கலைஞனின்



''கேரள கைவினைக் கலைஞர் ஒருவர் ஒரு சின்ன குண்டுமணிக்குள் முந்நூறு யானை களைச் செய்து உள்ளே வைத்திருந்தாராம். அடேயப்பா! குண்டுமணி எங்கே....யானை எங்கே.....!''

''போதும் வாயை மூடுங்கோ. எதை எதை எங்கே பேசணும்கற விவஸ்தையே இல்லை உங்களுக்கு!''

ஞானத்தை அரைகுறையாக்கி, இசையை விடப் பணத்தில் நாட்டம் கொள்ளச் செய்து பின் கலைஞன், அவன் புகழ் எல்லாவற்றையும் அழித்துவிடும் என்று நினைத்தார் அவ ளுடைய குருநாதர்.

பாடம் கேட்க ஆரம்பித்து ஆறேழு வருஷங்கள் ஓடி விட்டன. இதற்குள் ஓரளவு நன்றாகவே வாசிக்க ஆரம்பித்து விட்டாள் கலா. ஏன், சுப்பிரமணியமே அவளைக் கலை வாணியின் அம்சம் என்று புகழும் அளவுக்கு அவள் திறன் பரிமளித்தது. இயக்குவிக்க நல்ல ஆசான் இருக்கும் போது அவள் உற்சாகம் தானாகப் பெருகியது. வீட்டில் கல்யாணப் பேச்சுத் தொடங்கியது. ஆனால் அவள் மறுத்து விட்டாள். படிப்பும், முடிந்த தால், இரவு பகல் பாட்டு..... பாட்டுதான்! விரல்கள் கறுப்பேறிக் காய்த்து விட்டன. கண்கள் கற்பனையில் லயித்து, விரல்களை விரட்டித் தனி ஒளி பெற்று விட்டன. இந்த நிலையில்தான் அவள் தந்தையின் நண்பர் ஒருவர் வந்தார். ஒரு சினிமாப் படாதிபதி யாம் அவர். பாவம், ஏதோ பிதுரார்ஜிதச் சொத்தை வைத்துக் கொண்டு 'சீப்'பாகப் படம் எடுக்க நினைத்தார். ஒரு படம் முழுசாக எடுத்து அநுபவப்பட்டிருந்தார். எத்தனை தாரம் வெற்றி பெற்றாரோ! இப்போது உதயணன் – வாசவதத்தா எடுக்க நினைத் தார். புராணப் படங்களுக்கு மவுசு இருந்த காலம் அது.

கதாநாயகியாக ஒப்பந்தமானவள் வீணை பயிலவில்லை. அவள் வீணையுடன் பாவனை செய்ய, பின்னணியில் இசைக்க நண்பர் என்ற முறையில் கலாவின் தந்தையை உதவிக்கு

கான்பூரில் பிச்சைக்காரர்களுக்கு மாதவருமானம் 700 அல்லது அதற்கு மேலேயே கிடைக்கிறதாம். கான்பூரில் நகரத்தின் வசிக்கும் மக்களின் எண்ணிக்கை பதினைந்து இலட்சமாகும். அதில் பதினையாயிரம் பேருக்கும் மேலாகப் பிச்சை வாங்கியே பிழைப்பு நடத்துகிறார்கள். - ஒரு சர்வே ரிப்போர்ட்டிலிருந்து



நாடினார் அவர். கலா பின்னணியில் வீணை வாசிக்க வேண்டுமாம்! அவளும் பயிற்சி மாணவிதானே! சினிமா என்றதும் சற்றுத் தயங்கிய பெற்றோர், பின், மகள் முகமோ பெயரோ தெரியாது. வெறும் வீணைதான் ஒலிக்கும். கணிசமான தொகையும் வரும் என்றதும் ஒப்புக் கொண்டனர். ஆனால் அவர்களுக்கு உள்ளூறப் பயம்தான் சுப்பிரமணியம் என்ன சொல்வாரோ என்று..... ! சந்தர்ப்பம் சாதகமாகவே அமைந்தது.

சுப்பிரமணியம் மங்களூரைச் சேர்ந்தவர். கலை, இசை என்றே நினைத்துக் காலத்துக்கு ஏற்பப் பிழைக்கத் தெரிந்தவர். ஒரு கலைக் குடும்பத்தில் பிறந்தவர். ஏதோ ஓர் அலையால் ஒதுக்கப்பட்டுத் தென்னாடு வந்தவர். கலாவின் அதிர்ஷ்டம், இசையை இறைவனைப் போல் அவள் கண்களுக்குக் காட்சியளிக்கச் செய்த வழி காட்டியானார். ஆனால் அவர் குடும்பத்தில் திடீரென்று ஒரு சுழல் ஏற்பட்டது. பெற்றோர்கள் மறைந்தனர். வயது வந்த சகோதரிகளின் பொறுப்பு அவரைச் சார்ந்தது. அத்துடன் அப்போதுதான் அவர் புகழை அறிந்த பழைய அரச வம்சத்தினர் அவரைத் தங்கள் குடும்பத்தில் ஆசானாக ஏற்று ஊருக்கே வரவேற்றனர். அவர் போக வேண்டியவரானார்.

ஆனால்.... அவர் புறப்படும் தினம், பெற்றோர்கள் இரகசியமாகச் செய்த ஒப்பந்தம் நெஞ்சை உறுத்த, கலா அந்தக் கடைசி நிமிஷத்தில் அதை உடைத்து விட்டாள். சினிமாவுக்கு 'விரல் கொடுப்பது' சம்பந்தமாக அவர் ஆலோசனையைக் கேட்டாள்.

அவ்வளவுதான், சுப்பிரமணியம் எப்படி ருத்திரமூர்த்தியானாரோ! ''கலா, உன் விரல் மீது ஆணை. நீ அந்த வழிக்குப் போகாதே. உண்மைக் கலைஞனுக்கு அது ஒரு கல்லறை. கலையைப் புதைக்கும் படுகுழி அது. பணத்தைக் காட்டி ஆளை மயக்கும் நஞ்சு அது. இரவல் கொடுப்பது விரலைத்தானே என்று ஆரம்பித்து பின் ஒவ்வொன்றாய்ப் பறி கொடுத்து விட்டு நிற்பாய். அது உன் சொந்த விஷயம். ஆனால் கர்ணனுக்குத் துரோணர் இட்ட சாபம் போல் கடுமையாகக் கூறுகிறேன். என் விருப்பத்தை மீறிக் கலையைக் காசுக்கு நாசமாக்காதே..... கலை அழியும்; இன்று மெட்டிலே துள்ளி ஓடும் உன் விரல்கள் ஒரு மீட்டலில் உள்ளத்தைக் குளிர்விக்கும் விரல்கள். ஒரு நாள் உண்மையாகக் கலாதேவியின் பரிபூரண அனுக்கிரகத்துக்குப் பாத்திரமாகப் போகிறது. அந்தக் கரங்களைத் தெய்வத்தை வணங்க மட்டும் கூப்பிக் குவித்தால் நல்லது. அத்தனைதான் சொல்வேன்.......''

கலா தலைவணங்கினாள். வீட்டில் எல்லோரும் எதிர்த்தனர். அவள் முடிவை. ஆனால் குருவின் ஆணை. அவர் விரலை ஆட்டித் தடுத்த பாதை, விரல்கள் மீது இட்ட ஆணை. கலா மீற விரும்பவில்லை.

கூட்டத்தினர் 'கடகட'வென்று கைதட்டி ஆர்ப்பரித்தனர். 'ஆகா, என்ன பக்தி. அது தான் குருகுல வாசம். இல்லாவிட்டால் வித்தை பலிக்குமா ?' என்றனர். மெய் சிலிர்த்து ஒருகணம் நின்ற கலாவும் சமாளித்துக் கொண்டு தன் வீணை மேடையில் இருந்த பக்கம் நோக்கிக் கரம் கூப்பி வணங்கினாள்.

''அன்று ஆணையிட்டுச் சென்றவர்தான். அதன்பின் சுப்பிரமணியத்தைப் பற்றி எனக்கு ஒரு செய்திகூடத் தெரியவில்லை ! இடையே எங்கேயோ வாழ்க்கையின் அலைகளால் அலைக்கப்பட்டேன் நானும். ஆனால் என் இசை மட்டும் அப்படியே காற்றின் அலைகளில் பரவி இரசிகர்களின் உள்ளத்தில் தங்கி விட்டது. இன்னும் நான் தந்தியில் என் விரல்களை ஓடவிடும் போது எங்கோ உருவாக, அருவாக என் இசையைக் குருநாதர் கேட்கிறார் — இது நான் பழக்கிய விரல்கள் என்று ஆனந்தபரவசம் அடைகிறார். — என்று மானசீகமாக மகிழ்கிறேன். அந்த அவர் நினைவின் தூய நிழலில் நான் விரல்களை இயக்குகிறேன். என் கற்பனை அவர் ஆசியாக மலர்கிறது; துள்ளும் ஸ்வரங்களில் அவர் பேசுகிறார். இது அவர் தந்த செல்வம். அவர் கூலிக்குச் சொல்லிக் கொடுக்கவில்லை. நானும் வெறும் சிஷ்ய பாவத்துடன் மட்டுமின்றி அதை வரப்பிரசாதமாகவே ஏற்றேன்.

''அன்று என் பாதை பிரிந்திருந்தால், பணத்துக்காக என் தந்தையின் நண்பருக்குப் பணிந்திருந்தால் இன்று, சினிமா உலகில் கால் வைத்த பல பிரமுகர்களின் சமாதிக்கு மலர் தூவத்தான் இந்த விரல்கள் பயன் பட்டிருக்கும். அல்லது எனக்கும் அதே கதி வந்திருக்கும். அந்த அளவில் 'சினிமாக்காரி' என்று எனக்கு மக்கள் கூடலாம்! ஆனால் அது வெறும் 'கூட்டம்'தான்! ரசனையுள்ள நாலு பேர்கள், நல்லதொரு சங்கீதத்தை ஈசுவரார்ப்பணமான செல்வம் என்று வழிபடக் கூடிய நாலு பேர்கள் என்னைக் கௌரவித்தாலும் போதும். அதன் மதிப்பு பெரிது என்பது என் சித்தாந்தம். இப்போதும் வெளிநாடுகளுக்குச் செல்வது என்பது எனக்கு அத்தனை விருப்பமில்லைதான். நம் கலையின் நளினத்தை அவர்கள் எந்த அளவு உணர்வார்கள் என்பதிலும் ஐயம்தான். ஆனாலும் நம் நாட்டுக்கு, நம் போன்ற கலைஞர்களுக்கு ஒரு பெருமை தர, அங்கும் உள்ள நம் இந்தியச் சகோதரர்களுக்காக, என்னைப் பெற்ற பொன்னாட்டுக்கு ஒருகடமையாகத்தான் செல்கிறேன். இன்றும் என்னைப் பலர் சினிமாவிலும், பல விளம்பரங்களிலும் இழுத்துப் போட முயல்கின்றனர். ஆனால் அதோ என் கண்களுக்கு எதிரே எப்போதும் என் குருநாதரின் விரல்கள் 'மக்களின் தூய ரசனையைத் தவிரப் பணத்துக்குக் கலையை விற்காதே.....' என்று ஆணையிட்டு என்னைத் தடுத்தாட்கொள்கின்றன. அவருக்கு என் அஞ்சலியை மீண்டும் ஒரு முறை செலுத்தி அவர் ஆசியால் எனக்குக்

லைடத்த ரசிகப் பெருமக்களான உங்களே
யும் வணங்குகிறேன்......''

கலாவதி அமர்ந்தபின்னும் ஐந்து நிமிஷங்க
ளாயின கரகோஷம் அடங்க.

தலைமை வகிக்க வந்திருந்த மந்திரி தமது வழக்கமான பல்லவி பீடிகைகளுடன் பேச்சைத் தொடங்கினார். காரியதரிசி மாலையிட்டு அவருக்கு மரியாதை செலுத்தினார். இசைவாரசிக்குப் புகழ் மாலையுடன் அவர் பேச்சை முடிக்குமுன் காரியதரிசி மேடைக்குப் பின் ஓடினார், அடுத்துப் பேச விருந்த தேவ சேனாபதியை 'ரஸிகர்கள்' மத்தியிலிருந்து அழைக்க. ஆனால்.... ஆனால்.... முன்வரிசையில் இடமளித்தும் தம் நண்பர்கள் கோஷ்டியுடன் சற்றுத் தள்ளி அமர்ந்த அந்தப் பிரபல இசையமைப்பாளர் எங்கே? அவருக்கு என்ன கோபம்.... அதோ....!

''சார்... சார்....'' வாசல்புறத்தை வேகமாகக் கடந்த அவரைத் தேடிப் பிடித்து நிறுத்தினார் காரியதரிசி. அவர் மனத்தில் ஆயிரமாயிரம் பிதிகள். சினிமாவைப் பற்றி இப்படிப் பேசியிருக்கக்கூடாதுதான் கலைவாசி. அதுதான் தேவசேனாபதியின் கோபமோ ?

''சார். ஏதோ அவரவர் தன் தொழிலைப் பற்றி அப்படித்தான் பேசுவார்கள். அதற்காகத் தாங்கள் தவறாக எண்ணிக் கோபித்துக் கொள்ளக் கூடாது. வாருங்கள் சார்! ரசிகப் பெருமக்கள் ஏமாந்து விடுவார்கள், தங்களைக் காணாமல்......'' — காரியதரிசி அழைத்தார்.

''சே, அடடா! இதென்ன, காரியதரிசி சார், ஓர் அவசர காரியம் அதுதான்...'' வைர மோதிரம் டாலடித்த கைகளைக் கூப்பி விடைபெற முயன்றார் தேவசேனாபதி.

''அவரை அறிமுகம் செய்து கொள்ள விரும்பினீர்களே, சார்! சற்று அதிக நேரம் தான் அவர்கள் பேசி விட்டார்கள். தங்களுக்குத் தாமதமாகி விட்டது. இருந்தாலும் அதை நீங்கள் வேறுவிதமாக.....''

''அடடா.....! அபசாரம்! அவர்கள் பேச்சை நீங்கள் அப்படிக் கூறுவதா, காரியதரிசிவாள்! அது அத்தனையும் சாரம், சத்தியம். சார், அதன்பின் இனி என் பேச்சு எடுபட முடியாதுதான். மற்றொரு முறை வருகிறேன். தவிர திடீரென்று ஒரு மெட்டு நினைவு வந்தது மக்களின் கரகோஷ ஒலியில்! நாளை ரிக்கார்டாக வேண்டிய பாட்டு, தீபாவளி ரிலீஸ் படம். புறப்பட்டு விட்டேன், உடனே. நன்றி....வணக்கம்....''— காருக்குள் ஏறி அமர்ந்து கதவைப் படீரென்று சாத்திக் கொண்டார் தேவசேனாபதி. இது ஒரு விசித்திரப் பிரகிருதி! அல்லது கலைக்கு இதுவும் ஒரு திருக்கோலமா என்பது போல் திகைத்து நின்றார் காரியதரிசி!

டிரைவர் பாய்ந்து தன் ஸீட்டுக்குள் ஏறி அமர்ந்தான். கார் புறப்பட்டது.

சினிமா உலகில் மின்னுமளவு அந்தஸ்தும் பொருளாதாரமும் உயர்ந்துவிட்ட இசையமைப்பாளர் தேவசேனாபதியை ஆறேழு வருடங்கள் முன்வரை யார் அறிவார்? சினிமா உலகில் பலரைப் போலத் திடீரென்று உதித்த ஒரு தாரகை அவர். அவரை அன்றும் அறிந்தவர் இல்லை: நாளையும் நினைக்கப் போகிறவர் இல்லை. ஆனால் அன்றும் இன்றும் அறிந்தவர் மூன். அறிந்து வணங்குபவர் முன் தம்மை

• கோபத்தில் மனிதன் குரலை உயர்த்தும் பொழுது அவன் பெரும்பாலும் தாழ்ந்து போகிறான்.



• அறிவாளியை அறியாதவர்கள் என்று சாதிக்கும் முயற்சி முட்டாள்தனத்துக்குச் சரியான பாதுகாப்பு. - மயிலன்

அறிமுகம் செய்து கொண்டு வைரங்கள் மின்னும் கூரைபோடித் தடித்துவிட்ட தம் விரல்களை எடுத்துக் கரம் குவித்து வணங்க அவருக்கு என்ன உரிமை இருக்கிறது? என்ன அறிமுகம் வேண்டியிருக்கிறது?

வீணையை மீட்டும் கலாவின் விரல்கள். ''அதோ.... அதோ என் குருநாதரின் விரல்கள் என்னை ஆணையிடுகின்றன....'' என்று சுட்டிக் காட்டியதை நினைத்தார், மியூஸிக் டைரக்டர் தேவசேனாபதி.

ஆனால் இசையின் பிறப்பிடமான, தாய்மைக்குப் பிறப்பிடமான ஆதார சுருதியை மறந்த விரல்களும் அவையேதாம் என்பது யாருக்குத் தெரியும்? வீட்டில் தூசி படிந்து தந்தியறுந்து மூலையில் கிடக்கும் தம் வீணையை நினைத்தார் தேவசேனாபதி. அன்று அதை மீட்டிய அவரது விரல்கள் இட்ட ஆணையில் இன்று ஓர் ஆத்மா சங்கீதத்தின் ஜீவநாடியில் தெய்வீகமாக ஐக்கியமாகி விட்டது.

கார் ஓடிக் கொண்டிருந்தது. கலாவதி மானசீகமாகத் தன் குருவை வணங்கிவிட்டு வீணையைப் பிறந்த குழந்தை போல் அனுங்காது எடுத்து மடி மேல் இருத்தி விரல்களால் மீட்டுவதைக் கற்பனை செய்து பார்த்தார், சினிமா உலக இசையரசர் தேவசேனாபதி.

அவர் கண்கள் கலங்கி ஒரு சொட்டு நீர் விழிக் கடையில் தேங்கியது. அதை விரல்களால் அழித்தார் அவர். அந்த விரல்களை ஒரு கணம் நோக்கினார். ''குழந்தாய், உன் பாதை சரியானது என்று வாழ்த்தி ஆசி கூற 'டிப் டப்'பென்று ஆங்கில மெட்டு, ஹிந்தி ட்யூன், தமிழ்ப் பாட்டு என்று தாளமிட்டுக் கதம்ப இசையமைக்கும் இந்த விரல்களுக்கு இனி உரிமை இல்லை!..... என் அறிமுகம்கூட உனக்கு வேண்டாம்.''

அவள் நினைத்ததுபோல் அவர், உருவமாகவோ, அருவமாகவோ வாழ்த்தும் நல்ல தொரு குருநாதனுகவே அவளுக்கு இருக்கட்டும். அவளுடைய குரு இசைக் கலைஞர் சுப்பிரமணியம்தான். இது தேவசேனாபதி! இசையின் வெறும் கூடு!

மானசீகமாகத் தெய்வீகக் கலைக்குத் தலை வணங்கியவர், 'ரெண்டாரெண்டுக்கு ஓட்டு!' என்று கூசாமல் டிரைவருக்கு ஆணையிட்டார். கலாவதியின் விரல்கள் இசைகூட்டிய நேரத்தில், தமது விரல்களிடையே சிகரெட் புகையத் தம்மை மறந்து எங்கோ லயித்திருந்தார் அந்த ஆணையிட்ட விரல்களுக்குடையவர்!

# WATER SUPPLY
*in rural or urban areas*
# is not a problem
*when you install*
## MYERS Deepwell Ejecto Pump

**For continuous supply of cool, fresh water under pressure Myers EJECTO Pump has no equal.**

*Consider these advantages :-*

1. It supplies water directly from source to any desired point or points.
2. It can be installed at ground level.
3. It needs no overhead tank.
4. Its capacity of 300 to 5000 g.p.h. is suitable for most needs.
5. It works silently, efficiently, economically.
6. It is ideal for small industries, hotels, flats, etc.



## 4 good reasons why you should buy this pump:-

1. *Compact and simple.* Parts easily accessible for maintenance.
2. *Robust construction.* Pumps and parts guaranteed against faulty workmanship.
3. *Motor above ground level.* No danger of catching damp and burning out.
4. *Elimination of noise.* Noise-free operation is a great asset where large quantities of water have to be pumped daily.

*There are other*

**Myers** or **Wasp**

*Power Pumps & Hand Pumps, too.*

**WATER SUPPLY SPECIALISTS PVT. LTD.**

Kal-ma. 330, THAMBU CHETTY STREET

MADRAS-1

(WB-88A)

# பங்களூர்-சென்னை-டெலிபோன்

பங்களூரில் நடக்கும் 'நாய்க் கண்காட்சி'க்கு நானும் வந்து கலந்து கொள்ள வேண்டுமென்று பங்களூர் நண்பர் மிகவும் வேண்டிக் கொண்டார். நான், என் மனைவி, என் நாய் மூவரும் பங்களூருக்குக் காரில் புறப்பட்டோம்.

பங்களூர் போய்ச் சேர்ந்தோம். நாய்க்குக் கொண்டு வர வேண்டிய மாத்திரையை மறந்து விட்டதை நாயும் குரைத்துச் சொல்லியது. என் மனைவியும் குரைத்து நினைவூட்டினள். நான் எடுத்து வந்தால் மறதி காரணமாக எங்காவது வைத்து விடுவேன்; தானே கொண்டு வரும் பொறுப்பை ஏற்பதாக முடிவு செய்தாள். பங்களூர் வந்ததும் மாத்திரையைக் காணேம். அந்த மாத்திரை பங்களூர் மருந்துக்கடைகளில் கிடைக்காது. அதனைச் சென்னையிலுள்ள மிருக வைத்தியர் ஒருவர் சொந்தத் தயாரிப்புச் செய்கிறர். எனவே, கவலை எங்களுக்கு – நாய் தவிர்த்து இருவருக்கும் – எழுந்தது.

நண்பர், "இப்போதுதான் நேரிடையாக '014' வழியே சென்னைக்கு டயல் செய்யலாமே..... உங்கள் வீட்டுக்குள் யாராவது இருந்தால் கூப்பிட்டுக் கேட்கலாம். மாத்திரையை விமானம் வழி அனுப்பச் சொல்லலாம்" என்று யோசனை கூறினர். நாங்கள் வீட்டை விட்டுக் கிளம்பும்போது வேலையாளுக்கும் சமையல்காரிக்கும் விடுமுறை கொடுத்து விட்டோம். வீட்டைப் பூட்டிய பின்னர் பங்களூர் வந்து விட்டோம். எனவே, எங்கள் தெருவிலுள்ள நண்பரின் தொலைபேசி எண் என்னவென மனைவியைக் கேட்டேன் – மனைவியைக் கேட்காமல் எதையும் செய்வதில்லை. – 76141 என்றாள், என் மனைவி. பங்களூரிலிருந்து டெலிபோனை 014 சுழற்றினேன். பிறகு சென்னை எண்ணைச் சுழற்றினேன்.

"ஹலோ!" என்ற குரல் கேட்டது.

"நான்தான் பரமசிவம் – பங்களூரில் நடைபெறும் நாய்க் கண்காட்சிக்காக வந்திருக்கிறேன்..."

"உங்களுக்கு வெற்றி உண்டாகட்டும். நான் இந்த வீட்டாரின் மருமகள். – விருந்தாளி. எனக்கு உங்களை அடையாளம் தெரியாதே; இந்த வீட்டில் வேறு எவரும் இல்லை" என்று சென்னைக் குரல் பேசியது.

"நீங்கள் – வீட்டாருக்கு – அதாவது என் அருமை நண்பருக்கு மருமகள்தானே...? நான் கோரும் சிறு உதவியை நீங்கள் எனக்குச் செய்ய வேண்டும். என் வீடு அதே தெருவில் 33ம் நம்பர் வீடு."

"சரி."

"பூட்டியிருக்கும்."

"ரைட்."

"நாங்கள் நாய்க் கண்காட்சிக்காக வந்திருக்கிறோம். நாய்க்குத் தேவையான மாத்திரைப் பாட்டிலை அங்கு வைத்து விட்டோம், மறந்து போய்."

"சொல்லுங்கள் வாங்கி அனுப்புகிறேன். என் மாமனருடைய நண்பருக்கு இந்த உதவியை மனமுவந்து செய்கிறேன். மாத்திரை எங்கே இருக்கிறது?"

"இருங்கள்... இருங்கள்" என்றவன் மனைவியின் பக்கமாகத் திரும்பினேன். நான், "மாத்திரை எங்கே இருக்கிறது?" என்றேன். அவள் அடையாளம் சொல்ல ஆரம்பித்தாள். சென்னை நண்பர் எனக்காக டெலிபோனில் காத்துக் கொண்டிருக்கிறர். பேசுவதோ நேரடியான டிரங்கு டெலிபோன்!

"மாத்திரைதானே... முன் அறையில் ஊதா வர்ணம் அடித்த அலமாரியில் இருக்கும் அல்லது மூன்றாவது அறையில் என்னுடைய இரும்புப் பீரோவுக்கு அருகே உள்ள மஞ்சள் நிற பிஸ்கோத்து கைப் பெட்டியில் இருக்கும்..."

"டெலிபோனில்விவரம்சொல்லுகிறேன்!"

"முன் அறையைத் திறக்கும் சாவிக் கொத்து ரேடியோ வைத்துள்ள அறையின் மேஜை அறைக்குள் இருக்கும்..." என்று நினைவூட்டினள் இல்லத்தரசி.

"இதையும் சொல்கிறேன்."

என் மனைவி சொல்லிய சாவிகளின் சரித்திரத்தை டெலிபோனில் கூறி முடித்தேன். சென்னை அன்பர், "ஹலோ... வீட்டின் வெளி கேட் வாசல் கதவு இவ்விரண்டும் உங்கள் வீட்டுக்கு இருந்தால்—அவற்றைத் திறக்கும் கொத்துச் சாவிகள் எங்கே இருக்கின்றன? அதை முதலில் சொல்லுங்கள்" என்னும் சந்தேகத்தைக் கேட்டார். வெளி கேட் வாயில் கதவு இரண்டையும் திறக்காமல் முன் அறைக்குள் போக முடியாதுதானே!

"ஆமாம். அதே தெருக்கோடியில் நாயர் கடை இருக்கிறதல்லவா?"

"தெருவுக்கு இரண்டு கோடி இருக்கிறது. இரண்டு கோடியிலும் இரண்டு நாயர் கடை இருக்கின்றனவே..."

"ஓகோ... வடக்கேயும் – வடக்குத் திசையில் என்றுதான் நினைக்கிறேன் – மீசைக்காரக்













குண்டன் நாயர் தமது படம் ஒன்று மாட்டிய கடை இருக்கிறது. அங்கே இரண்டு சாவிகளையும் கொடுத்து வைத்திருக்கிறோம். பில்லார் பூட்டின் சாவி 'கேட்டு'க்கு உள்ளது. கெட்டிச் சாவி வீட்டின் வெளிக் கதவுக்கு உள்ளது. இவற்றால் ஒன்றன் பின் ஒன்றாகத் திறந்து உள்ளே போங்கள்.''

''ஆல்ரைட். அப்புறம்? முன்னறையைத் திறக்கும் சாவிக் கொத்து எங்கிருக்கிறது?''

''முன்னறைக்குள்ள சாவியும் மற்றைய அறைகளுக்குள்ள ஏனைய சாவிகளும் அங்கேயுள்ள கரி மூட்டைச் சாக்கின் அடியிலே பாருங்கள். சின்னப் பெருங்காய டப்பா ஒன்றிருக்கும். அதற்குள் சாவிகளைப் பத்திரமாக வைத்திருக்கிறோம்.''

சென்னை நண்பர் சிரித்தபடியே, ''ஓகோ! திருட்டுப் பயம்! திருடன் வீட்டுக்கு உள்ளே புகுந்தாலும் அவன் கண்ணில் சாவிக் கொத்துப் படாமல் இருப்பதற்காகவா இத்தனை முன் ஏற்பாடுகள்? பேஷ் பேஷ்'' என்று பாராட்டினார்.

''ஆமாம். நாயர் கடைக்குப் போய்ச் சாவி வாங்குங்கள். முதல் அறையின் வலது பக்கமுள்ள மாடிப் படிக்குச் செல்லும் பாதையடியில் — கரி மூட்டைச் சாக்கின் அருகாக இருக்கும் சாவிக்கொத்து. . எடுத்து...''

''புரிந்தது. முன் அறையில் ஊதா வர்ண அலமாரியிலோ அல்லது மூன்றாவது அறைக்குள் இருக்கும் இரும்புப் பீரோ அருகாக உள்ள பிஸ்கோத்துப் பெட்டிக்குள்ளோ மாத்திரை இல்லையென்றால் அவற்றை வேறு எங்கு தேடுவது? எப்படி அனுப்புவது...?''

''விமானத் தபாலில் பார்சல் வழியே அனுப்புவது. நீங்கள் தேடிப் போனால்... இருங்கள். மாத்திரை இருக்கக் கூடிய இடம் வேறு ஏதாவது உண்டா என்று நினைவு படுத்திப் பார்க்கிறேன்.''

டெலிபோன் வாயைக் கையில் பொத்திக் கொண்டு, என் மனைவியிடம், விவரம் கேட்டேன். அவள் சொன்னாள்: ''நிச்சயமாக முன்னறையிலும், என் அறையிலும் இல்லாவிட்டால், மாடியிலே உள்ள புத்தக அலமாரியின் அருகாகக் கிடக்கும் இரும்பு மேஜையின் வலது டிராயிலோ அல்லது இடது டிராயிலோ கண்டிப்பாக இருக்கும்'' என்று கூறி முடித்தாள்.

என் நினைவின் சக்தி மறந்து விடுமுன்னதாக பங்களூரிலிருந்து சென்னை அன்பருக்குச் சொல்லி முடித்தேன்... மாடியறைச் சாவிகளை எங்கு காண்பது என்று அவர் கேட்டார்.

''மாடி அறைச் சாவிதானே! ரொம்பச் சுலபம். மாடிப் படி ஏறி வந்ததும் நடுவிலே ஒரு படம் — அனுமார் படம் இருக்கும். அதன் பின்னால் மாடியறைச் சாவிகள் அகப்படும். அறையைத் திறந்து உள்ளே போனால்...''

''போகிறேன்.''

''போங்கள். அங்கே தடி தடியாகக் கட்டப் புத்தகங்கள் இருக்கின்றன. அவற்றுள் ஒரினல் லா புத்தகம்—பச்சைக் கவர் பைண்டில் உள்ளது. — அதிலே மேஜைச் சாவி இருக்கிறது'' என்றேன்.

''புரிகிறது... ஹலோ இருங்கள். என் மாமனார் இதோ வருகிறார். அவரிடம் எல்லாவற்றையும் மறக்காமல் வரிசையாக மீண்டும் ஒரு முறை கூறிவிடுங்கள். எனக்கு ஊர் புதிது. இடம் புதிது. நீங்களும் புதிது. உங்கள் பிரச்னைகளும் புதிது.''

''போனை அவரிடம் கொடுங்கள்.''

சென்னையில் உள்ள டெலிபோன் கைமாறும்போது கரகரப்பு உண்டாக்கிய ஒலி

விபத்து இன்சூரன்சு!
யாருக்கு?
எனக்கா!

ஒரு வேளை உங்களுக்குத் தேவைப படாமலிருக்கலாம். ஆனால் பிறருக்குத் தேவைப்படலாமல்லவா? விபத்து இன்சூரன்சு விவேகமுள்ள முன்னெச்சரிக்கையாகும். இடர்காப்பின்மைக்கு இடந்தர வேண்டாம். விபத்து மற்றும் பொது இன்சூரன்சுத் தேவைகள் அனைத்திற்கும் எல்.ஐ.சியோடு தொடர்பு கொள்க

**நெருப்பு • கப்பல் • மோட்டார் • விபத்து • பல்வேறு வகையான இன்சூரன்சுகள் •**



# பொது இன்சூரன்சிற்கு எல்.ஐ.சி.

நாடு முழுதும் 750 அலுவலகங்கள் மூலம் உங்களுக்குச் சேவை புரிகின்றது.

ASP/LIC/GN-5

நேரிடையாகப் பங்களூரில் உள்ள என் காதில் ஒலித்தது.

''ஹலோ.. நான்தான் சாமிநாதன்''- என்று எடுத்த எடுப்பில் முரட்டுக் குரல் கர்ஜித்தது.

''அது சாமிநாதனா...? வீட்டுச் சொந்தக்காரர் பெயர் ராமாமிருதம் ஆயிற்றே?''

''உங்களுக்குச் சென்னையில் எந்த டெலிபோன் நம்பர் தேவை...?''

''76141 எனக்குத் தேவை.''

''இது 71641. ராங் நம்பர் பிளீஸ்!''

''அது மயிலாப்பூர்தானே?''

''இல்லை... அபிராமபுரம்.''

''அட ஆண்டவனே!'' என்றேன்.

''பங்களூரில் அந்த ஆசாமியைத் தேடிப் பாருங்கள்!'' என்று சாமிநாதன் போனை வைக்கும் சத்தம் கேட்டது. என் மனைவியோ என் மனைவி என்பதை நிரூபிக்கிறாள்:

''என்ன? ராங் நம்பருக்கு டயல் செய்தீர்களா? சென்னையில்தான் அசட்டையாக ராங் நம்பர் டயல் செய்வீர்கள். அது உங்கள் பழக்கம். டிரங்கால் செய்யும்போதும் ராங் நம்பர் டயல் செய்யலாமா? டெலிபோன் இலாகாக்காரர்கள் டிரங்கால் கொடுத்தால் ராங் நம்பர் வருமோ? வராது. நேரடி டயலிங் லாபம் ராங் நம்பராக வந்தது! ஐம்பது ரூபாய் நஷ்டம்.'' என் மனைவி நண்பர் வீட்டில் இருக்கிறோம், விருந்தாளியாகத் தங்கியிருக்கிறோம் என்பதைக்கூட மறந்துபோய் என்னைத் திட்ட ஆரம்பித்தாள்.

''மாத்திரையை உன்னிடம் தந்தேன். நீ மறந்துபோய்ச் சென்னையில் வைத்துவிட்டு வந்திருக்கிறாய்.''

''தந்தீர்கள்... எடுத்து வைத்தேன்... ஆனால்...''

''கொண்டுவர நீ மறந்துவிட்டாய். நான் செய்த டயலிங்கைக் குறை சொல்லி என்ன பயன்?''

''நானே 76141க்கு நேரே டெலிபோன் பேசுகிறேன். என் கண்ணாடி எங்கே? நீங்கள் டெலிபோனை விட்டு...'' என்று கோபமாய்ப் பார்த்தாள்.

அவள் மூக்குக் கண்ணாடியை நான் எங்கே கண்டேன்? என் நாய் எங்கள் தவிப்பைப் புரிந்துகொண்டது. காருக்கு ஓடி பின் ஸீட்டுக்கு மேலாகக் கிடக்கும் கண்ணாடி உறையைக் கவ்விக் கொண்டு வந்தது. நாயைத் தட்டிக் கொடுத்தாள் என் மனைவி. என்னைத் திட்டித் தீர்த்தாள்.

கண்ணாடி உறையைத் திறந்தாள். என்ன ஆச்சரியம். வெள்ளைப் பொட்டலம் நாறு கீழே விழுந்தது. அத்தனையும் நாய்க்காகக் கொண்டுவந்த ஸ்பெஷல் மாத்திரைகள்!

''பார்த்தீர்களா! மறந்துவிடுவோம் என்பதற்காகப் பத்திரமாக மூக்குக் கண்ணாடிக் கூட்டுக்குள் எடுத்து வைத்திருக்கிறேன். கொண்டு வந்திருக்கிறேன்'' என்றாள். நாய்க்கு மாத்திரையைக் கொடுத்தோம். மறுநாள் வெற்றி நாய்க்கு. என் புகைப்படம் பங்களூர் பத்திரிகையில் இடம் பெற்றது!

போல் வலேரி என்கிற (1871-1945) ஃபிரெஞ்சுக் கவி எழுதிய:

## மாதுளை

மாதுளையைக் காணக் காண
எனக்கு ஒரு அறிஞனின் கோட்டைச்சுவர்
போன்ற புருவத்துக் கப்பால்
குமுறும் சிந்தனைகள் தோன்றும்.

சூரியனின் வெப்பம் ஏற ஏற
உன் அழுத்தம் அதிகரித்து மாதுளை
உடைந்து
ரத்தினப் பாளங்களை போல
உதிர்ந்து பரவக் கண்டேன்.

உலர்ந்த தங்கத் தாலான மாதுளை ஓடு
உன் புழுக்கம் தாங்காது உடைந்து
ரத்த ஆறாக ஓடுகிறது. (ரத்த)

என் உள்ளத்திலே, ஓ மாதுளையே!
உன் கட்டுக் கோப்பு பற்றிய
கனவுகள் எழுகின்றன. — மயன்

# விட்ட மேஜை

- ஜெனிவாக் கடிதம்
- வெண்ணிலவுப் பெண்ணரசி
- சுவையான கதையும் கட்டுரையும்

நமஸ்காரம்.

ஸ்ரீ சதாசிவம் அவர்களும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களும் அவர்களுடன் வந்த பிறரும் திட்டமிட்டபடியே செப்டம்பர் 20ந் தேதியன்று இங்கு சௌக்கியமாக வந்து சேர்ந்தார்கள். மதிய உணவு முடிந்து சற்றுச் சிரம பரிகாரமும் செய்து கொண்ட பிறகு உள்ளூர் நண்பர்கள் சிலரும் உடன் வர இன்டர்லேகனுக்குப் போய்ச் சேர்ந்தோம். இரவு அங்கேயே தங்கியிருந்து விட்டு மறுநாள் காலை ஜங்ஃபிராவுக்குப் பயணமானோம். இந்த இரண்டரை மணி நேரப் பயணம் மிக ரம்மியமாக இருந்தது. அன்று பளிச்சென்று வெய்யில் அடித்துக் கொண்டிருந்தது. குளிருக்கு இதமாக விளங்கிய அழகிய தினம். மலை உச்சியில் சில மணி நேரம் குதூகலமாகக் கழிந்தது. பனிக்கட்டி அரண்மனையைப் பார்த்தோம். வெண்பனி மீது நாய்கள் இழுத்துச் செல்லும் சக்கரமில்லாத வண்டிகளில் ஏறிச் சுற்றி வந்தோம். 'ஸ்பிங்ஸ்'ஸின் உச்சிக்குச் செல்ல நடந்தோம். பனியில் ஏறும்போது அடிக்கடி சறுக்கி விழுவதும் சிரிப்பதுமாக இருந்தோம் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? பந்து போல் பனியை உருட்டி ஒருவர் மீது ஒருவர் வீசுவது ஈங்கே அனைவருக்கும் பிடித்தமான விளையாட்டு.

மாலையில் ஜெனிவாவில் இந்திய 'கான்ஸல் ஜெனரல்' கே. பி. லூக்கோஸ் அவர்கள் அளித்த விருந்துக்குச் சரியான சமயத்தில் வந்து சேர்ந்து விட்டோம்.

செப்டம்பர் 22ந் தேதி மாலை 8:15 மணிக்குக் கச்சேரி ஆரம்பமாயிற்று. கச்சேரி நிகழ்ந்த கட்டிடம் கொள்ளாமல் மக்கள் நிரம்பி வழிந்தனர். இரண்டு மணி நேர இன்னிசையை மிகுந்த ஆர்வத்துடனும் திருப்தியுடனும் அனைவரும் அனுபவித்து மகிழ்ந்தனர். அடிக்கடி கைதட்டித் தங்கள் பாராட்டுதல்களைத் தெரியப்படுத்தினர். உள்ளூரில் இருக்கும் இந்தியர்கள் மட்டுமின்றி ஸ்விஸ் நாட்டவர் பலப்பலரும் வந்திருந்தார்கள், கச்சேரியைக் கேட்க. பத்திரிகையாளர்களும் இருந்தனர். ஜெனிவாவில் இயங்கும் 'இந்திய அசோஸியேஷன்' சார்பில் டாக்டர் எம். பி. ஸர்வாடே நன்றி கூறினார். டாக்டர் ஸர்வாடே, 'சர்வதேச டெலிகம்யூனிகேஷன் சங்க'த்தின் தலைவராவார். கச்சேரி செய்த ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்கும் பிறருக்கும் நன்றி கூறியதுடன் அவர்களது ஐரோப்பிய, அமெரிக்க சுற்றுப் பயணம் வெற்றிகரமாக நிறைவேற வாழ்த்தினார்.

ஸ்ரீ சதாசிவம் தம்பதியரும் உடன் வந்த பிறரும் ஜெனிவாவில் தங்கியிருந்த தினங்களை வெகுவாக ரசித்தார்கள் என்றே நம்புகிறோம். தாய்நாட்டிலிருந்து பல்லாயிரக் கணக்கான மைல்கள் தொலைவில் இருக்கும் என் போன்றோருக்கு — இந்தியக் கலை நிகழ்ச்சிகளிலிருந்து பல வருஷங்கள் வரை பிரிந்து நிற்கும் என்போன்றோருக்கு — ஸ்ரீமதி எம். எஸ்ஸின் அன்றையக் கச்சேரி எந்த அளவுக்கு மகிழ்ச்சியைத் தந்தது என்பதைச் சொல்லி மாளாது.

ஜெனிவா, எஸ். சிதம்பரநாதன்,
28–9–66 காரியதரிசி,
இந்தியன் அசோஸியேஷன்

அக்டோபர் 2ந் தேதி இதழில் அமரர் லால்பஹாதூர் பற்றிய கட்டுரையைத் தேடித் தேடிப் பார்த்து ஏமாற்றம் கொண்டேன்.

நெல்லிக்குப்பம்,
30–9–66 ஆர். வேங்கடராமன்

LDT தத்துக்கொரு முறைதான் வானில் முழு நிலவைக் காண முடியும். ஆயினும் கல்கி இதழில் இனி வாரத்துக்கொரு முறை 'வெண்ணிலவுப் பெண்ணரசி'யைப் பார்க்க இயலும். மறுபடியும் எழுத்துலக வெண்ணிலவு 'சோமு' அவர்களின் கற்பனை ஓவியங்களைக் கல்கி இதழ் தாங்கி வருவது வாசகர்களின் பெறற்கரிய பேறாகும். 'ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்பதற்கேற்பச் சரித்திர நவீனத்தின் உத்திகளை முதல் அத்தியாயத்திலேயே தொடங்கி வைத்துவிட்டார் ஆசிரியர். வேலவன் கோதையைச் சமணக் குகையில் சந்திக்கப் போகிறேனா, அல்லது அவன் கடம்ப அரசனைக் காணப் போகிறானா? அன்றி நீலவல்லியின் கன்னி மாடத்துக்குச் செல்வானா? — இப்படிப்பட்ட வியப்பில் ஆழ்த்தி நிறுத்தியிருக்கிறார்.

தியாகராய நகர்,
30–9–66 மதி. சீனிவாசன்

"விண்ணவர் போற்றும் அண்ணலின் வாழ்விலே" கட்டுரை சுவையாக இருந்தது. அண்ணலாரை மண்ணவர் மறந்துவிட்டனரோ என்றுள்ள இன்றைய நிலையில் 'விண்ணவர் போற்றும்' என்று கட்டுரைத் தலைப்பு கொடுத்துள்ளது வெகு பொருத்தம்.

சென்னை,
2–10–66 வி. ச. வாசுதேவன்

எல்லாக் கதைகளும் மனிதர்களையே சுற்றி வரும்போது ஜெகசிற்பியன் அவர்கள் ஒரு பல்லி, அதுவும் ஒரு நொண்டிப் பல்லியின் வாழ்க்கையைச் சித்திரித்துள்ளார். புதுமையான முயற்சி. எவ்வளவு புகழ்ந்தாலும் தகும்.

மதுரை–2
3–10–66 எஸ். சௌமியன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

## உங்களுடைய கேசம் ஆரோக்கியமாகவும் பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

## தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!




**பிரில்க்ரீம் மட்டுமே**

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்கியமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, சேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.

**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலக முழுவதிலும் லக்ஷகணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

*B/P/1/P/1/65 TM*

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon